# சுந்தர காண்டச் சுரங்கம்

ஆராய்ச்சி அறிஞர்
முனைவர் சுந்தரசண்முகனார்
தமிழ்-அகராதித் துறைப் பேராசிரியர் (ஓய்வு)
புதுச்சேரி-11.



வானதி பதிப்பகம்
13.தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

# பதிப்புரை

தமிழன்னைக்குக் கம்பர் சூட்டிய மணிமகுடம்தான் கம்பராமாயணம். கதை பற்றிய கருத்துகள் பல இருப்பினும் கம்பனின் கவிநயத்தை, சொல்லாட்சியை, காவியப் போக்கைக் கண்டு களிப்படையாத உள்ளம் இல்லை என்றே சொல்லலாம்.

கம்பராமாயணம் கற்போரின் உள்ளத்திற்கேற்ப, உணர்வுகளுக்கேற்ப வழங்கக் கூடிய ஒரு காவியச் சுரங்கம்.

ஆறு காண்டங்கள் உள்ளடங்கிய அந்தச் சுரங்கத்தில் 'சுந்தர காண்டம்' அனைவராலும் விரும்பிப் போற்றக் கூடிய சிறப்புடையதாகும். எனவேதான் அதனை ஆழ்ந்து அகழ்ந்து அரிய பல கருத்துகளைப் பதினாறு தலைப்புகளில் 'சுந்தர காண்டச் சுரங்கம்' எனும் இந்த நூலில் தந்துள்ளார் ஆசிரியர் முனைவர் சுந்தர சண்முகனார் அவர்கள்.

இந்நூலை வெளியிட உதவிய புதுவைக் கம்பன் கழகத்தார்க்கும், அதன் செயலாளர் கம்பவாணர் அ. அருணகிரி அவர்களுக்கும், நூலாசிரியர் முனைவர் சுந்தர சண்முகனார் அவர்களுக்கும், அழகுற அச்சிட்டுத் தந்த ஸ்ரீகோமதி அச்சகத்தாருக்கும் நன்றி.

பதிப்பாளர்

# பொருளடக்கம்

# முன்னுரை

புதுவைக் கம்பன் கழகச் செயலாளர் புலவர் கம்ப வாணர் உயர்திரு அ. அருணகிரியவர்கள், கம்பராமாயணம் தொடர்பாக ஒரு நூல் எழுதித் தரும்படி என்னிடம் கேட்டார்கள். அதன்படி, கம்பராமாயணத்தில் எனக்கு மிகவும் பிடித்த சுந்தரகாண்டம் பற்றி எழுதி இந்நூலை உருவாக்கினேன்.

கம்பராமாயணம் மிகவும் சிறந்த கருத்துகள் அடங்கிய ஒரு சுரங்கம்; அதிலும், சுந்தர காண்டம் மிக உயர்ந்த கருத்துகளை உள்ளடக்கிய மாபெருஞ் சுரங்கப் பகுதியாக உள்ளது. அந்தச் சுரங்கத்திலிருந்து சில கருத்துப் பொருள்களை எடுத்து விளக்கி அக் கருத்துப் பொருட்கட்கு இந்நூல் வடிவம் தந்துள்ளேன்.

கம்ப ராமாயண ஓலைச் சுவடிகள் இருநூற்றுக்கும் மேல் உள்ளன. கம்பராமாயணத்தைப் பலர் பதிப்பித்துள்ளனர். பதிப்புக்குப் பதிப்பு வேறுபாடுகள் உள்ளன. அவற்றுள், எஸ். இராஜம் அவர்கள், பதிப்பாசிரியர் குழு அமைத்துப் பல படிகளையும் ஆராய்ந்து ஒப்பு நோக்கச் செய்து, மர்ரே அண்டு கம்பெனி—சென்னை என்னும் நிறுவனத்தின் வாயிலாக வெளியிட்டுள்ள பதிப்பையே, என் நூலுக்கு அடிப்படை ஆதாரமாகக் கொண்டு எழுதியுள்ளேன்.

யான் இப் பதிப்பினைத் தேர்ந்தெடுத்ததற்கு உரிய காரணம், தமிழ் யாப்பிலக்கணம் அறியாதாரும், எளிதில்

படித்துப் பொருள் புரிந்து கொள்ளும்படி சொற்களைப் பிரித்து அமைத்துப் பதிப்பித்திருத்தலேயாகும். மற்றும், இம்மலிவுப் பதிப்பே பலராலும் வாங்கப்பட்டிருக்கும்; என் நூலோடு ஒத்திட்டுப் பார்க்க உதவும்.

மலரை இதழ் இதழாகப் பிய்த்தும் கசக்கியும் நுகர்வது பொருந்தாது என்பது அடியேனுக்கும் தெரிந்த செய்தி தான். இருப்பினும், எல்லோரும் படித்து இன்புறும்படி இப்படியொரு பதிப்பும் இருக்கலாமே! யாப்பிலக்கண வல்லுநர்கள் சுவைக்கும்படியாக வேறு சில பதிப்புகள் உள்ளனவே! அவர்கட்கு அவை சாலும்!

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தார் குறிப்புரை யுடன் வெளியிட்டுள்ள பதிப்பில், முதலில் பாடல்களைச் சொல் பிரிக்காத வடிவத்தில் தந்து, பின் அதன் பக்கத் திலேயே, சொல் பிரித்த வடிவத்தையும் தந்துள்ளனர். இதன் நோக்கம் என்ன? எல்லாரும் படித்து எளிதில் பொருள் உணர்ந்து சுவைக்க வேண்டும் என்பது தானே!

இடையிடையே யான் தந்துள்ள பாடல் எண்கள் 'மர்ரே' பதிப்பில் உள்ளவாறாகும். படல அமைப்பும் அன்னதே.

எனது இந்த நூல், கம்ப ராமாயண முழுநூலையும் பற்றியதில்லையாதலின், கம்பர் வரலாறு பற்றியோ-காலம் பற்றியோ யான் ஒன்றும் கூறவில்லை.

என்னைத் தூண்டி இப்படியொரு நூலை எழுதச் செய்த நண்பர் உயர்திரு அருணகிரி அவர்கட்கு மிகவும் நன்றி செலுத்துகிறேன். இதைக் கம்பன் கழக அனுமதி யுடன் வெளியிட்ட வானதி பதிப்பகத்தாருக்கு என் நன்றியும் வாழ்த்தும் உரியன. வணக்கம்.

சுந்தர சண்முகன்

# தோற்றுவாய்

கம்பராமாயணத்தில் பாலகாண்டம், அயோத்தியா காண்டம், ஆரணிய காண்டம், கிட்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், யுத்த காண்டம்—என ஆறு பிரிவுகள் உள்ளன. இந்தக் காண்டப் பெயர்கள் வால்மீகி தம் இராமாயண நூலில் வைத்த பெயர்கள். இந்த ஆறனுள் இங்கே எடுத்துக் கொண்டது சுந்தர காண்டம் மட்டு மாகும்.

பால காண்டம், பருவத்தால் பெற்ற பெயர்; அயோத்தியா காண்டம், ஆரணிய காண்டம், கிட்கிந்தா காண்டம் என்பன செயல் நிகழ்ந்த இடத்தால் பெற்ற பெயர்களாகும். யுத்த காண்டம், செயலால்—வினையால் பெற்ற பெயராகும். சுந்தர காண்டம் எதனால் பெற்ற பெயராகும்?

**பெயர்க் காரணம் :**

சுந்தரம் என்பதற்கு அழகு, இனிமை, நன்மை என்றெல்லாம் பொருள் உண்டு. எனவே, அழகிய காண்டம் என்னும் பொருளில் இப்பெயர் வந்ததாகப் பெரும்பாலார் பெயர்க்காரணம் கூறுகின்றனர். யாருடைய அழகைப் பற்றியது இக்காண்டம்? பால காண்டத்தில்,

''தோள் கண்டார் தோளே கண்டார்;
தொடு கழல் கமலம் அன்ன
தாள்கண்டார் தாளே கண்டார்;
தடக்கை கண்டாரும் அஃதே.''
—உலாவியற் படலம்—19

''ஐயோ இவன் அழகென்பதோர் அழியா
அழகுடையான்''

என்றெல்லாம் இராமரின் அழகும் சில பாடல்களில் சீதையின் அழகும் புனையப்பட்டுள்ளன. இந்த அழகினும் சுந்தர காண்டத்தில் யாருக்கு என்ன அழகு சொல்லப்பட்டுள்ளது! பாடல்களின் இனிமைச் சுவையால் பெற்ற பெயர் எனின், கம்பரது எல்லாக்காண்டங்களுமே இனிமைச் சுவை உடையனவே! ஏதேனும் ஒரு பெயர் வைக்கவேண்டுமே என்பதற்காகப் பொதுவாகச் சுந்தர காண்டம் என்னும் பெயர் வைக்கப்பட்டதாகக் கூறவும் முடியாது. பின், பெயர்க் காரணம் யாதாயிருக்கலாம்?

அனுமனுக்குச் சுந்தரன் என்ற பெயர் ஒன்று உண்டு; இக்காண்டம் முழுவதும் அனுமனின் திருவிளையாடல்களே கூறப்படுதலின், சுந்தர காண்டம் என்னும் பெயர் வைக்கப்பட்டதாகச் சிலர் கூறுகின்றனர். இப்பெயர்க் காரணத்தைப் பலரும் உறுதியாக ஏற்றுக்கொண்டதாகத் தெரியவில்லை.

சுந்தரன் என்று குறிக்கப்பெறும் அனுமனின் பெயர் பற்றியே காண்டப் பெயரும் தரப்பட்டது—என்னும் கொள்கை உண்மையாயின், அதுவே பொருத்தமானதாகத் தெரியும். ஏனெனில், சுந்தர காண்டத்தின் முதல் படலத்திலிருந்து இறுதிப்படலம் வரையும் அனுமனின் செயல்களே பேசப்பட்டுள்ளன. எனவே, செயல் நிகழ்த்தியவர்

பெயரால் இப்பெயர் தரப்பட்டது என்பதே பொருத்தமான பெயர்க் காரணமாக இருக்க முடியும். இதில் ஐயம் கொள்பவர்கள், மற்றொரு முறை சுந்தர காண்டத்தைப் படித்துப் பார்க்கலாம்.

**உட்பிரிவு :**

வால்மீகி தம் காண்டங்களின் உட்பிரிவுகட்குச் சருக்கம் என்னும் பெயர் ஈந்துள்ளார்—கம்பர் தம் காண்டங்களின் உட்பிரிவுகட்குப் படலம் என்னும் பெயர் தந்துள்ளார். கம்பரின் சுந்தர காண்டத்தில் பதினான்கு பிரிவுகள் உள்ளன. அவை :—

1. கடல் தாவு படலம்
2. ஊர்தேடு படலம்
3. காட்சிப் படலம்
4. உருக்காட்டுப் படலம்
5. சூடாமணிப் படலம்
6. பொழில் இறுத்த படலம்
7. கிங்கரர் வதைப்படலம்
8. சம்பு மாலி வதைப்படலம்
9. பஞ்சசேனாபதிகள் வதைப்படலம்
10. அக்ககுமாரன் வதைப் படலம்
11. பாசப் படலம்
12. பிணி வீட்டுப் படலம்
13. இலங்கை எரியூட்டுப் படலம்
14. திருவடி தொழுதபடலம்

இந்தப் பதினான்கு படலங்களிலும் அனுமனே சுற்றிச் சுழல்கிறான்.

**வேறுபாடுகள்:**

கம்பராமாயணத்தில் சில படலங்கட்கு வேறு பெயர்கள் தரல், ஒரு பதிப்பாளர் ஒரு படலத்தில் அமைத்திருக்கும் பாடல்களுள் சிலவற்றை வேறொரு பதிப்பாளர் அப்படலத்தின் இறுதியிலும், சிலவற்றைத் தொடக்கத்திலும்

தரல், பாடல்களிலே சில அடிகளும் சில தொடர்களும் சில சொற்களும் பதிப்புக்குப் பதிப்பு வேறுபட்டிருத்தல், பாடல் களின் எண்ணிக்கையில் ஏற்றத் தாழ்வு உள்ளமை, சில பதிப்புகளில் இல்லாத பாடல்கள் வேறு பதிப்புகளில் உள்ளமை—அதாவது—சில பதிப்புகளில் உள்ள பாடல்கள் வேறு பதிப்புகளில் இல்லாமை முதலிய பல வேறுபாடுகள் கம்பராமாயணப் பதிப்புகளில் உள்ளன. சுந்தர காண்ட மும் இதற்கு விதி வில்க்கு அன்று.

கம்ப ராமாயணம் பதினாயிரத்திற்கும் மேற்பட்ட பாடல்களை உடைமையால், இடத்திற்கு இடம்—ஆளுக்கு ஆள் சுவடிகளைப் பெயர்த்தெழுதும் போது இவ்வாறெல் லாம் வேறுபடுவதற்கு வாய்ப்பு உண்டு. இடைச் செருக லாகச் சில பாடல்கள் சிலரால் சேர்க்கப்பட்டிருப்பதாகவும் ஒரு கருத்துக் கூறப்படுகிறது. இருநூற்றுக்கும் மேற்பட்ட சுவடிகள் இருத்தலின், சுவடிக்குச் சுவடி குழப்பம் ஏற்பட் டுள்ளது. இவை யெல்லாம், கம்பராமாயணம் ஒரு காலத்தில் நாடு முழுவதும் பரவலாகப் பயிலப்பட்டது என்னும் உண் மையை அறிவிக்கின்றன.

**சுந்தர காண்டப் பயிற்சி :**

கருடாழ்வாரைப் பெரிய திருவடி என்றும், அனுமனைச் சிறிய திருவடி என்றும் வழங்குவது மரபு. அனுமனுக்குப் பல ஊர்களிலும் கோயில்கள் உள. இராமாயணக் கதை மாந்தருள், இராமன்—சீதைக்கு அடுத்தபடியாக அனு மனுக்கே சிறப்புப் பெருமையும் தெய்வத்தன்மையும் இருப்ப தாக நம்பி மக்கள் அனுமனை வழிபடுகின்றனர். ஊரில் எளிய ஒரு குரங்கு இறந்து விடினும், ஊரார் அதனைத் தெய்வப் பெருமையுடன் நல்லடக்கம் செய்வர். அது செய்த அட்டூழியங்களை யெல்லாம் இறந்த பின் மறந்து அதற்குத் தெய்வத் தன்மை ஏற்றி விடுகின்றனர்.

இந்த அடிப்படையில், இராமாயணம் படிப்பவர்களுள், முதலில் சுந்தர காண்டத்தைப் படிப்பவர்கள் உளர். எனவே, இராமாயணக் காண்டங்களுள் சுந்தர காண்டம் ஒரு தனிச் சிறப்பு வாய்ந்ததாகக் கருதப்படுகிறது.

**கம்பரும் வால்மீகியும்:**

வால்மீகி இராமாயணத்தின் வழி நூலே கம்பராமாயணம். எனினும், கம்பர் வால்மீகியினும் சிற்சில வேறுபாடுகள் கொண்டுள்ளார். வால்மீகி அடிப்படையையே ஆட்டங்காணச் செய்துள்ளார்; கம்பர் அதனைச் சரி செய்துள்ளார். அதாவது—வால்மீகி இராமனையும் சீதையையும் மக்களாகவே கொண்டுள்ளார். கம்பரோ இருவரையும் திருமால்—திருமகள் ஆகியோரின் தெய்வப் பிறவிகளாகக் கொண்டுள்ளார். அதற்கேற்பக் கதை அமைத்துக்கொண்டு போகிறார். ஒன்றே ஒன்று பார்ப்போமே! இராவணன் சீதையை உடலைப் பிடித்துத் தூக்கிக்கொண்டு போனதாக வால்மீகி வம்பு செய்துள்ளார். கம்பரோ, சீதை இருந்த குடிலை அகழ்ந்து, சீதையைத் தீண்டாமல் குடிலோடு தூக்கிக்கொண்டு சென்றதாகக் கூறித் தமிழ் கற்றவர்களை ஏமாற்றியுள்ளார்.

கதையின் இடையிடையேயும் இருவர்க்கும் சிறு சிறு மாறுதல் உண்டு. அவர் சொன்னதை இவர் விட்டிருப்பார்—அவர் சொல்லாததை இவர் சொல்லியிருப்பார். புனைவுகளில் இருவரிடையேயும் ஏற்றத்தாழ்வுகள் இருக்கும். இனிச் சுந்தர காண்டத்திற்கு வருவோம்.

தன்னிடம் வந்து கெஞ்சிய இராவணனுக்கும் தனக்கும் இடையே ஒரு துரும்பைக் கிள்ளி வைத்துச் சீதை பேசியதாகவும், நீ இணங்காவிடின் உன்னை அடுக்களைக்கு (சமையலுக்கு) அனுப்பி வெட்டி (சூப்பு-குருமா) உணவுப் பொருளாக்கி உண்போம் என்று சீதையிடம் இராவணன் கூறியதாகவும், சீதையிடம் கெஞ்ச வேண்டாம் என

இராவணனின் இரண்டாம் மனைவியாகிய தான்ய மாலி என்பவள் கூறி அவனை அழைத்துச் சென்றதாகவும் வால்மீகி கூறுகிறார்.

கம்பரிடம் இம்மாதிரியான செய்திகளைக் காண வியலாது. அவர், தரக் குறைவான செய்திகளையும் சிறிது நாகரிகப்படுத்திக் கூறுவார். அரக்கியர்களை வால்மீகி மட்டப்படுத்திய அளவு கம்பர் செய்யவில்லை.

**சுரங்கம் :**

கம்பரின் சுந்தர காண்டம் ஒரு பெரிய சுரங்கம். அதில் புகுந்து மேலும் மேலும் அகழ்ந்து வைரமும் பொன்னும் வாரிக்கொண்டு வருவதென்பது எளிய செயல் அன்று. ஏதோ இயன்ற வரை இச் சுரங்கத்திலிருந்து பதினாறு வகைப் பொருள்கள் அகழ்ந்தெடுத்துத் தரப்பட்டுள்ளன.

இனிச் சுரங்கப் பொருள்களை — ஒவ்வொன்றாகத் தொடர்ந்து காண்பாம்.

# 1. கற்பனை நயச் சிறப்புகள்

இலக்கியம் எனில்,கற்பனை அதில் கட்டாயம் இருக்கும். கம்ப ராமாயணம் போன்ற வரலாற்று இலக்கியங்களில் கற்பனை இல்லை எனில், அவை இலக்கிய நூல்களாகக் கருதப்படாமல் வரலாற்று நூலாகவே கருதப்படும். கம்ப ராமாயணமோ கற்பனை கலந்த வரலாற்று இலக்கிய மாகும்.

மற்றோர் உண்மையையும் இங்கே ஒத்துக் கொள்ளத் தான் வேண்டும். ஏறத்தாழ இன்றைக்கு (1989) இரண்டா யிரம் ஆண்டுக்கு முற்பட்டனவாகக் கூறப்படும் கழக (சங்க) இலக்கியங்களில், கம்ப ராமாயணம் போன்ற நூல்களில் உள்ள கற்பனைகள் போன்றவை இல்லை. கழக இலக்கியங் களில், அண்டப் புளுகுகள்—ஆகாயப் புளுகுகள் இன்றி, ஓரளவு இயற்கையோடு தோய்ந்த கற்பனையே இருக்கும்.

பசு பால் தரும்; பால் வெள்ளையாயிருக்கும்—என்பதில் கற்பனை இல்லை. எவ்வளவு தண்ணீர் ஊற்றினும் பால் வெண்மையா யிருக்கும்; கறுப்பு மாட்டுப் பாலும் சிவப்பு மாட்டுப் பாலுங்கூட வெண்மையாகவே இருக்கும்— என்பது, ஓரளவு இயற்கையை ஒட்டிய கற்பனை எனலாம். கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை பாடியுள்ள,

> "பச்சைப் புல்லைத் தின்று வெள்ளைப்
> பால்தர நீ என்ன
> பக்குவம் செய்தாய் அதனைப்
> பகருவையோ பசுவே" (மலரும் மாலையும்—பசு)

என்னும் பாட்ல் இயற்கையை ஒட்டிய கற்பனையாகும். அடுத்து, கழக இலக்கியங்களில் ஒன்றான அகநானூறு என்னும் நூலில் உள்ள ஒரு பாடலில் வற்றிய குளம் ஒன்று இயற்கைக் கற்பனையால் சொல்லோவியப் படுத்திக் காட்டப் பட்டுள்ளது:

"கடுமையாகக் கோடைக்காலம் நீண்டு கொண்டிருக் கிறது. நாட்டில் கடுமையான கருப்பு (பஞ்சம்) வருத்து கிறது. வயலில் உழவேண்டிய ஏர் கலப்பை தூங்கிக் கொண்டிருக்கிறது. பசுமை என்பதே அற்று விட்டது. ஒரு பெரிய குளம் வெப்பத்தால் சுடுகிறது. (உள்ளே ஈர நெல்லைக் கொட்டிக் காய வைக்கலாம் போலும்) அக்குளத்திற்குள்ளே வெற்றுத் தரையைத் தவிர வேறு ஒன்றுமே இல்லை. "அற்ற குளத்தில் அறுநீர்ப் பறவை போல்" என்பதற்கு ஏற்ப ஒரு பறவையும் அங்கு இல்லை. குளத்தின் கரையோ ஒரு குன்றைப் போல் உயர்ந்துள்ளது" —என்று குளம் ஓவியப்படுத்தப்பட்டுள்ளது.

இந்த ஓவியக்கற்பனை எதற்காகக் கூறப்பட்டுள்ளது? தலைவிக்குத் திருமணம் கூடிவிட்டது என்று தோழி அவளிடம் கூறுகிறாள். இது தாய் வாயிலாகத் தோழி கேட்டறிந்த செய்தி, இத்தகைய குளம் நிறையப் பெரு மழை பெய்த மறுநாள் காலை மக்கள் பலரும் அடையக்கூடிய மகிழ்ச்சி எவ்வளவோ—அவ்வளவு மகிழ்ச்சியைத் திருமண உறுதி கேள்விப்பட்டு யான் பெற்றேன்— என்று தோழி தலைவியிடம் கூறுகிறாள்.

இங்கே, மழையின் மிகுதியைக் கற்பனை செய்து காட்டுவதற்காகக் கோடையும் குளத்தின் நிலைமையும் கற்பனைசெய்து காட்டப்பட்டுள்ளது. இது பற்றிய அகநானூற்றுப் பாடலிலிருந்து சில அடிகள் வருமாறு:—

"....நாடு வறங்கூர நாஞ்சில் துஞ்சக்
கோடை நீடிய பைது அறுகாலை
குன்றுகண்டன்ன கோட்ட, யாவையும்
சென்று சேக் கல்லாப் புள்ள, உள்இல்
என்றூழ் வியன்குளம் நிறைய வீசிப்
பெரும் பெயல் பொழிந்த ஏம வைகறை
பல்லோர் உவந்த உவகை எல்லாம்
என்னுள் பெய்தந் தற்றே தோழி..."

என்பது புலவர் கபிலர் பாடிய (42:5—12) பாடல் பகுதி. நாஞ்சில் (கலப்பை) துஞ்சுகிறதாம் (தூங்குகிறதாம்); கோடை நீண்டுவிட்டதாம்; பசுமை முற்றிலும் அற்று விட்டதாம்; குன்று கண்டாற்போன்ற கோட்ட (கரையை உடைய) குளமாம்; யாவையும் சென்று சேக்கல்லாப் புள்ள (பறவைகள் இல்லாத குளமாம்; உள்இல் குளமாம்; என்றூழ் (வெப்பமான) குளமாம்; வியன் (பெரிய) குளமாம். இத்தகைய கோடையில் இத்தகைய குளம் நிறையும் படி பெய்த மழை எவ்வளவோ மிகுதியாய் இருக்க வேண்டுமல்லவா? நீர் அற்ற குளத்தின் கரை குன்றுபோல் மிக உயரமாகத் தோன்றும். சுற்றிலும் கரை உயரமாயிருப்பதால் வெளியிலிருந்து தண்ணீர் உள்ளே வருவதற்கில்லை. துளித்துளியாய் உள்ளே விழுந்த தண்ணீரே குளத்தை நிறைத்துவிட்டதாம்.

பெரும்பாலும் இத்தகைய இயற்கைக் கற்பனை ஓவியங்களையே கழக இலக்கியங்களில் காணலாம். இங்கே இல்லாததைச் சொல்லவில்லையே—இதை எவ்வாறு கற்பனை என்று கூற முடியும்? ஓ. அதுவா? ஏர் கலப்பை தூங்குகிறது என்பதே ஓர் இயற்கைக் கற்பனைதானே! பெரிய குளம் நிறைய மழை பெய்தது என்று சொன்னால் போதுமே! ஆனால், குளத்தைப் பற்றி இவ்வளவு கூறியிருப்பது ஓர் இயற்கைக் கற்பனை ஓவியந்தானே!

எனவே, கற்பனை என்பது, இவ்வளவு சொன்னால் போதும் என்ற அளவுக்குமேல், இன்னும் சிறிது கூட்டியோ —புதுக்கியோ—அழகுபடுத்தியோ— நயப்படுத்தியோ— கூறுவது என்பது புலனாகும்.

எல்லாம் வளர்வது போலக் கற்பனையும் கம்பன் காலமாகிய இடைக் காலத்திலும் அதற்கும் பிற்காலத்திலும் வளர்ச்சி பெற்று—அதாவது—பெரிது படுத்தப்பட்டு—உண்மைக்கு மேலும் புனைந்துரைக்கப் பட்டு, 'அண்டப்புளுகு—ஆகாயப் புளுகு' என்ற நிலையை அடைந்து விட்டது. இந்த அடிப்படையுடன் கம்பனது கற்பனை நயத்திற்கு வருவோமாக.

## மயேந்திர மலை

சீதையைத் தேடத் தெற்குப் பக்கல் அனுப்பப்பட்ட அனுமான், இக்கரையில் உள்ள மயேந்திர மலையிலிருந்து அக்கரையில் உள்ள இலங்கைக்குத் தாவுகின்றான். நீளத் தாண்டுதல் (High Jumb) செய்பவர்கள் முதலில் கீழே வன்மையாக ஊன்றித்தானே பின்னர் மேலே உந்தி எழுந்து தாண்டுவார்கள். அதுபோல அனுமன் மயேந்திர மலையை அழுத்தி ஊன்றி மேலே எழும்பினான். அப்போது மயேந்திர மலையிலும் சுற்றுப் புறத்திலும் நிகழ்ந்த மாற்றங்களைக் கம்பர் மிகவும் அழகாக—சுவையாகக் கற்பனை செய்துள்ளார். வருமாறு:—

1. அனுமன் ஊன்றி எழுந்தபோது மலை குலுங்கின குலுக்கத்திலே, புற்றுக்குள்—வளைக்குள் இருந்த பாம்புகள் எல்லாம என்னவோ—ஏதோ—என்று அஞ்சி வெளியில் வந்து ஊர்ந்து சென்றனவாம். இக்காட்சி, மலையின் வயிறு பிளந்து உள்ளேயிருந்த குடல்கள் பிதுங்கி வெளியில் வந்து விட்டதுபோல் தோன்றிற்றாம்.

2. குகைக்குள் இருந்த சீயங்கள் (சிங்கங்கள்) குகைப் பாறையோடு முட்டி மோதிக் குருதி கக்கினவாம்.

3. மலையில் இருந்த பறவைகள் எல்லாம், கடல் ஒலி யும் நாணும்படி உரத்த குரல் எழுப்பி, மேலே எழுந்து பறந்து வானத்தை மறைத்து விட்டனவாம்.

4. நிலை தடுமாறிய யானைகள் அஞ்சிக் கீழே விழாமல் இருக்கத் தம் தும்பிக்கைகளால் மரங்களைச் சுற்றிப் பிடித்துக்கொண்டிருந்தனவாம்.

5. புலிகள் குட்டிகளை வாயில் கவ்விக்கொண்டு அங்கும் இங்கும் ஓடினவாம்.

6. அனுமன் அழுத்தி ஊன்றியதால் கீழே அழுந்திய குன்றம், அனுமன் கூம்புபோல் இருக்கக் கடலில் அழுந்தும் கப்பல்போல் தோன்றியதாம்.

7. குங்குமம், சாந்தம், தேன், மலர்களின் மகரந்தப் பொடி முதலியன கலந்ததால் அருவிகள் நிறம் மாறி ஓடுவது, மலை பிளந்ததால் குருதி (இரத்தம்) வெளிப்பட்டு ஓடுவது போன்றிருந்ததாம்.

8. மலை பிளந்து வெடித்ததும், என்னவோ என அஞ்சித் தெய்வ மகளிர் தேவர்களைக் கட்டிக் கொண்டமை, கயிலை மலையை இராவணன் எடுத்தபோது சிவனை உமாதேவி கட்டிக் கொண்டது போன்றிருந்தது.

9. அனுமன் எழுந்த விசையினால், மலையில் உள்ள கற்கள், மண், விலங்குகள், மரம் செடி கொடிகள் முதலியன கடலில் வீழ்ந்து கடலைத் தூர்த்தன. இது, இராமன் அங்கு வருவதற்கு முன்பே சேது அணை கட்டத் தொடங்கியது போல் கருதத் தோன்றியது.

10. மலை அழுத்தத்தால் கடல் நீர் இரண்டாகப் பிளக்க, கீழே உள்ள நாகர் உலகம் தெரிந்தது. அரவு அரசனின் உலகம் காணும் வாய்ப்பும் பெற்றேன் என அனுமன் எண்ணினானாம்.

இனி, இச்செய்திகள் அடங்கிய பாடல் பகுதிகள்— சுந்தர காண்டம்— கடல் தாவு படலத்தில் உள்ளவை முறையே வருமாறு:—

1. "வன்தந்த வரிகொள் நாகம்
 வயங்குஅழல் உமிழும் வாய
 பொன்தந்த முழைகள் தோறும்
 புறத்து உராய்ப் புரண்டு போவ
 நின்றந்தம் இல்லான் ஊன்ற
 நெரிந்துகீழ் அழுந்தும் நீலக்
 குன்றம்தன் வயிறு கீறிப்
 பிதுங்கின குடர்கள் மான." (3)

2. "புகலரும் முழையுள் துஞ்சும்
 பொங்குளைச் சீயம் பொங்கி
 உகலரும் குருதி கக்கி
 உள்ளுற நெரிந்த"— (4)

3. "அகலிரும் பரவை நாண
 அரற்றுறு குரல ஆகி
 பகலொளி கரப்ப வானை
 மறைத்தன பறவை எல்லாம்"— (4)

4. "மெய்யுறத் தழீஇய மெல்லென்
 பிடியொடும் வெருவ லோடும்
 கையுற மரங்கள் பற்றிப்
 பிளிறின களிநல் யானை"— (5)

5. "புன்புற மயிரும் பூவா
 கண்புலம் புறத்து நாறா,
 வன்பறழ் வாயில் கவ்வி
 வல்லியம் இரிந்த மாதோ"— (6)

6. "பாரிடை அழுந்து கின்ற
படர்நெடும் பனிமாக் குன்றம்
கூர்உகிர்க் குவவுத் தோளான்
கூம்பெனக் குமிழி பொங்க
ஆர்கலி அழுவந் தாழும்
கலமெனல் ஆயிற் றன்றே"— (8)

7. 'தூதுகு நறுமென் சாந்தம்
குங்குமம் குலிகம் தண்தேன்
போதுஉகு பொலன்தாது என்றுஇத்
தொடக்கத்த யாவும் பூசி
மீதுறு சுனைநீர் ஆடி
அருவிபோய் உலகின் வீழ்வ
ஓதிய குன்றம் கீண்டு
குருதிநீர் சொரிவது ஒத்த"— (9)

8. "வெயில்இயல் குன்றம் கீண்டு
வெடித்தலும் நடுக்கம் எய்தி
மயில்இயல் தேவி மார்கள்
தழீஇக்கொளப் பொலிந்த வானோர்
அயில்எயிற்று அரக்கள் அள்ளத்
திரிந்தநாள் அணங்கு புல்லக்
கயிலையில் இருந்த தேவைத்
தனித்தனி கடுத்தல் செய்தார்" (11)

9. "மாவொடு மரனும் மண்ணும்
வல்லியும் மற்றும் எல்லாம்
போவது புரியும் வீரன்
விசையினால் புணிரி போர்க்கத்
தூவின கீழும் மேலும்
தூர்த்தன சுருதி அன்ன
சேவகன் சீறா முன்னம்
சேதுவும் இயன்ற மாதோ'— (19)

10. ''கீண்டது வேலை நன்னீர்
கீழ்உறக் கிடந்த நாகர்
வேண்டிய உலகம் எல்லாம்
வெளிப்பட மணிகள் மின்ன
ஆண்டகை அதனை நோக்கி
அரவினுக் கரசன் வாழ்வும்
காண்டகு தவத்தென் ஆனேன்
யான்எனக் கருத்துள் கொண்டான்'' (20)

இவ்வாறாக மயேந்திர மலையைப் பற்றிய கற்பனைகள் எழுந்ததின் நோக்கம் என்ன? முன்னர்க் காட்டப்ப்ட்டுள்ள அக நானூற்றுப் பாடலில், கோடையும் குளமும் கபிலரால் கற்பனை செய்யப்பட்டிருப்பதின் நோக்கம், மழையின் மிகுதியை அறிவிப்பதேயாம் அதுபோலவே, கீழே ஊன்றி எழும்பித் தாவிய அனுமனின் பேராற்றலைப் பெரிதுபடுத்திக் காட்டும் நோக்கமே, மயேந்திர மலையினால் ஏற்பட்ட மாற்றத்தைக் கம்பர் கற்பனை செய்திருப்பதாகும். கபிலர் கீழ் இருந்தவாறே கற்பனை செய்துள்ளார். கம்பரோ, அனுமனைப் போலவே மேலே தாவி எழுந்து கற்பனை செய்துள்ளார்.

தாவும் அனுமனின் தோற்றத்தைப் பற்றியும் கம்பர் கற்பனை செய்துள்ளார் மேரு மலையிலிருந்து மூன்று உச்சிக் குவடுகள் பிரிந்து வந்த போல் தோன்றினானாம்.

''முடுக்குறக் கடலில் செல்லும்
முத்தலைக் கிரியும் ஒத்தான்''— (23)

ஒற்றை மலர் வானஊர்தி (புட்பக விமானம்) மேல் செல்வது போல் தோன்றினான். (இந்தக் காலம் எனின், மேலே ஃஎலிகாப்டர் போவது போல் போனான் என்பார்களோ?)

''ஒற்றைப் புட்பக விமானம்தான்
அவ்விலங்கைமேல் போவது ஒத்தான்'' (24)

இன்னொரு முறை இராவணனைக் கீழே அழுத்தக் கயிலை மலை சென்றது போலவும் அனுமன் காணப் பட்டான்.

"அண்ணல்வாள் அரக்கன் தன்னை
அழுக்குவென் இன்னம் என்னா
கண்ணுதல் ஒழியச் செல்லும்
கயிலையங் கிரியும் ஒத்தான்". (25)

கேடு சூழும் இராவணனுக்குக் கேடு காலம் வந்துவிட்ட தென்பதை அறிவிக்கும் அறிகுறியாக ஞாயிறு கிழக்கி லிருந்து புறப்படாமல் வடக்கிலிருந்து தெற்கு நோக்கிச் சென்றால் எப்படியோ—அம்மாதிரியில் அனுமன் தென்னிலங்கை நோக்கிப் பாய்ந்தான்:

"கெடக் குறி ஆக மாகம் கிழக்கு எழும் வழக்கு நீங்கி
வடக்கு எழுந்து இலங்கை செல்லும்
பரிதி வானவனும் ஒத்தான்" (28)

உலகம் அழியும் ஊழிக் காலத்தில் வடக்கே எழும் முழு நிலவைப் போன்றான்:

"ஊழிநாள் வடபால் தோன்றும்
உவாமுழு மதியும் ஒத்தான்" (30)

## இலங்கையை இருள் கவ்வல்

ஞாயிறு மறைந்ததும் இலங்கையை இருள் கவ்விக் கொண்டதைக் கம்பர் ஊர்தேடு படலத்தில் சுவையாகக் கற்பனை செய்துள்ளார்:

இராவணனது தீவினை (பாவம்) சூழ்ந்து கொண்டது போலவும், சிவன் உரித்த யானையின் கரிய தோலால் போர்த்தது போலவும், அரவு அரசன் உமிழ்ந்த கரிய நஞ்சு சூழ்ந்து கொண்டது போலவும், ஞாயிறு மறைந்ததும் இலங்

கையை இருள் கவ்விக் கொண்டதாம். இங்கே கம்பர் மற்று மொரு சுவையான—புதுமையான கற்பனை கூறுகிறார்.

புகழை வெண்ணிறமாகச் சொல்வது இலக்கிய மரபு, ஒன்றே ஒன்று மட்டும் காண்பாம். சிவப்பிரகாச அடிகளார் 'பிரபுலிங்கலீலை' என்னும் தம் நூலின் 'கைலாசகதி' என்னும் பகுதியில், "சிவனது புகழ் எல்லாம் திரண்டு ஒரு குன்றாக இருந்ததுபோல், வெள்ளைக்கைலை மலை தோற்றம் அளிக்கிறது" என்று கூறியுள்ளார். பாடல் வருமாறு:—

"கொள்ளைவண் டிழிந்து தாது
குடைந்துழக் குழவு டைந்து
கள்ளழிந் தொழுகு செம்பொன்
கடுக்கைவேய்ந் திலகு மேனி
வள்ளல்வெண் புகழ் திரண்ட
வளங்கெழு கைலைக் குன்றில்
வெள்ளிவந் தத்தி யாச
மாகவே விளைந்த தம்மா" (4)

என்பது பாடல். 'புகழ் வெண்ணிறம். எனவே, அதற்கு எதிரான இகழ் கருநிறம் என்பது தானே விளங்கும். இராவணனுக்கு இருந்த புகழ் அவன் சீதையைச் சிறை வைத்ததால் வெண்மை நீங்கிய புகழாகிவிட்டதாம்.அங்ஙன மெனில், அவனுக்குக் கருநிறமான இகழ் பெரிய அளவில் உண்டாகி விட்டது என்பது பெறப்படும், இராவணனது இந்தக் கரிய இகழ் சூழ்ந்து கொண்டது போலவும் இலங் கையை இருள் கவ்விக் கொண்டது என்கிறார் கம்பர் பாடல்:—

"வண்மை நீங்கா நெடுமரபின் வந்தவன்
பெண்மை நீங்காத கற்புடைய பேதையைத்
திண்மை நீங்காதவன் சிறைவைத்தான் எனும்
வெண்மை நீங்கிய புகழ் விரிந்த தென்னவே" (44)

என்பது பாடல், மற்றும் சில கற்பனைகள்:

ஞாயிறும் திங்களுமாகிய கதிர்கள் இராவணனுக்கு அஞ்சி அன்று, இலங்கை மதில்களின் உயரத்தின்மேல் தாண்டிச் செல்ல முடியாமையால் விலகிச் செல்வதாக அனுமன் அறிந்து வியக்கிறான். பாடல்:

''கலங்கல் இல் சுடுங்கதிர்கள் மீது கடிது ஏகா
அலங்கல் அயில் வஞ்சகனை அஞ்சி எனில் அன்றால்
இலங்கை மதில் இங்கு இதனை ஏறல் அரிது என்றே
விலங்கி அகல்கின்றன விரைந்தென வியந்தான்'' (61)

கறுத்தவர் நடுவே வெளுத்தல் அரிது என்று (தருமம்) அறம் ஒளித்திருந்தாற் போன்று வீடணனும் கறுத்துக் காணப்பட்டானாம். பாடல்:

''பளிக்கு வேதிகைப் பவளத்தின்
கூடத்துப் பசுந்தேன்
துளிக்கும் கற்பகப் பந்தரில்
கருநிறத் தோர்பால்
வெளுத்து வைகுதல் அரிதென
அவர் உரு மேவி
ஒளித்து வாழ்கின்ற தருமம்
அன்னான் தனை உற்றான்'' (134)

அரக்க மகளிர், நிலா முற்றத்தில் இருந்து, வானத்து விண் மீன்களைக் கையில் வாரி மணிக்கழங்கு ஆட்டம் (காய் ஆட்டம்) ஆடுகின்றனர். 'பாடல்:

''மேல்நிவந்து எழுந்த மாட வெண்ணிலா
முன்றில் நண்ணி,
வானமீன் கையில் வாரி மணிக் கழங்கு
ஆடு வாரும்'' (181)

தங்களை அரமகளிர் குளிப்பாட்டப் பயன்படுத்தும் வான ஆற்று (ஆகாய கங்கை) நீர் குளிர்ச்சியாக இல்லை

என அரக்க மகளிர் மாடத்தின் உச்சியில் ஏறி மேகத்தைப் பொத்துச் சொரியும் நீரில் குளிக்கின்றனர்:

"உழை உழைப் பரந்தவான யாற்றுநின்று
உம்பர் நாட்டுக்
குழை முகத்து ஆயம் தந்த புனல் குளிர்ப்பில
என்று ஊடி,
இழை தொடுத் திலங்கும் மாடத்திடைத் தடுமாற ஏறி,
மழை பொதித்து ஒழுகுநீரால் மஞ்சனம்
ஆடுவாரை" (182)

ஞாயிறின் தோற்றத்தைக் கம்பர் பின்வருமாறு கற்பனை செய்கிறார்: சீதை தன்னிடம் இருந்து ஒளி மிக்க சூடாமணியை, தன்னைக் கண்டதற்கு அடையாளமாக இராமனிடம் கொண்டு போய்க் கொடுக்கும்படி அனுமன் கையில் கொடுத்துவிட்டாள். அதை அனுமன் எடுத்துக் கொண்டு போய் விடப் போகிறான். எனவே, அதற்குப் பதிலாக, கடல் ஒரு மணியைத் தந்தாற்போன்று கீழ் கடலிலிருந்து ஞாயிறு தோன்றிற்று—என்பது கம்பரின்கற்பனை. பாடல் :

"உறுசுடர் சூடைக் காசுக்கு
அரசினை உயிர் ஒப்பானுக்கு
அறிகுறி யாக விட்டாள்
ஆதலால் வறியள் அந்தோ?
செறி குழல் சீதைக்கு அன்று
ஓர்சிகாமணி தெரிந்து வாங்கி
எறிகடல் ஈவது என்ன
எழுந்தனன் இரவி என்பான்"
(சூடாமணிப் படலம்—45)

## இலங்கையின் எடுப்பான தோற்றம்

அடுத்துக் கம்பர் இலங்கையின் எடுப்பான தோற்றம் குறித்துப் புனைந்துள்ள கற்பனைகளை ஓரளவு காண்போம் :—

இலங்கையில் உள்ள மாடங்களின் கட்டுக்கோப்பு எதைக் கொண்டு இயற்றப்பட்டது? பொன்னை இழைத்தா —மணிகளைப் பதித்தா—மின்னலைக் கொண்டு அமைத்தா — வெயிலைக்கொண்டு சமைத்தா — எதைக் கொண்டு இயற்றப்பட்டது என்பது புரியவில்லையே என அனுமன் வியக்கின்றான். பாடல் : ஊர்தேடு படலம்.

''பொன்கொண்டு இழைத்த, மணியைக்
கொடு பொதிந்த,
மின்கொண்டு அமைத்த, வெயிலைக கொடு சமைத்த?
என்கொண்டு இயற்றிய எனத் தெரிகிலாத—
வன்கொண்டல் விட்டு மதிமுட்டுவனமாடம்'' (1)

இது பாடல்: மாடங்கள் மதியை (திங்களை) முட்டுகின்றன வாம். மகளிர் வானத்துக் (ஆகாய) கங்கை நீரைத் தம் கையில் அள்ளி விளையாடுகின்றாராம்.

மகளிர், குழலும் வீணையும் யாழும் தோற்று வருந்தும் படி இனிய மழலை மொழியைக் கிளிக்குக் கற்றுத் தருகின் றனராம். அம்மகளிரின் நிழல் சுவர்களில் படுந்தோறும், அவர்களின் உருவத்தோற்றத்திற்கும் நிழலின் தோற்றத் திற்கும் வேற்றுமை தெரியவில்லை என்பதாகக் கம்பர் ஒரு புது மாதிரிக் கற்பனை செய்துள்ளார்.

''குழலும் வீணையும் யாழும்
என்று இனையன குழைய
மழலை மென்மொழி கிளிக்கு இருந்து
அளிக்கின்ற மகளிர்
சுழலும் நன்னெடுந் தடமணிச்
சுவர்தொறும் துவன்றும்
நிழலும் தம்மையும் வேற்றுமை
தெரிவரு நிலைய'' (6)

இது பாடல். தென்னகத்துக் குழலோடும் யாழோடும் வடக்கத்திய வீணையும் சேர்ந்து கொண்டதை இப்பாடலில் காணலாம்.

இலங்கையின் மாட மாளிகை முதல் குதிரைக் கொட்டில் வரை எங்கும் மணிகளின் பேரொளி ஞாயிறு வெட்கும்படி மிகவும் வீசுவதால், இலங்கையைத் துறக்கம் ஆகக் (சொர்க்கம் ஆகக்) கருதவேண்டும், துறக்கமோ (சொர்க்கலோகமோ) இலங்கையை நோக்க நரகமாகக் கருதப்படும். பாடல் :

"மரகதத்தினும் மற்றுள மணியினும் வனைந்த
குரகதத் தடந்தேர் இனம் அவைபயில் கொட்டில்
இரவி வெள்க நின்று இமைக்கின்ற இயற்கைய
என்றால்
நரகம் ஒக்குமால் நல்நெடுந் துறக்கம் இந்நகர்க்கு" (14)

இலங்கையில் பன்னிற மணிகளின் பேரொளி பாய்வதால் கரிய அரக்கரும் கருமை நீங்கினராம்; திங்களும் (சந்திரனும்) நடுவில் உள்ள கரிய மறு நீங்கப் பெற்றதாம்: கருங்கடலும் பொன் உருகியிருப்பது போல் தோன்றிற்றாம். பாடல் :

"திருகு வெஞ்சினத்து அரக்கரும்
கருநிறம் தீர்ந்தார்;
அருகு போகின்ற திங்களும் மறு அற்றது;
அழகைப்
பருகும் இந்நகர்த் துன்ஒளி பாய்தலின்
பசும் பொன்
உருகுகின்றது போன்றுளது
உலகுசூழ் உவரி" (15)

இதுபாடல். தேன், சாந்தம்,மான்மதம், மலர்கள் முதலியன நீரில் கலத்தலால், கடலும் மீன்களும் புதுமணம் கமழ்கின் றனவாம்.

இராவணனுக்கு அஞ்சி ஞாயிறு விலகிச் செல்வதாகக் கூறுவர் பலர். அப்படியில்லை அது மாட மாளிகைகளின் ஒளியைப் பார்க்க முடியாமல் கண் கூசியே ஞாயிறு விலகிச் செல்கிறது என்பதை அவர் அறியார்:

''முன்னம் யாவரும் இராவணன்
முனியும் என்று எண்ணிப்
பொன்னின் மாநகர் மீச்செலான்
கதிர் எனப் புகல்வார்;
கன்னி ஆரையின் ஒளியினில்
கண் வழுக்குறுதல்
உன்னி நாள்தொறும் விலங்கினன்
போதலை உணரார்'' (19)

இது பாடல். மகளிர் எழுப்பிய அகில் புகையில் முகில் கூட் டங்கள் மறைந்து விட்டனவாம். எல்லா இடங்களிலும் களிக்கின்றவர்களைத் தவிர, கவலைப்படுபவர் ஒருவரும் இல்லையாம்.

இலங்கை, மடந்தையரின் வாய்களால் பவளக்காடாக வும், கண்களால் குவளைப் பொய்கையாகவும், முகங்களால் தாமரைத் தடாகமாகவும் தோன்றிற்றாம்.

''விளரிச் சொல்லியர் வாயினால்
வேலையுள் மிடைந்த
பவளக் காடெனப் பொலிந்தது;
படை நெடுங் கண்ணால்
குவளைக் கோட்டகம் கடுத்தது;
குளிர் முகக் குழுவால்
முளரிக் கானமும் ஒத்தது
முழங்கு நீர் இலங்கை'' (37)

என்பது பாடல்- அரக்கரும் அரக்கியரும் கழித்து எறியும் அணிகலன்களால் தெருக்கள் தூர்ந்தனவாம். நகரிலிருந்து பல்வேறு பொருள்களும் போய்ச் சேர்வதால் ஆழி (கடல்) மிகவும் ஆழ்ந்ததாகிறது.

இலங்கையின் மாட மாளிகை மதில்களின் மணி செறிந்த ஒளியை நோக்க ஞாயிறு மின்மினியாம்.

இம்மதில் இலங்கை நாப்பண்
எய்துமேல் தன்புன் எய்தும்
மின்மினி அல்லனோ அவ்
வெயில் கதிர் வேந்தன் அம்மா'' (96)

இது பாடல். உயரிய பண்பினளாய சீதையின் முகத்தை ஒத்திருத்தலால், அருகில் உள்ள தாமரை மலர்கள் குவியவில்லை.

''நறவு நாறிய நாள் நறுந் தாமரை
துறைகள் தோறும் முகிழ்த்தன தோன்றுமால்
சிறையின் எய்திய செல்வி முகத்தொடு
உறவுதாம் உடையார் ஒடுங்கார்களோ? (151)

தண்ணீரைச் சார்ந்துள்ள கரைகளில் பதிக்கப் பெற்றுள்ள பளிங்குக் கற்களுக்கும் தண்ணீருக்கும் வேற்றுமை தெரியவில்லை. தெளிந்த சிந்தையுடைய நல்லோரும் அற்பரோடு சேர்ந்தால் அவர்களைப் போன்றவர்களாகவே எண்ணப்படுவார்கள் போலும்!

''பளிங்கு செற்றிக் குயிற்றிய பாய் ஒளி
விளிம்பும் வெள்ளமும் மெய்தெரியாது; மேல்
தெளிந்த சிந்தையரும் சிறியார்களொடு
அளிந்த போது அறிதற்கு எளிதாவரோ? (152)

இது பாடல். துரியோதனன் பளிங்குத் தளவரிசையைத் தண்ணீர் என்று எண்ணித் தன் கணுக்கால் உடையைச்

சிறிது மேலே உயர்த்தியதைக் கண்டு திரௌபதி சிரித்த தனாலன்றோ பெரிய வம்பு நேர்ந்தது. இது பாரதக் கதை.

பல நிற மணிகளின் ஒளி படலால், பாற்கடல், நீலக் கடல் முதலிய பன்னிறக் கடல்களும் கலந்தது போல் அகழி காணப்பட்டதாம்.

"நீலமே முதல் நல் மணி நித்திலம்
மேல கீழ பல்வேறு ஒளி வீசலால்
பாலின் வேலை முதல் பல வேலையும்
கால் கலந்தனவோ எனக் காட்டுமே" (153)

என்பது பாடல். இவ்வாறு பல கற்பனைகளைச் சொரிந்து காப்பியத்தை நயப்படுத்தியுள்ளார் கம்பர்.

# 2. வரலாற்றுக் குறிப்புகள்

சுந்தர காண்டத்தில் உள்ள வரலாற்றுக் குறிப்புகள் சிலவற்றைக் காண்பாம்.

இலங்கையிலிருந்து திரும்பி வரும்போது விருந்து அருந்துவதாக மைந்நாகத்திடம் அனுமன் சொன்னபோது அன்புடையார் சிறப்பைக் கூறினானாம்.

"முன்பில் சிறந்தார், இடை உள்ளவர், காதல் முற்றப்
பின்பில் சிறந்தார் குணம் நன்று"
(கடல் தாவு படலம்-50)

என்னும் பகுதிக்கு முதல் வள்ளல்கள், இடை வள்ளல்கள், கடை வள்ளல்கள் ஆகியவரைக் குறிப்பதாகச் சிலர் பொருள் கூறுகின்றனர். தமிழ் நாட்டு மூன்று ஏழு வள்ளல் களைக் குறிப்பதாயின், மிகவும் முற்பட்ட காலத்தவனாகிய அனுமன் பிற்காலத்துத் தமிழக வள்ளல்களைக் குறிப்பிட் டிருக்க முடியாதாதலின் அது பொருளன்று.

அனுமனை வழிமறித்த அங்கார தாரகை என்னும் அரக்கி, திருமாலோடு போர் புரியப் பாற்கடல் மேல் போன மது என்னும் அரக்கனையும் அவன் தம்பி கைடவனையும் போன்றாளாம்:

"வேதக் கொழுஞ்சுடரை நாடி நெடுமேல் நாள்
ஓதத்தின் ஓடும் மதுகைடவரை ஒத்தாள்"
(கடல் தாவு படலம்-64)

திருமாலிடம் வரம் பேற்ற மதுவும் கைடவனும், உனக்கு என்ன வரம் வேண்டும் எனத் திருமாலைக் கேட்க, உங்களைக் கொல்லும் வரம் வேண்டும் எனக் கூறித் திருமால் அவர்களைக் கொன்றார் என்பது புராண வரலாறு.

இவர்களுள் மது கும்பகருணனாகவும், கைடவன் அதிகாயனாகவும் இலங்கையில் வந்து பிறந்தனராம்.

அரக்கர்கள், அரக்கியர்களின் வாயிலிருந்து ஊறிவரும் எயிற்று நீரை அருந்தி மயங்கினராம். அந்த (அமுத பான) நீர், ஆலை— மலைச்சாரல்— சோலை— கள் விற்பவர் வீடு— சோனகர் வீடு— முதலிய இடங்களில் கிடைக்கும் மதுவினினும் இனிமையாயிருந்ததாம்:

''ஆலையில் மலையின் சாரல்
முழையினில் அமுதவாகச்
சோலையில் துவசர் இல்லில்
சோனகர் மனையில் தூய
வேலையில் கொளஒணாத
வேற்கணார் குமதச் செவ்வாய்
வால்எயிர் றூறு தீந்தேன்
மாந்தினர் மயங்குவாரை'' (110)

இப்பாடலில் சோனகர் என்பவர் குறிப்பிடப்பட்டுள்ளனர். சோனர்கள் வெளிநாடுகளிலிருந்து வந்த யவனர்கள் ஆவர். இவர்கள் தமிழ் நாட்டிற்கும் இலங்கைக்கும் வணிகம் செய்ய வந்து தங்கியவர் ஆவார்கள். இவர்களைப் பற்றிப் பல தமிழ் நூல்களில் காணலாம்.

அரக்கர் சிலர், பழமொழிகள் அடங்கிய பெரிய— பெரிய கதைகளும் விடுகதைகளும் ஒருவர்க்கொருவர் சொல்லிக் கொள்கின்றனராம்:

"மூதுரைப் பெருங் கதைகளும்
பிதிர்களும் மொழிவார்" (137)

(மூதுரை=பழமொழி. பிதிர்கள்— விடுகதைகள் (வெடி)

அனுமன், 'கனிக்கு அடல் கதிர் தொடர்ந்தவன்' (144) என்று குறிப்பிடப்பட்டுள்ளான். ஞாயிறை இராகு விழுங்கும் போது, அது கனி போன்று தெரிய, அதைப் பெற அனுமன் தொடர்ந்து சென்றானாம். இராகு அனுமனால் ஏற்படும் தொல்லையை இந்திரனிடம் முறையிட்டானாம். இந்திரன் தன் வச்சிரப் படையால் அனுமனின் கன்னத்தை அடித்து முரித்தானாம். குரங்குகட்குக் கன்னம் குவிந்து பள்ளமாயிருப்பதைக் காணலாம் அனு என்றால் கன்னம்; அனு முரிந்ததால் அனுமான் எனப்பட்டானாம்.

அனுமன், காற்றுக் கடவுளுக்கும் (வாயு பகவானுக்கும்) அஞ்சனை என்பாளுக்கும் பிறந்தவன் எனப் பல இடங்களில் கூறப்பட்டிருக்கிறான். புஞ்சிகஸ்தலை என்னும் தேவமாது அஞ்சனை என்னும் வானரப் பெண்ணாக மாறியதாகப் புராண வரலாறு கூறுகிறது. சுக்கிரீவன் சூரியன் மகனாகக் கூறப்பட்டுள்ளான்.

மண்டோதரி மயன் மகள் எனப் பல இடங்களில் கூறப்பட்டுள்ளாள். மயன் அரக்கர் தச்சன் எனவும் தெய்வத் தச்சன் எனவும் இரண்டு விதமாகக் கூறப்படுகிறான்.

மன்மதன் மீன் கொடி உடையவன் என்பதைக் கம்பர் 'மீன் உயர்த்தவன்' (199) என்னும் தொடரால் குறிப்பிட்டு அறிவித்துள்ளார்.

கழுகுகளின் தலைவன் சம்பாதி என்பவனாம். இவன் சடாயுவின் தமையனாவான். "எருவைக்கு முதல் ஆய சம்பாதி" (230) என்பது பாடல் பகுதி.

இலங்கை நகரை அமைப்பதற்கு நல்ல நாள் பார்த்துத் தொடங்கினராம். உலகியலில் கட்டடம் கட்டவும் நல்ல நாள் பார்த்துத் தொடங்குகின்றனர் அல்லவா? இதற்கு 'நாள் கொள்ளுதல்' என்னும் பெயர் வழங்கப்படும். கம்பர் தமது பாடலில் இதற்குக் கருவைத்தல்' என்று பெயர் கூறியுள்ளார். குழந்தை பிறப்பதற்குத் தாயின் வயிற்றில் முதலில் கருதங்க வேண்டுமல்லவா? அது போன்றதே இதுவும்:

''எருவைக்கு முதல் ஆய சம்பாதி இலங்கையில் அத்
திருவைக் கண்டனென் என்றான்; அவன் உரையும்
சிதைந்ததால்;
கருவைக்கும் நெடுநகரைக் கடலிடையே கரையாதே
உருவைக் கொண்டு இன்னமும் நான் உளேனாகி
உழல்வேனோ? (230)

என்பது பாடல். இலங்கையில் சீதையைக் கண்டதாகச் சம்பாதி கூறியிருக்கிறான். கருவைத்து அழிக்க முடியாத வாறு அமைத்த இலங்கையை யான் இன்னும் கடலிலே கரைத்து அழிக்காமல், வீணே உடலைச் சுமந்து கொண்டிருக்கின்றேனே என அனுமன் கூறுகிறான். சிறுபாண் ஆற்றுப் படை என்னும் நூலிலும்,

''கருவொடு பெயரிய நன்மா இலங்கை'' (119)

என இலங்கை குறிப்பிடப் பெற்றுள்ளது. இதற்கு, ''கருப்பதித்த முகூர்த்தத்தாலே ஒருவராலும் அழித்தற்கரிய முறைமையினையுடைய இலங்கை'' என நச்சினார்க்கினியர் பொருள் வரைந்துள்ளார்.

சீதை அசோகவனத்தில் பழைய செய்திகளை எண்ணி வருந்துகிறாள்: விராதன் என்பானது சாபத்தை மாற்றிய இராமனை எண்ணி, இன்னும் தனக்கு நல்லது கிடைக்க வில்லையே என வருந்துகிறாள்.

"வெவ்விராதனை மேவருந் தீவினை
வவ்வி மாற்றருஞ் சாபமும் மாற்றிய
அவ்விராமனை உன்னித் தன் ஆருயிர்
செவ்விராது உணர்வோய்ந்து உடல் தேம்புவாள்"
(காட்சிப் படலம்—29)

இப்பாடலில் விராதனது வரலாறு குறிப்பிடப் பட்டுள்ளது. விராதன் தேவர் உலகத்தில் வீணை வாசிக்கும் ஒரு தும்புருவன். இவன் அரம்பையிடம் அளவு மீறிக் காமாம் கொண்டதால், அரக்கனாய்ப் பிறக்கும்படி தேவர்கள் கெடுமொழி (சாபம்) இட்டனர். இவன் காட்டிற்கு வந்து கிலிஞ்சன் என்பவனின் மகனாய்ப் பிறந்து அரக்கர் உருவம் கொண்டிருந்தான். இராம இலக்குமணர் காட்டிற்கு வந்தபோது அவர்களோடு இவன் மோதியதால், இவன் அவர்களால் தன் கைகள் வெட்டப்பட்டு, கெடுமொழி விலக்கு (சாப விமோசனம்) பெற்று மீண்டும் தேவனாகித் தேவர் உலகம் சேர்ந்தான்.

தன் விருப்பத்திற்கு இணங்கும்படி வற்புறுத்திய இராவணனை நோக்கிச் சீதை கூறுகின்றாள்:" இராம இலக்குமணரை எளிய—சாதாரணமான மானிடர்கள் தாமே என்று மட்டமாகக் கருதிவிட்டாயா? உன்னை வென்ற கார்த்த வீரியனை வென்ற பரசுராமன் ஒரு மனிதனே என்பதை நினைவில் கொள்க. மற்றும், தன் ஆயிரம் கைகளால் உன் இருபது கைகளையும் பற்றி இழுத்து, உன் வாயில் குருதி செரியக் குத்தி உன்னைச் சிறையில் இட்ட கார்த்த வீரியனின் ஆயிரம் தோள்களையும் வெட்டிக் கொன்ற அந்தப் பரசுராமனையே வென்றவர் இராமர் என்பதையும் நினைவு செய்து கொள்க" என்று.
(காட்சிப் படலம்)

"மானுயர் இவர்என மனக்கொண்டாய் எனின்,
கானுயர் வரைநிகர் கார்த்த வீரியன்
தானொரு மனிசனால் தளர்ந்துளான் எனின்,
தேனுயர் தெரியலான் தன்மை தேர்தியால்" (123)

"ஆயிரம் தடக்கையால் நின் ஐந்நான்கு கரமும் பற்றி
வாய்வழிக் குருதி சோரக் குத்திவான் சிறையில் வைத்த
தூயவன் வயிரத் தோள்கள் துணித்தவன் தொலைத்த
நீ அறிந்திலையோ? நீதிநிலை அறிந்திலாத நீசா!"(131)

கார்த்த வீரியன் இரு கால்களும் ஆயிரம் கைகளும் உடையவன். ஓர் ஆற்றங் கரையில் இராவணன் சிவபூசனை செய்துகொண்டிருந்தான். அந்த இடத்திற்கு முன்னால் கார்த்த வீரியன் தன் மனைவியருடன் நீர் விளையாட்டு செய்து கொண்டிருந்தான்; தன் ஆயிரம் கைகளாலும் ஆற்றுத் தண்ணீரை அணைபோல் அடக்கி ஓடாமல் செய்தான், பின் திடீரெனக் கைகளை எடுத்ததும், கட்டுண்டிருந்த நீர் விரைவாக ஓடி இராவணனின் பூசனைப் பொருள்களை அடித்துச் சென்றது. இதனால் சினம் கொண்ட இராவணன் கார்த்த வீரியனுடன் போர் புரிந்தான். கார்த்த வீரியன் இராவணனைக் குருதி சொரியக் குத்தி வென்று சிறையில் இட்டான். பின் புலத்தியர் வேண்டிக் கொண்டதால் இராவணனை விடுதலை செய்தான்.

கார்த்த வீரியன் சமதக்கினி முனிவருக்குத் தொல்லை தந்ததால் முனிவரின் மகனாகிய பரசுராமன், கார்த்த வீரியனின் ஆயிரம் தோள்களையும் வெட்டிக் கொன்றான். அத்தகைய பரசுராமன், இராமன் சீதையை மணந்து அயோத்திக்குத் திரும்பிக் கொண்டிருந்தபோது இராமனோடு மோதியதால், இராமன் பரசுராமனது வில்லை ஒடித்து அவனை வென்றனன். இந்தப் புராண வரலாறுகள் கம்பரின் பாடல்களில் அமைந்துள்ளன.

மேலும் சீதை இராவணனுக்குக் கூறுகிறாள்: இரணியாட்சன், இரணிய கசிபு முதலிய அரக்கர்கள் தகாதனபிற செய்யினும், பிறர் மனைவியை விரும்பவில்லை.

"பொற்கணான், தம்பி என்றினைய போர்த் தொழில்
விற்கொள் நாண்பொருத்தோள் அவுணர் வேறுளார்
நற்கணர் நல்லறம் துறந்த நாளினும்
இற்கணார் சிறந்திலர்; இறந்து நீங்கினார்" (125)

பொற்கணான் (பொன்கண்ணான்) என்பது, இரணியாட்சன் என்னும் வடமொழிப் பெயரின் மொழி பெயர்ப்பாகும். (இரணியம்-பொன்-அட்சன்-கண்ணை உடையவன்) இவன் தம்பி இரணிய கசிபு என்பவன். சிலர் இரணிய கசிபு தான் இரணியன்; இவனே மூத்தவன்; இவன் தம்பிதான் இரணியாட்சன் என்பர்.

இரணியாட்சன் தேவர்க்கும் முனிவர்க்கும் தொல்லை தந்தான். ஒரு முறை பூமியைப் பாயாகச் சுருட்டி எடுத்துக் கொண்டு கடலுள் மறைந்து கொண்டான். உடனே திருமால் பன்றி உருவம் (வராகாவதாரம்) கொண்டு கொம்பால் இவன் மார்பைப் பிளந்து கொன்று, மீண்டும் பூமியைப் பழைய நிலையில் இருத்தினராம். இரணிய கசிபு என்னும் இரணியன், தன் மகன் பிரகலாதனைத் துன்புறுத்த, திருமால் நரசிம்ம உருவம் (நரசிம்மாவதாரம்) கொண்டு இவன் உடலைக் கிழித்தும் கொன்றார். இவ்விருவரும் காசிபருக்கும் திதி என்பாளுக்கும் பிறந்தவர்களாம். நரசிங்கப் புராணத்தில் உள்ளது இவ்வரலாறு.

இரணியனைத் திருமால் நரசிம்ம உருக்கொண்டு கொன்றதைக் கம்பர் தம் பாடலிலும் குறிப்பிட்டுள்ளார் :

"முழைகொள் மேருவின் முகட்டிடைக் கனகனை
முருக்கிய முரண் சீயம்" (ஊர்தேடு படலம்-205)

(கனகம் = பொன்; கனகன் = இரணியன்) இரணியன் மேரு மலைப் பகுதியில் அரசாண்டிருந்ததாக இப்பாடல் குறிப்பு தருகிறது. மற்றும் ஒரு பாடலில், இரணியனின் உடலைக் கை நகங்களால் திருமால் கிழித்துப் பிளந்தார் என்ற குறிப்பு உள்ளது:-

''கைச் செறி முகிழ் உகிர், கனகன் என்பவன்
வச்சிர யாக்கையை வகிர்ந்த வன்தொழில்...''
(உருக்காட்டு படலம்—48)

சடாயு இராமனுக்குத் தந்தை முறை கொண்டாடப் பட்டுள்ளான். வழியில் இராமன் அடிபட்டுக் கிடக்கும் சடாயுவைக் கண்டு, 'தந்தையே! நடந்ததைக் கூறுக' என்று கேட்டான். ''எந்தை நீ உற்ற தன்மை இயம்பு'' (உருக்காட்டு படலம்—79) என்பது பாடல் பகுதி.

இராவணன் சடாயுவை வீழ்த்திய கொடுமையைக் கேட்டதும், இராமன் மிகவும் சினம் கொண்டான். இராமனைத் தந்தையாகிய சடாயு ஆறுதல் கொள்ளச் செய்தான். ''தாதை ஆற்றலின் சீற்றம் ஆறி'' (80) என்பது பாடல் பகுதி.

சீதை, இராமனிடம் கூறுமாறு சில அடையாளச் செய்தி களை அனுமனிடம் கூறுகிறாள்: ''நாங்கள் சித்திரகூட மலைப்பகுதியில் இருந்த போது, இந்திரன் மகன் சயந்தன், காகமாக வந்து, தன் நகங்களால் என் மார்பகத்தைக் கீறிய போது, இராமர் அருகில் கிடந்த ஒரு புல்லால் அவனைத் தாக்கி விரட்டியதை நினைவு செய்'' என்று.

''நாகம் ஒன்றிய நல்வரையின்தலை மேனாள்
ஆகம் வந்தெனை வள்உகிர் வாளின் அளைந்த
காகம் ஒன்றை முனிந்து அயல் கல்எழு புல்லால்
வேக வெம்படை விட்டது மெல்ல விரிப்பாய்''
(சூடாமணிப் படலம்—77

இந்தத் தாக்குதலில் காகத்தின் ஒரு கண் கெட்டுவிட்ட தாகவும், காகமாகிய சயந்தன் பல தெய்வங்களிடம் சென்று முறையிட்டும் பயனில்லை என்பதாகவும் புராண வரலாறு கூறுகிறது.

இரணியாட்சன் உலகைப் பாயாகச் சுருட்டிக் கடலில் ஒளிந்து கொண்டபோது, திருமால் ஏனமாக (பன்றியாக வந்து) கொம்பால் அவன் மார்பைப் பிளந்து, உலகைத் தன் கொம்பிலே ஏந்தி வந்து பழைய நிலையில் இருத்தின வரலாறு கம்பராலும் கூறப்பட்டுள்ளது.

''அன்று உலகு எயிற்றிடை கொள் ஏனம் எனல் ஆனான்''
(பொழில் இறுத்த படலம்—8)

மூவுலகும் அழியும் ஊழிக் காலத்தில், திருமால் ஆலம் இலையில் வீற்றிருப்பாராம் :

''மும்முறை உலகமெல்லாம் முற்றுற முடிவ தான
அம்முறை ஐயன் வைகும் ஆல்என நின்றதம்மா'' (44)

முருகன் சூரபத்மனை வென்றவன்; மயிலை ஊர்தியாக உடையவன்—என்ற செய்தி.

''சூர் தடிந்தவன் மயிலிடைப் பறித்தவன் தோகை'' (பஞ்ச சேனாதிபதிகள் வதைப்படலம்—17) என்னும் பாடல் பகுதியில் அறிவிக்கப்பட்டுள்ளது.

தேவர்கள் அமிழ்தம் பெற, மந்தர மலையை மத்தாகக் கடலில் இட்டு, வாசுகி என்னும் பாம்பைக் கயிறாகச் சுற்றி இழுத்துக் கடைந்த செய்தி,

''....செறி கயிற்று அரவினால் திரி
அருந்திறல் மந்தரம் அனையர் ஆயினார்''(41)

என்னும் பாடல் பகுதியில் அறிவிக்கப்பட்டுள்ளது.

திருமால் வாமன உருவம் (வாமனாவதாரம்) எடுத்து மூன்று உலகங்களையும் தன் அடியால் அளந்து பலி

என்னும் மாவலியைக் கொன்ற வரலாறு, "மூன்று உலகு அடியின் தாயோன்" (அக்க குமாரன் வதைப்படலம்—2) என்னும் பாடல் பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ளது.

இராவணன் பிரமனுடைய மகனுக்கு மகனுக்கு மகனாம் அதாவது, பிரமனின் கொள்ளுப் பேரனாம்.

இளைய மகன் அக்ககுமாரன் இறந்த துயர் பெறாமல், மயன் மகளாகிய மண்டோதரி, பிரமனின் கோள்ளுப் பேரனும் தன் கணவனும் ஆகிய இராவணனின் காலடியில் விழுந்து அழுதாளாம் :

"அயன் மகன் மகன் மகன் அடியில் வீழ்ந்தனள்.
மயன்மகள் வயிறு அலைத்து அலறி மாழ்கினாள்"(48)

அனுமனுடன் போர் புரிந்து மாண்ட அக்க குமாரனின் உடல் குருதி வெள்ளத்தில கிடக்கிறது. அதற்குக் கம்பர் இரண்டு உவமைகள் கூறியுள்ளார். முருகனால் கொல்லப் பட்ட தாருகா சூரனது குருதி போன்ற குருதியில் கிடந்தா னாம். திருமால் நரசிம்மமாய் வந்து நகத்தால் கிழித்துக் கொன்ற இரணியனது உடல் போல் அவன் உடல் குழம்பிக் கிடந்ததாம்:

"தாருகன் குருதியன்ன குருதியில், தனிமாச் சீயம்
கூருகிர் கிளைத்த கொற்றக் கனகன் மெய்க்குழம்பின்
தோன்ற"
(பாசப்படலம் 20)

சூரபத்மனின் இளைய தம்பியும், முருகனால் கொல்லப் பட்டவனுமாகிய தாருகா சூரன் இப்பாடலில் குறிப்பிடப் பட்டுள்ளான்.

சிவன் மேரு மலையை வில்லாக வளைத்து, வாசுகிப் பாம்பை நாணாகப் பூட்டி, திருமாலை அம்பாகக் கொண்டு, தாராட்சன்— கமலாட்சன்— வித்வன் மாலி— என்னும் அரக்கர் மூவரின் பொன் கோட்டை—வெள்ளிக்கோட்டை—

இரும்புக் கோட்டை ஆகிய முப்புரங்களையும் சிரித்தே எரித்தார் என்னும் புராணக் கதையைக் கம்பர் பல இடங்களில் கோடிட்டுக் காட்டியுள்ளார்.

"தொல்புரம் அட்டான்" (ஊர்தேடு படலம்—82)

"வென்றவன் புரங்கள் வேவத்தனிச்சரம் துரந்தமேரு"
(காட்சிப் படலம்—118)

"புரஞ்சுட வரிசிலைப் பொருப்பு வாங்கிய பரஞ்சுடர்"
(பாசப்படலம்—2)

"மூண்டு முப்புரம் சுட முடுகும் ஈசன்" (23)

சிவனை மதிக்காமல், தாங்கள் பெரியவர்கள் என்ற அகம் கொண்ட தாருகாவனத்து அந்தணர்கள், சிவனுக்கு எதிராக வேள்வி செய்து, அதிலிருந்து வந்த யானையையும் புலியையும் மழுவையும் முயலகனையும் இன்னும் பிற பொருள்களையும் சிவனை அழிக்கும்படி ஏவி அனுப்பினா ராம். வந்த யானையைச் சிவன் கொன்று அதன் தோலை உரித்துப் போர்வையாகப் போர்த்திக் கொண்டாராம்; புலியைக் கொன்று அதன் தோலை ஆடையாக உரித்துக் கட்டிக் கொண்டாராம். மழுப்படையைக் கையில் ஏந்திக் கொண்டாராம் முயலகன் என்னும் அரக்கனைக் காலின் கீழ் போட்டு மிதித்தாராம். இப்போதும் நடராசர் சிலையின் காலடியில் ஒருவன் மிதிப்பட்டுக் கிடப்பதைக் காணலாம். இவ்வாறு அகம் கொண்ட அந்தணர்களைச் சிவன் வென்றா ராம். பாடல்:

"கரித்த மூன்று எயிலுடைக் கணிச்சி வானவன்,
எரித்தலை அந்தணர் இழைத்த யானையை
உரித்தபேர் உரிவை" இது பாடல் பகுதி.
(ஊர்தேடு படலம்—42)

யானையின் தோல் மக்களின் தோல் போலவே உரிக்க முடியாதது. சிவன் எல்லாம் வல்லவராதலின் உரித்தாராம். இப்போது கூட, வலியவர்கள் மெலியவர்களை நோக்கித் 'தோலை உரித்து விடுவேன்' என்று சொல்வதைக் கேட்கலாம். இந்தக் கதை, நானே கடவுள் (அஹம் பிரம்ஹாஸ்மி) என்னும் அத்வைதக் கொள்கையைச் சைவ சித்தாந்திகள் சாடும் கதையாகும்.

இவ்வாறு பல புராண வரலாறுகள் சுந்தர காண்டத்தில் கோடிட்டுக் காட்டப்பட்டுள்ளன.

# 3. சிறப்புச் செய்திகள்

கம்பர் சுந்தர காண்டத்தில் சிறப்பு மிக்க செய்திகள் பலவற்றைத் தெரிவித்துள்ளார். அவற்றுள் சில காண்பாம்:

அனுமன் கடலைத் தாண்டிய போது அவன் உடம்பு வீசிய காற்றினால், கடலில் இருந்த திமிங்கிலகிலங்களோடு மற்ற மீன்களும் அலைப்புண்டு இறந்து மிதந்தனவாம். திமிங்கில கிலம் என்பது, அளவு சொல்ல முடியாத தொலைவுக்கு நீண்டு பருத்த உயிரியாம். அதன் அளவைக் கூற முடியாதென மக்களும் (தேசமும்) நூல்களும் சொல்லும் பேருரு உடையதாம்:

''ஓசனை உலப்பிலாத உடம்பு
அமைந்துடைய என்னத்
தேசமும் நூலும் சொல்லும்
திமிங்கிலகிலங்களோடும்
ஆசையை உற்ற வேலை கலங்க
அன்று அண்ணல் யாக்கை
வீசிய காலின் வீந்து
மிதந்தன மீன்கள் எல்லாம்''

(கடல் தாவு படலம்-37.)

அளவிட முடியாத நீளம் உடையது திமிங்கிலகிலம் என்று தேச மக்களும் சொல்கின்றனராம்; நூல்களும் சொல்கின்றனவாம். மக்கள் சொல்வதைக் காதால் கேட்டறியலாம். இது பற்றிச் சொல்லும் நூல்களுள்

ஏதேனும் ஒரு நூல் சொல்லுகின்ற ஒரு சிறு குறிப்பை யாயினும் இங்கே காணவேண்டுமல்லவா?

திவாகர் இயற்றிய 'சேந்தன் திவாகரம்' என்னும் நிகண்டு நூல் உள்ளது. அந்நூலுள் 'விலங்கினப் பெயர்த் தொகுதி' என்னும் பகுதி ஒன்று உள்ளது. இது அஃறிணை உயிர்களைப் பற்றிச் சொல்லும் பகுதியாகும். இந்நூலுள் திமிங்கிலகிலம் பற்றிச் சொல்லும் பகுதியைக் காணலாம்:

''மெலிய வரை வலியவர் வாட்டினால், வலிய வரைத் தெய்வம் வாட்டும்' என்னும் மொழிப்படி, சிறுமீனைப் பெரிய மீன் விழுங்கின், பெரு மீனைத் திமிங்கிலம் விழுங்கும் என்று மக்கள் கூறுவதுண்டு. சிறு மீனை விழுங்கும் அந்தப் பெரிய மீனுக்கு யானை மீன், திமி என்னும் பெயர்கள் உண்டு. யானை மீனை விழுங்கும் மீனுக்குத் திமிங்கிலம் என்று பெயராம். திமிங்கிலத்தை விழுங்கும் மீனுக்குத் திமிங்கிலகிலம் என்று பெயராம். இந்த விவரங்களைச் சேந்தன் திவாகரம்— விலங்கினப் பெயர்த் தொகுதியில் உள்ள பின்வரும் நூற்பாக்களால் அறியலாம்:

(பெரு மீனின் பெயர்)
''யானை மீன். திமி, பெருமீன் ஆகும்.''
(யானை மீனை விழுங்கும் மீன்)
''யானையை விழுங்கு மீன் திமிங்கிலம் என்ப.''
(திமிங்கிலத்தை விழுங்கும் மீன்)
''அம்மீனை விழுங்கும் மீன் திமிங்கிலகிலமே.''

கப்பலில்— ஓடங்களில் செல்பவர்கள், நடுக்கடலில் படுத்துக் கிடக்கும் திமிங்கிலத்தை ஒரு தீவு என்று கருதி அதன் மீது இறங்குவதும் உணவு சமைப்பதும் உண்டு; தீ மூண்டதும் திமிங்கிலம் அசைந்து கொடுக்க, உடனே அனைவரும் கப்பலில் ஏறிக் கொள்வர்— என்பதாக மக்கள் பேசிக் கொள்வதுண்டு.

பிறரை ஏய்த்துப் பிழைப்பவனைத் திமிங்கிலம் என்று சுட்டித் திட்டுவது உலக வழக்கம். இன்னும் பெரிய அளவில் ஊரை அடித்து உலையில் போடுபவனைத், 'திமிங்கிலகிலம்' என்று சொல்ல வேண்டும் எனத் திவாகர நூல் நமக்குத் தருவது போல் இல்லையா? மக்கள் இந்தத் திமிங்கில கிலத்தைக் கூடப் பேச்சு வழக்கில் குறிப்பிடுவது போல் தெரிகிறது. "ஐயோ! அவனா? அவன் பெரிய திமிங்கலம் ஆயிற்றே" என்று மக்கள் கூறுகின்றனரே— அந்தப் பெரிய திமிங்கிலம் என்பது திமிங்கிகிலத்தைதானோ? இருக்கலாம்!

இந்தக் காலத்தில் 'Biology' என்று கூறப்படும் உயிர் நூல் அந்தக் காலத்திலேயே உண்டு என்பதற்குச் சேந்திவாகரம் சான்றாகும். இந்த உயிர் நூலைத்தான், கம்பர், 'தேசமும் நூலும் சொல்லும் திமிங்கிலகிலம்' என்னும் தொடரில் குறிப்பிட்டுள்ளார் போலும்! கல்வியில் பெரியவர் கம்பராயிற்றே!

இலங்கையில் மகளிர், குழலிசை— வீணையிசை— யாழிசை தோற்கும்படி கிளிகட்கு மழலை மொழி பேசக் கற்றுக் கொடுக்கின்றார்களாம்:

"குழலும் வீணையும் யாழும் என்று
இனையன குழைய,
மழலை மென்மொழி கிளிக்கிருந்து
அளிக்கின்ற மகளிர்"

(ஊர்தேடு படலம்—6)

குழலும் யாழும் தமிழ் நாட்டுக்கு இசைக் கருவிகள். வீணை வட நாட்டது. கம்பர் காலத்திற்கு முன்பே வீணை தமிழகத்தில் இறக்குமதியாகிவிட்டது என்பது புலனா கிறது.

"இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்" என மாணிக்க வாசகர் தம் திருவாசகத்தில் (திருப்பள்ளி

யெழுச்சி—4) வீணையைக் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு இன்னும் பல உள.

ஞாயிறு கீழ்க் கடலில் தோன்றுவதாகவும், கிழக்கு மலையில் தோன்றுவதாகவும், மேல் கடலில் மறைவதாகவும் —பலவிதமாகக் கம்பர் கூறியுள்ளார்.

''வாரியின் எழுசுடர்க் கடவுள் வானனவன்''
(—பஞ்ச சேனாதிபதிகள் வதைப் படலம்-39)
''தழுவா நின்ற கருங்கடல் மீது உதயகிரியில்
சுடர் தயங்க
எழுவான் என்ன மின்னிமைக்கும் ஆரம்புரளும்
இயல்பிற்றாய்''—
(ஊர் தேடு படலம்—214)

''உதய மால் வரையின் மீப்படர்
வெங்கதிர்ச் செல்வர்'' (காட்சிப் படலம்-81)
''வெய்யோன் குடகடல் குளிப்பதானான்''
(ஊர் தேடு படலம் 40)

என்பன பாடல் பகுதிகள். தென்னிந்தியாவின் கிழக்கு எல்லை வங்கக் கடலாகவும், மேற்கு எல்லை அரபிக் கடலாகவும் உள்ளன. அதனால், ஞாயிறு கீழ்க் கடலில் தோன்றுவதாகவும் மேல் கடலில் மறைவதாகவும் (படுவதாகவும்) கூறல் மரபு. ஞாயிறு மேற்குக் கடலில் மறைவதால், மேற்குக் கரையில் உள்ள மலையாளிகள் படு ஞாயிறு (படி ஞாயிறு) என மேற்குத் திசைக்கு மலையாளத்தில் பெயர் வைத்துள்ளனர்.

இது நிற்க, உதயகிரி (தோன்றும் மலை) என்னும் மலையில் தோன்றுவதாகவும், அஸ்தகிரி (மறையும் மலை) என்னும் மலையில் (அஸ்தமனம்) மறைவதாகவும் கூறும் கொள்கை எவ்வாறு பிறந்தது என்பதைக் காண வேண்டும்.

கிழக்குக் கடற்கரை யோரம் இருப்பவர்கட்கு ஞாயிறு கீழ்க்கடலில் தோன்றுவதாகவும்,மேற்குக் கடற்கரை யோரம் இருப்பவர்கட்கு ஞாயிறு மேல்கடலில் மறைவதாகவும் புலப்படும். ஆனால் இடையில் உள்ளவர்கட்கு எவ்வாறு புலப்படக்கூடும்?

இடையிலே கிழக்குத் தொடர்ச்சி மலையும் மேற்குத் தொடர்ச்சி மலையும் உள்ளன. இவையன்றி, இடையில்—ஆங்காங்கே சிறு சிறு குன்றுகளும் ஓரளவு பெரிய தனித் தனி மலைகளும் உள்ளன. எந்தமலையோ—மலையின் மேற்கே இருப்பவர்க்கு ஞாயிறு கிழக்குமலையில் (உதயகிரியில்) தோன்றுவதாகவும், மலையின் கிழக்கே இருப்பவர்க்கு ஞாயிறு மேற்கு மலையில் (அஸ்தகிரியில்) மறைவதாகவும் தெரியும். இந்த அடிப்படையில்தான் உதயகிரியும் அஸ்தகிரியும் இப்பெயர்களைப் பெற்றன. பழைய இலக்கிய ஆசிரியர்களுள் கீழ்க்கடலையும் மேல் கடலையும் அறியாதவர்கள் மலைகளில் ஞாயிறு தோன்றுவ தாகவம் மறைவதாகவும் கூறினர். இன்றும் கடல் பார்க்காத மக்கள் உண்டு.

நாளடைவில் பல்வேறிடங்களிலும் இருந்த மக்கள் போக்குவரவு வசதி பெற்று ஒன்று கூடும் வாய்ப்பைப் பெற்றனர். ஆயினும் அவரவர்கள் எழுதிய—கீழ்க்கடல் தோற்றமும் மேல்கடல் மறைவும், உதயகிரித் தோற்றமும் அத்தகிரி மறைவும் கொண்ட நூல்கள் பலராலும் படிக்கப் பட்டு, ஞாயிற்றின் தோற்றத்திலும் மறைவிலும் குழப்பம் உண்டாக்கின. உண்மைநிலை இதுதான், எனவே, கம்பர் பாடல்களிலும் இக்குழப்பம் உள்ளமை வியப்பன்று.

புரசமரம் பங்குனித் திங்களில் பூக்குமாம்
''பங்குனி மலர்ந்தொளிர் பலாசவனம் ஒப்பார்'' (68)
(பலாசம்—புரசமரம்; செம்முருக்கு என்பதும் உண்டு.)

ஞாயிறை இராகுகேதுவாகிய பாம்பு பற்றும் 'ஞாயிறு பிடிப்பு' (சூரிய கிரகணம்) கம்பரால் குறிப்பிடப்பட்டுள்ளது.

''சுடரோனைக்காணா வந்த கட்செவி என்ன'' (73) இலங்கை மாதேவி அனுமனைத் தடுத்தற்கு இவ்வுவமை கூறப்பட்டுள்ளது.

இலங்கை மகளிர், யாழிசை இலக்கணப்படி, குரல்—துத்தம் — கைக்கிளை — உழை — இளி —விளரி—தாரம்—என்னும் எழுவகைச் சுருதிகளை இசைக்கக் கூடிய ஏழு நரம்புகளை மீட்டித் தாளத்திற்கு ஏற்ப அளவு செய்து பாடல் இசைத்தனராம்:

''இலக்கண மரபிற்கு ஏற்ற எழுவகை நரம்பின் நல்யாழ்
அலத்தகத் தளிர்க்கை நோவ அளந்தெடுத்து அமைந்த
பாடல்'' (103)

இப்பாடலால் கம்பரின் இசைப் புலமை புலப்படும். தமிழ் இசைக்கு ஏற்ற இலக்கணநூல் தமிழில் இருந்தமையும் புலனாகும்.

விநாயகரை, ஐந்து கைகளையுடைய யானை முகத்தோன் என்னும் பொருளில் 'ஐங்கரக்களிறு' என்று கம்பர் கூறியுள்ளார்.

அனுமன் இலங்கையில் பல இடங்கட்கும் சென்று சீதையைத் தேடினானாம்;

''மாட கூடங்கள் மாளிகை ஒளிகை, மகளிர்
ஆடு அரங்குகள் அம்பலம் தேவர் ஆலயங்கள்
பாடல் வேதிகை பட்டிமண்டபம் முதல் பலவும்
நாடி ஏகினன் இராகவன் புகழெனும் நலத்தான்''

(131)

அனுமன் தேடிய இடங்களில் பட்டிமண்டபமும் ஒன்று. இக்காலத்தில் பட்டி மண்டபம் இல்லாத சொற் பொழிவு விழாக்கள் இல்லை எனலாம். பட்டி மண்டபம் பேச்சாளர் பலர்க்குப் பணமும் தருகிறது. பட்டிமண்டபம் பல நூல்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளது. கம்ப இராமாயணம்—

நகரப் படலத்தில் "பன்னருங் கலை தெரி பட்டிமண்டபம்" (62) என்றும், சிலப்பதிகாரத்தில் "பகைப்புறத்துக் கொடுத்த பட்டிமண்டபமும்" (5—102) என்றும், மணிமேகலையில் "பட்டி மண்டபத்துப் பாங்கறிந்து ஏறுமின்," (1—61) என்றும், திருவாசகத்தில் "பட்டிமண்டபம் ஏற்றினை" (திருச்சதகம்—49) என்றும் கூறியிருக்கும் பகுதிகள் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கன. சிலர் பட்டிமண்டப நிகழ்ச்சியை மட்டமாகக் கருதி அடியோடு வெறுத்துத் தூற்றுகின்றனர். ஆனால், அரக்கர்களின் இலங்கையிலேயே பட்டிமண்டபம் இருந்திருக்கிறது போலும்!

மிக்க விரைவைக் குறிக்க மான் வேகம்—மழுவேகம் என்பர் மான் மிகவும் விரைவாக ஓடும். மழு என்பது சிவனது எரியும் இரும்புப்படை; இதுவும் விரைவாகச் செல்லும் போலும்! அடுத்து, மனோ வேகம்—வாயுவேகம் என்பர். காற்று (வாயு)—சூறாவளிக் காற்று மிகவும் விரைவாக அடிக்கும். மின் ஒளி ஒரு விநாடிக்கு 1,80,000 கல் (மைல்) தொலைவு செல்லுமாம். எல்லாவற்றினும் மனமே மிகவும் விரைவாகச் செல்லும். அமெரிக்க—ஐரோப்பா—ஆப்பிரிக்கா — சிவலோகம் — வைகுண்டம் — என மிக விரைவில் உடனுக்குடன் — இடைவெளியின்றிச் செல்லக் கூடியது மனமே. அனுமன் தன் மனத்திற்கும் முன்னால்—விரைவாகச் சென்றானாம். "தன் மனத்தின் முன் செல்வான்" (136) என்பது கம்பரின் பாடல் பகுதி.

அகழிகள் மூன்று உண்டு என்றும், அவற்றுள் நடு அகழியை இலங்கையில் அனுமன் கண்டான் என்றும் கூறப்பட்டுள்ளது. "சொன்ன மூன்றினுள் நடுவணது அகழியைத் தொடர்ந்தான்" (143) என்பது பாடல் பகுதி. சொன்ன மூன்று என்பதற்கு வேறு விதமாகவும் பொருள் கூறலாமோ?. நகரை ஒட்டியுள்ளது மதில் அரண்; அதை அடுத்துள்ளது அகழி அரண்; அதற்கும் அப்பால் உள்ள

மணல் அரண்—காட்டு அரண்—மலை அரண் முதலியவை வெளி அரண்களாம் இம்மூவகை அரண்களுள் அகழி அரண் நடுவில் உள்ள தன்றோ? மற்றும், கடல் அரண்—நகர் நடு அரண்—அரண்மனையைச் சுற்றியுள்ள அரண் என்னும் மூன்றும் கூறலாமே!

இராவணன் கயிலை மலையின் கீழ் அகப்பட்டுக் கொண்டபோது, தன் கைகளாகிய நரம்புகளை மீட்டி நால்வகைப் பண்களைப் பாடினானாம்,

"அம்கை நரம்பினால் நாடி நால் பெரும் பண்ணும்
பாடினான்" (176)

நால்வகைப் பண்கள், பாலை—குறிஞ்சி—மருதம்—செவ்வழி—எனச் சொல்லப்படுகின்றன.

'மானிடர்' என்பதைக் கம்பர் பல பாடல்களில் 'மானுயர்' என்னும் சொல்லால் குறிப்பிட்டுள்ளார்,

(பறைதல்) 'பறயுக' என்னும் சொல்லுக்கு மலையாளத்தில் சொல்லுதல் என்னும் பொருள் உண்டு. தமிழில் உள்ள 'தல்' என்னும் தொழிற் பெயர் விகுதி போன்றது மலையாளத்தில் உள்ள 'உக' என்னும் விகுதி. இச்சொல்லை இந்தப் பொருளில் கம்பர் ஆண்டுள்ளார். மண்டோதரி குழல் சோர்ந்து வாய்வெருவிச் சில சொற்கள் சொல்கின்றாளாம்.

"மலர்க்கருங் குழல்சோர்ந்து வாய்வெரீ இச்சில
மாற்றங்கள் பறைகின்றாள்" (200)

இங்கே 'பறைகின்றாள்' எனக் கூறியிருப்பது காண்க.

தமிழ் என்னும் சொல்லை குளிர்ச்சி—இனிமை என்னும் பொருளில் கம்பர் ஆண்டுள்ளார். தென்றல் காற்று, தண்ணிய இனிய தமிழ் போன்றதாம். "தண் தமிழ்ப் பசுந்தென்றல்" (208) என்பது பாடல் பகுதி.

காட்சிப்படலத்தில், அகத்தியனைத் "தென் தமிழ் உரைத்தோன்" (129) என்று குறிப்பிட்டுள்ளார். வடமொழி என்பதன் மறுதலையாகத் 'தென் தமிழ்' எனப்பட்டது. ஆரணிய காண்டத்திலும், அகத்தியனை, "என்றுமுள தென் தமிழ் இயம்பி இசை கொண்டான்"

(அகத்தியப் படலம்—47)

என்று குறிப்பிட்டிருப்பதைக் காணலாம்,

உலகியலில் கூட்டம் மிக்கிருப்பதைக் குறிக்க 'எள் விழவும் இடம் இல்லை' என்பது உண்டு. அதாவது, வெற்றிடம் சிறிதும் இல்லையென வெற்றிடத்தின் மிகச் சிறிய அளவை இது குறிக்கின்றது. அனுமன் இலங்கையில் எல்லா இடங்களிலும் சுற்றித் திரிந்து சீதையைத் தேடினானாம். எள் விழும் சிறிய இடங்கூட அவன் போகாமல் விடவில்லையாம். இதனை "எள் உறையும் ஒழியாமல்" (232) என்னும் பாடல் பகுதியில் கம்பர் அறிவித்துள்ளார்.

(காட்சிப் படலம்)

கால அளவைக் குறிக்க இப்போது இத்தனை மணி அத்தனை மணி— என 'மணி' என்னும் சொல்லைப் பயன்படுத்துவது போலப் பண்டு நாழிகை, கன்னல் முதலிய சொற்களைப் பயன்படுத்தினர். இராமன், காட்டில், கரன்—தூடணன் முதலியோர் உள்ளிட்ட பதினாலாயிரம் படையை மூன்று கன்னல் நேரத்தில் வென்றானாம். இதை எண்ணிச் சீதை வெம்புகின்றாள் :

"இன்னல் அம்பர வேந்தற்கு இயற்றிய
பன்னலம் பதினா லாயிரம் படை
கன்னல் மூன்றில் களப்படக் கால்வளை
வில்நலம் புகழ்ந் தேங்கி வெதும்புவாள்" (22)

இரண்டரை நாழிகை கொண்டது ஒரு மணி(60) நிமிடம் என இப்போது கணக்கிடுகின்றனர். கன்னல் என்பதற்கு நாழிகை என்று பொருள் கொள்ளின், கன்னல் மூன்று

என்பது எழுபத்திரண்டு நிமிடத்தைக் குறிக்கும் எனவே, இராமன், இந்திரனுக்குத் தொல்லை தந்த கரன் முதலான பதினாலாயிரம் படையை எழுபத்திரண்டு நிமிடத்தில் அழித்து விட்டான் எனப் பொருள் கொள்ள வேண்டி வரும். எழுபத்திரண்டு நிமிடத்தில் உண்மையில் அழிக்க முடியாது. உயர்வு நவிற்சி அணியாக இவ்வாறு கூறப்பட்டுள்ளது. இந்த உயர்வு நவிற்சியின் அடிப்படையில். இன்னும் குறைந்த நேரத்தில் வென்றதாகக் கூற வேண்டும். அப்படிப் பார்த்தால், கன்னல் என்பதை, இன்னும் மிகச் சிறிய கால அளவாகக் கொள்ளவேண்டும்.

இராமன் குகனிடம், என் தம்பி இலக்குமணன் உன் தம்பி; நீ என் தோழன்; சீதை உன் கொழுந்தி என்று கூறினானாம்.

''ஆழ நீர்க் கங்கை அம்பி கடாவிய
ஏழை வேடனுக்கு எம்பி நின் தம்பி, நீ
தோழன், மங்கை கொழுந்தி எனச் சொன்ன
வாழி நண்பினை உன்னி மயங்குவாள்''—(23)

இலக்குமணன் குகனுக்குத் தம்பி எனின், குகன் இராமனுக்கும் தம்பியாகிறான். எனவே, குகனுக்கு இராமன் அண்ணன் ஆகிறான். அண்ணன் இராமனின் மனைவியாகிய சீதை குகனுக்கு அண்ணி ஆகிறாள். இங்கே, 'அண்ணி' என்னாமல், 'கொழுந்தி' எனக் கூறியதாகக் கம்பர் குறிப்பிட்டுள்ளார்.

தென்னார்க்காடு மாவட்டத்தில், ஒருத்திக்குத் தன் கணவனுடன் பிறந்தவர்களுள், கணவனைவிட மூத்த ஆடவர் மூத்தார் எனவும், கணவனை விட இளைய ஆடவர் கொழுந்தனார் எனவும், முறை வழங்கப்படுகின்றனர். ஒருவனுக்குத் தன் மனைவியுடன் பிறந்த மகளிர் அனைவரும் கொழுந்தி எனவும் முறை வழங்கப்படுகின்றனர். இதன்படி நோக்கின், சீதை, குகன் மனைவி

யுடன் பிறந்தவள் ஆகிறாள். சில குடும்பங்களில் அண்ணன்—தம்பிகள், அக்காள்—தங்கையைக் கட்டிக் கொள்வதுண்டு. அதாவது, அண்ணன் அக்காளையும். அவன் தம்பி அவள் தங்கையையும் மணப்பதுண்டு. இது மிக நெருங்கிய உறவாகிறது. இந்த அண்ணனுக்குத் தம்பி யின் மனைவி கொழுந்தியாகிறாள்; இந்தத் தம்பிக்கு அண்ணனின் மனைவி அண்ணியாவதோடு கொழுந்தியும் ஆகிறாள். இத்தகைய மிகுந்த பிணைப்பிலேயே குகனுக்குச் சீதை அண்ணியாவதன்றிக் கொழுந்தியும் ஆகிறாள். கம்பரின் இந்தச் சொல்லாட்சியைக் நோக்குங்கால், இராமனும் குகனும் மிகவும் நெருங்கியவர்கள் ஆகிறார்கள். இந்தப் நயப்பொருள் கம்பரின் பாடலிலே அமைந்துள்ளது. கொழுந்து—இளமை என்னும் பொருளில் கொழுந்தி கொழுந்தனார் என்னும் பெயர் ஆட்சிகள் மலர்ந்தன.

இராவணன் சீதையைக் கண்டு பேச அசோகவனத் திற்கு வந்த போது இருந்த அவனது உருவத்தோற்றம் பற்றிப் பலவாறு கம்பர் புனைந்துரைத்துள்ளார். அவன் மார்பில் பூணூல் இருந்ததாகக் கூறியுள்ளார். முகிலைக் கிழித்து இடையே மின்னும் மின்னலைப்போல, அவனது கரிய மார்பின் நடுவில் பூணூல் மின்னிற்றாம். இது பொன் னாலான பூணூலாகும்.

> ''சூல்நிறக் கொண்மூக் கிழித்து இடைதுடிக்கும்
> மின் என மார்பில் நூல் துளங்க''— (78)

என்பது பாடல் பகுதி. இராம—இராவணப் போரை, ஆரியர்—திராவிடப் போர் என்பர் சிலர். அதாவது, இராமனை ஆரியனாகவும் இராவணனைத் திராவிடனாக வும் இவர்கள் கூறுவர். இதை எதிர்த்து, இராவணன்தான் ஆரியன் என்று கூறுவர் சிலர். இவ்வாறு கூறுபவர் சொல்லும் காரணங்களாவன ;

1. இராமன் பூணூல் அணிந்திருக்கிறான்.

2. காட்டில் சூர்ப்பணகை இரமானிடம், தான் பிரமனின் கொள்ளுப் பேர்த்தி— அந்தண வகுப்பினள் எனக் கூறியமை.

"பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்வி"
(சூர்பணகைப்படலம்—32)

என்பது பாடல் பகுதி.

3. இராமன் சூர்ப்பணகையை நோக்கி, "பெண்ணே! உன் குலமும் என் குலமும் ஒத்து வராது; நீ அந்தணர் குலத்தினள்; யானோ அரசர் குலத்தினன்" என்றான்.

"சுந்தரி, மரபிற்கு ஒத்த
தொன்மையின் துணிவிற்று அன்றால்;
அந்தணர் பாவை நீ; யான்
அரசரில் வந்தேன் என்றான்" (42)

என்பது பாடல் பகுதி.

4. பின் சூர்ப்பணகை, இராமனை நோக்கி, "என் தந்தை வேதம் ஓதும் மறையவர் குலத்தினன்" என்றாள்.

"ஆரண மறையோன் எந்தை" (43)

என்பது பாடல் பகுதி.

5. காட்சிப் படலத்தில், இராவணனுக்கு இணங்கு மாறு அரக்கியர் சீதையை வற்புறுத்தியபோது, 'அவன் நான்முகன் மகனின் பேரன்—ஆயிரம் வேதம் வல்லவன்' என்று அறிவுறுத்தினராம்.

"வையம் தந்த நான்முகன் மைந்தன் மகன் மைந்தன்,
ஐயன், வேதம் ஆயிரம் வல்லான்..." (149)

6. அக்ககுமாரன் வதைப் படலத்திலும் இராவணன் பிரமனின் கொள்ளுப்பேரன் என்று குறிப்பிடப்பட்டுள்ளது,

"அயன் மகன் மகன் மகன்" (48)

என்பது பாடல் பகுதி. அயன் மகன் புலத்தியன்-புலத்தியன் மகன் விச்சிரவசு-விச்சுரவசுவின் மகன் இராவணன்.

இவ்வாறு உள்ளவை சிலவற்றைச் சான்றாகக் காட்டி, இராவணன் ஆரியன் என்று சிலர் கூறுவர். இராவணன் அரக்கன் என்றும் சொல்லப்படுகிறான். ஆக, இராவணன், மனித இயல்பிற்கு அப்பாற்பட்டவன் என்பது புலனாகிறது.

சூரியர் பன்னிருவர் என்பது புராணச் செய்தி. "வெங்கதிர்ச் செல்வர் பன்னிருவரினும்" (காட்சிப் படலம்—81) என்பது பாடல் பகுதி.

இராகு கேதுவாகிய பாம்பு திங்களைக் கவ்வுவது போல், அரக்கியர் சீதையைச் சுற்றியிருந்தனராம்.

"பொங்கு அரா நுங்கிக் கான்ற
தூய வெண்மதியம் ஒத்த தோகை" (147)

என்பது பாடல் பகுதி. இதில் 'திங்கள் பிடிப்பு' (சந்திர கிரகணம்) குறிப்பிடப்பட்டுள்ளது.

வீடணன் மகள் பெயர் திரிசடை. கம்பர் 'முச்சடை' என்று அவளைக் குறிப்பிட்டுள்ளார். "அன்ன முச்சடை என்பாள்" (153) என்பது பாடல் பகுதி. கம்பர் கூடியவரையிலும், வடமொழிப் பெயர்களைத் தமிழ்ப் படுத்திக் காட்டியுள்ளார். இரணியாட்சனைப் பொற்கணான் என மொழி பெயர்த்துள்ளார். மானிடர் என்பதை மானுயர் என்று கூறியிருப்பது போல், தசமுகன் என்பதைத் தயமுகன் என்கிறார். இலட்சம் என்பதை இலக்கம் என்றும், அக்ஷன் என்பதை அக்கன் என்றும் கூறியுள்ளார். விபீஷணனை வீடணன் என்கிறார். இவ்வாறு ஒலிப்பிலும் மாறுதல் செய்துள்ளார். இத்தகைய மாற்றங்கள் பலவற்றைக் கம்பரிடம் காணலாம். இக்காலத்தினர்க்கு வழிகாட்டியாக—முன்னோடியாக அக்காலத்திலேயே கம்பர் விளங்கியிருக்கிறார். சிலர் இன்றும் தயங்குகின்றனரே!

அனுமன் சீதையிடம் வானரப் படையின் அளவைக் கூறுகிறான்: "எழுபது வெள்ளம் கொண்ட எண்ணன"

(உருக் காட்டு படலம்—32) என்பது பாடல் பகுதி. பின்னும் ஒரு பாடலில் "வெள்ளம் இரண்டினொடு" (36) என்றும் மற்றும் ஒரு பாடலில் "வெள்ளம் எழுபது உள தன்றோ" (115) என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

வெள்ளம் என்பது ஒரு பேரெண்ணைக் குறிக்கிறது. அதன் அளவை இப்போது கணித்தறிய முடியவில்லை. பண்டைக் காலத்தில் அதற்குத் தக்க அளவுப் பொருள் இருந்திருக்கும். இப்போதும் உலக வழக்கில், அது மிக—மிக—மிகுதி என்னும் பொருளில் 'அது வெள்ளம்' என்னும் வழக்காற்றைக் கேட்கலாம். நீரின் பெருமிகுதியையும் வெள்ளம் என்கிறோம். மலையாள மொழியில் வெள்ளம் என்பது நீரைக் குறிக்கிறது. இந்த வழக்காறு மலையாளப் பகுதியின் நீர்ப் பெருவளத்தைக் குறிக்கிறது. வீணாய்க் கடலில் கலக்கும் கேரள ஆறுகளைத் தமிழகத்தின் பக்கம் அருட்கண் செலுத்துமாறு தமிழகம் வேண்டுவது அறிந்ததே. வெள்ளத்திற்கு எதிர் மறையான சிறிய அளவு 'இம்மி' என்பது. சுமார் முப்பத்தையாயிரத்தில் ஒரு பகுதிக்கு 'இம்மி' என்று பெயராம்.

மக்கள் உருவத்தைப் புனைவதில் (வருணிப்பதில்) அடி முதல் முடிவரை (பாதாதிகேசம்)யாகவும், முடி முதல் அடி வரை (கேசாதி பாதம்) யாகவும் செய்வதுண்டு. அனுமன் சீதையிடம், இராமனின் உருவ அடியாளத்தை அடிமுதல் முடி வரையிலும் (பாதாதி கேசம்) ஆகத் தெரிவித்தானாம். "அடி முதல் முடியின் காறும் அறிவுற அனுமன் சொன்னான்" (38) என்பது பாடல் பகுதி.

இராமன் கொடுத்தனுப்பிய கணையாழியைச் சீதை அனுமனிடமிருந்து பெற்றதும், விழி இழந்தவர் விழி பெற்றது போல் மகிழ்ந்தாளாம்:

"உழந்து விழி பெற்றது ஓர் உயிர்ப் பொறையும் ஒத்தாள்" (65) இங்கே, விழி இழந்தவர் 'உயிர்ப்பொறை' என்னும் தொடரால் குறிக்கப்பட்டுள்ளார். உயிர்ப்பொறை

என்றால் உயிர்ச்சுமை—உயிர்ச்சுமைதாங்கி—என்பது பொருளாம். கண்ணில்லார்க்கு உயிர் ஒரு சுமையாம். அதாவது, அவர்கள் உயிர் இல்லாதார் போன்றவர்களாம் வீணே உயிரைச் சுமந்து கொண்டு வருந்துகிறார்களாம். இங்கே, கம்பர் கண்ணில்லாரின் இரங்கத் தக்க எளிய நிலையை நன்கு புனைவு செய்துள்ளார்—உயிரற்ற அஃறிணைப்போல் கூறியுள்ளார்.

"பெரிய கடலைச் சிறிய உருவால் எவ்வாறு கடந்தாய்? தவத்தின் வலிமையாலோ—அல்லது ஏதாவது சித்தியினாலோ" என்று சீதை அனுமனை வினவினாள்:

"இத்துணைச் சிறியதோர் ஏணில் யாக்கையை;
தத்தினை கடல்; அது தவத்தின் ஆயதோ?
சித்தியின் இயன்றதோ? செப்புவாய் என்றாள்" (98)

அந்தக் காலத்திலேயே, சித்துத் திருவிளையாடலில் நம்பிக்கை இருந்துள்ளமையும் சித்தர்கள் இருந்தமையும் இதனால் புலனாகலாம்.

அனுமன் சீதையிடம் வானரப் படையின் மிகுதியைக் கூறுகிறான். அரக்கர் படை, வானரப் படைக்கு உறையிடவும் காணமுடியாது—என்கிறான்.

"இராமன்கை அம்பின் உதவும் படைத்தலைவர்
அவரை நோக்கின், இவ் வரக்கர்
வம்பின் முலையாய்! உறையிடவும் போதார்;
கணக்கு வரம்பு உண்டோ?" (117)

என்பது பாடல் பகுதி. 'உறையிடுதல்' என்பது எளிதில் புரிந்து கொள்ள முடியாத ஓர் அரிய சொல்லாட்சி. பேரெல்லையை அளக்கப் பயன்படுத்தும் ஓர் அடையாளக் குறிக்கு உறை என்பது பெயராகும். இதற்குச் சிறு விளக்கம் வேண்டும்; நூறாயிரம் பொருள்களை எண்ணிக் கணக்கிடுபவர், ஆயிரம் ஆயிரம் ஆக எண்ணி ஒவ்வோர் ஆயிரத்தையும் தனியாக வைப்பர். முதல் ஆயிரம் எண்ணி

யதும் ஒன்று என ஒரு கோடு போடுவர் இரண்டாவது ஆயிரம் எண்ணியதும் இரண்டு கோடுகள் போடுவர். பத்தாயிரம் எண்ணியதும் பத்துக்கோடுகளோ—பத்து என்னும் எண்ணோ போட்டு வைப்பர். நூறாவது ஆயிரம் எண்ணியதும் நூறு கோடுகள் போடாவிடினும் 100 என்னும் எண்ணையிட்டு வைப்பர்.

இந்தச் சிறு சிறு குறியீடுகளைக் கொண்டு, எத்தனையாவது ஆயிரம்—எத்தனையாவது ஆயிரம்—என அறிந்து கொள்ளலாம், இவ்வாறு சிறு குறியிடுவதற்குத்தான் உறையிடுதல் என்று பெயராம். மிகப் பரந்த அளவில் உள்ள பெரிய வானரப் படைகளை எண்ணுவதற்கு, அரக்கர் படை, ஒன்று—இரண்டு—நூறு எனச் சிறு குறியீடு போடவும் காண முடியாது என்பது கருத்தாகும். இந்தக் குறியிடுதல் என்னும் பொருளில், உறையிடுதல் என்பது, பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் இயற்றிய திருவேங்கடத்தந்தாதி என்னும் நூல் பாடல் (34) ஒன்றிலும் கூறப்பட்டுள்ளது.

> ''முறையிடத் தேவர் இலங்கை செற்றான்,
> முதுவேங்கடத்துள்
> இறை,இடத்தே சங்குடையான், இனிஎன்னை
> ஆண்டிலனேல்,
> தரையிடத்தே உழல் எல்லாப் பிறவி
> தமக்கும் அளவு
> உறையிடத் தேய்ந்திடும், இவ் அந்தி வானத்து
> உடுக்குலமே''

என்பது பாடல், திருமால் அருளானேல், எடுத்த பிறவிகளே யன்றி இன்னும் பற்பல பிறவிகள் எடுக்க வேண்டும்—என்பது பாடலின் கருத்து. கோடிக் கணக்கில் பிறவிகள் எடுக்க வேண்டும். பிறவிகளின் எண்ணிக்கையை அளந்து உறையிட, விண்ணில் உள்ள விண்மீன்கள் போத

மாட்டா—என்கிறார். மாணிக்கவாசகர் தமது திருவாசகம்-திருவண்டப் பகுதியில்,

"அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன" (1, 2)

எனக் கோளங்கள் நூற்றொரு கோடிக்கு மேல் உள்ளனவாகக் கூறியுள்ளார். ஒவ்வொரு விண்மீனும் ஒவ்வொரு கோளமாகும். குறிப்பிட்ட பிறவிகளின் மிக்க எண்ணிக்கைக்கு ஓர் உடுவை(விண்மீனை) உறையிடினும், எல்லாப் பிறவிகட்கும் உறையிட விண்மீன்கள் போதமாட்டா என்கிறார். இவ்வாறே பத்து வானரர்கட்கு ஓர் அரக்கர் என்ற விகிதத்தில் உறையிடினும் வானரர்கள் மிக்கிருப்பர்; உறையிட அரக்கர்கள் அனைவருமே போதமாட்டார்.

கம்பர் மாதம் என்பதைத் திங்கள் என்னும் தமிழ்ச் சொல்லாலேயே பல இடங்களிலும் குறிப்பிட்டுள்ளார். கன்னட மொழியில் மாதம் என்பதற்குத் திங்கள் என்னும் சொல்லே பயன்படுத்தப்படுகிறது.

உலகம் (7+7=) பதினான்கு உலகம் இருப்பதாகச் சில இடங்களில் கூறப்பட்டுள்ளது. (சூடாமணிப் படலம்:-)

"ஏழுக்கு ஏழ் உலகு எல்லாம்" (50) என்பது பாடல் பகுதி.

"ஏழுக்கு ஏழ் அடுக்கிய உலகங்கள்"—
(இலங்கைஎரியூட்டு படலம்—38)

அனுமனிடம் சீதை தந்த சூடாமணி, கோள்களின் வேந்தனாகிய ஞாயிறு போல் ஒளி வீசியதாம்:

"கூந்தல் மென்மழை கொள் முகில்மேல் எழுகோளின்
வேந்தன் அன்னது..." (சூடாமணிப்படலம்—82)

ஞாயிறு கோள்களுக்கெல்லாம் தலைவன் என்பதாகக் கம்பர் கூறியிருப்பது, இன்றைய வான அறிவியலுக்கும்

பொருத்தமாயுள்ளது. ஞாயிறு குடும்பத்தைச் சேர்ந்தனவும் ஞாயிற்றிலிருந்து பிரிந்து வந்தனவும் — ஞாயிற்றின் ஒளியைத் தாம் பெற்று மிளிர்வனவும்—ஞாயிற்றைச் சமதளத்தில் இடப்பக்கமாகச் சுற்றி வருவனவும் ஆகிய ஒன்பது கோள்கள் உள்ளன. அவை ஏறு வரிசையில் வருமாறு:—

1. புதன் (Mercury), 2. வெள்ளி (Venus—சுக்கிரன்) 3. பூமி (Earth), 4. செவ்வாய் (Mars), 5. வியாழன் (Jupiter-குரு), 6. சனி (Saturn), 7. யுரேனஸ் (Uranus) 8. நெப்டியூன் (Neptune), 9, புளூட்டோ (Pluto) என்பனவாம். பூமியின் துணைக் கோளாகிய திங்களும், சொந்தவீடு இல்லாதன வாகக் கூறப்படும் இராகுவும் கேதுவுங்கூட ஞாயிற்றையே தலைவனாகக் கொண்டுள்ளவை.

இந்தக் கருத்துக்களையெல்லாம் உள்ளடக்கி, ஞாயிற்றைக் 'கோளின் வேந்தன்' எனக் கம்பர் மொழிந் துள்ளார்.

சூடாமணி ஞாயிறு போல் ஒளி வீசிற்றாம். உள்ளே வர அஞ்சி வெளியிலேயே சுற்றிய ஞாயிறு அஞ்சாமல் நகருக்குள் வந்து விட்டானோ என்று அரக்கர்கள் ஐயுற்றனராம். ஆண் சக்கரவாகப் பறவையும் பெண் சக்கரவாகப் பறவையும் உடலுறவு கொண்டனவாம். குவிந்திருந்த தாமரைகள் மலர்ந்தனவாம். ஞாயிறு காந்தக் (சூரிய காந்தக்) கற்கள் வெப்பம் கக்கினவாம்:

''மஞ்சலங்கு ஒளியோனும் இம்மா நகர் வந்தான்,
அஞ்சலன் என வெங்கண் அரக்கர் அயிர்த்தார்;
சஞ்சலம்புரி சக்கர வாக முடன்தாழ்
கஞ்சமும் மலர்வுற்றன; காந்தின காந்தம்'' (81)

சக்கரவாகப் புட்கள் இரவில் இரைதேடிவிட்டுப் பகலிலே உடல் உறவு கொள்ளும் என்னும் செய்தி இப்பாடலால் அறியப்படும்.

அனுமன் அசோகவனத்தை அழித்தபோது, பன்மணி பதித்து அணிசெய்த மரங்கள் வானளவிச் சென்று, இந்திரவில் போன்ற ஒளி யுண்டாக்கி வானவிமானம் போல் வானத்தில் மிதந்தனவாம்:

''தேனுறை துளிப்ப, நிறைபுள் பல சிலம்ப,
பூநிறை மணித்தரு விசும்பி னிடைபோவ,
மீன்முறை நெருக்க, ஒளி வாளொடு வில் வீச,
வானிடை நடாய நெடு மானம் எனல் ஆன''
(பொழில் சிறுத்த படலம்—21)

வானவில்லும் (Rainbow) வான ஊர்தியும் இப்பாடலில் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. கம்பர் கண்ட வான ஊர்தி என்னவாயிருந்ததோ—தெரியவில்லை.

மற்றொரு பாடலில் இந்திரவில் புனையப்பட்டுள்ளது. அனுமனால் எறியப்பட்ட ஒளியுள்ள மரங்கள், வானில் இரவில் இந்திரவில் போல் தோன்றின. இவ்வாறு இரவில் வானவில் தோன்றுவது, அரக்கர்கள் அழிவர் என்பதைக் காட்டும் தீய நிமித்தமாகும்.

''புல்லும் பொன்பணைப் பல்மணிப் பொன்மரம்
சொல்லும் இப்பொழுதே எனும் கொள்கையால்
எல்லில் இட்டு விளக்கிய இந்திரன்
வில்லும் ஒத்தன; விண்உற வீசின'' (36)

திங்களை விண்மீன்களின் தலைவன் எனக் கம்பர் கூறியுள்ளார். ''உடுவின் கோமான்'' (40) என்பது பாடல் பகுதி. திங்கள் ஞாயிற்றின் ஒளி பெற்றுப் பூமியைச் சுற்றும் ஒரு சிறிய துணைக்கோள் ஆகும். விண்மீன்களோ, வெகு தொலைவில் இருப்பதால் ஒவ்வொன்றும் சிறியனவாகத் தெரியினும், உண்மையில் ஞாயிறு போன்ற பெரிய கோள்களாகும். இந்த வான இயல் உண்மை, அந்தக் காலத்தில் கம்பருக்குத் தெரியாமற் போனதில் வியப்பில்லை.''

பார்ப்பதற்குத் திங்கள் விண்மீன்களைவிடப் பெரிதாய்த் தெரிவதால் அதனை 'உடுவின் கோமான்' என்றார் கம்பர்.

'உடுவின் கோமான்' என்பதற்கு, இன்னொரு விதமாக வும் பொருள் கூறிக் கம்பரைக் காப்பாற்ற முடியும். அசுவனி, பரணி முதல் இரேவதிவரையுள்ள இருபத்தேழு விண்மீன் களையும் (நட்சத்திரங்களையும்) திங்களின் மனைவிமார் கள் என்று புராண வரலாறு கூறுகிறது. இவற்றுள் 'உரோகிணி' விண்மீன்மேல் திங்களுக்கு விருப்பம் மிகுதி—அதனால் தொல்லை ஏற்பட்டது என்றெல்லாம் கதை கூறப் படுகிறது. இந்த வகையிலும் 'உடுவின் கோமான்' என்னும் பெயருக்குத் திங்கள் பொருத்தமாவதை அறியலாம். இது குறித்துப் புலவர் ஒருவர் பின்வருமாறு ஒரு பாடல் பாடினார்:

''வான் உலாவும் சோமனுக்கோ தையல் இருபத்தேழு;
என் இடை உலாவும் சோமனுக்கோ தையல் எண்ணித்
தொலையாது'',

என்பது அவரது பாடல். சோமன்-திங்கள், துணி. தையல்-பெண், கிழிந்ததைத் தைத்திருக்கும் தையல். இது ஒரு தனிப் பாடல். 'உடுவின் வேந்தன்' என்னும் பெயர் திங்களுக்குச் சூடாமணி நிகண்டில் (தேவர் பெயர்த் தொகுதி—58) கூறப் பட்டுள்ளது.

சம்புமாலி என்னும் அரக்கர் படைத்தலைவனுடன் வந்த நால்வகைப் படைகளின் மிகுதியைக் கம்பர் புனைவு செய்திருப்பது சிறப்பாயுள்ளது. தேர்கள் ஐந்தாயிரமும்+ ஐந்தாயிரமும் கொண்ட பத்தாயிரமாம்; யானைகள் தேர்களைப் போல் இரு மடங்காம்—இருபதாயிரமாம்; குதிரைகள் யானைகளைப் போல் இருமடங்காம்—நாற்பதாயிரமாம்; காலாட் படை குதிரைகளைப் போல் இருமடங்காம்—எண்பதாயிரமாம். இவை சம்புமாலியுடன் சென்றனவாம்:

"ஆயிரம் ஐந்தோடைந்தாம் ஆழியந் தடந்தேர்;
அத்தேர்க்கு
ஏயின இரட்டியானை; யானையின் இரட்டி பாய்மா;
போயின பதாதி சொன்ன புரவியின் இரட்டி போலாம்.
தீயவன் தடந்தேர் சுற்றித் தெற்றெனச் சென்ற
சேனை"
(சம்புமாலி வதைப் படலம்—10)

தமிழகத்தில் வள்ளுவர் ஆனைமேல் அமர்ந்து முரசு அறைவதைக் கம்பர் இலங்கையிலும் நடந்ததாகக் கூறி யுள்ளார்:

"ஆனைமேல் முரசு அறைக என வள்ளுவர்
அறைந்தார்"
(பஞ்ச சேனாதிபதிகள் வதைப் படலம்—6)

இலங்கை வெல்லப்பட்டதும், புறப்படுமாறு முரசு அறைந்து தெரிவிக்கும்படி வள்ளுவரைச் சுக்கிரீவன் முடுக்கினானாம்:

"எங்கும் முழுமுரசு எற்றிக் கொற்ற வள்ளுவர் முடுக்க."
(திருவடி தொழுத படலம்—50)

என, இரண்டிடங்களில், வள்ளுவர் முரசறைவது கூறப் பட்டுள்ளது.

அரக்கரை வீழ்த்திய அனுமன், ஆம்பல் மலரின் பகைவனாகிய ஞாயிறுபோல் விளங்கினானாம்:

"பாம்பென நீங்கினர், பட்டனர் வீழ்ந்தார்;
ஆம்பல் நெடும்பகை போல் அவன் நின்றான்"
(பஞ்சசேனாதிபதிகள் வதைப் படலம்—61)

திங்கள் தோன்றின் தாமரை குவிகிறது—ஆம்பல் மலர் கிறது. ஞாயிறு தோன்றின் தாமரை மலர்கிறது—ஆம்பல் குவிகிறது. அதனால், பிங்கல முனிவர் தம் பிங்கல நிகண்டில் திங்களைக் 'குமுதசகாயன்' என்றும், மண்டல

புருடர் தம் சூடாமணி நிகண்டில் திங்களைக் 'குமுத நண்பன்' என்றும் கூறியுள்ளனர். தனிப்பாடல் திரட்டுச் செய்யுள் ஒன்றில்,

"காமக் கருத்தா குமுதநாதன் கங்குல் வரக்கண்டும்"

எனத் திங்கள் குமுதநாதன் எனக் குறிப்பிடப் பட்டுள்ளது. குமுதமும் ஆம்பலும் ஒன்றே. ஆம்பலுக்கு அதை மலரச் செய்யும் திங்கள் நாதனாகவும்— சகாயனாகவும்— நண்பனாகவும் புலவர் சிலரால் கூறப்பட்டுள்ளான். அதே ஆம்பலுக்கு, அதைக் குவியச் செய்யும் ஞாயிறு பகை வனாகக் கம்பரால் இப்பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளான் கம்பர் ஞாயிற்றையும் திங்களையும் பெரும்பாலும் ஆண் பாலராகவே கூறியுள்ளார்.

உலகம் அழியும் ஊழிக்காலம் பற்றிக் கம்பர் பல இடங்களில் கூறியுள்ளார். அனுமன் அரக்கர்களால் பிணிக்கப்பட்ட போது சீதை வருந்தினாள்: கணையாழி காட்டி என் உயிரைக் காத்த அனுமனுக்கு 'ஊழி காட்டுவேன்' என்று கூறினேனே அது பொய்த்து விடும் போலும் — என வருந்தினாள்:—

"ஆழி காட்டி என் ஆர் உயிர் காட்டினாய்க்கு
ஊழி காட்டுவென் என்றுரைத்தேன்."

(—பிணி வீட்டு படலம்-33.)

ஊழி காட்டுவென் என்றால், உலகம் அழியும் ஊழிக் காலம் வரையும் நீ வாழ்வாயாக என்று வாழ்த்தியதாகப் பொருள் கொள்ள வேண்டும். உலகியலில் கூட, உலகம் உள்ள அளவும் வாழ்க— என உரைப்பது உண்டன்றோ?

உலகியலில், கணவனை இழந்த பெண்டிரின் தாலியைக் களைதல் என்னும் ஒரு நிகழ்ச்சி குறிப்பிட்ட ஒரு நாளில் நடக்கும். இதற்குத் 'தாலி வாங்குதல்' என்று பெயர் கூறுவர். 'தாலி அறுத்தல்' என்பதாகச் சிலர் சொல்வர். 'என் தாலி அறுக்கிறான்' என்று சினத்தில்

சிலர் கூறுவர். தாலி அறுக்கும் நிகழ்ச்சி மங்கலம் இல்லாத நிகழ்ச்சி. அதையும் 'தாலி அறுத்தல்' என்று குறிப்பிடின் மங்கலம் இன்மைக்கு மேலும் மங்கலம் இல்லாத நிகழ்ச்சியாகும். எனவே 'தாலி வாங்குதல்' என்பது நாகரிகமான ஒரு வழக்காறு, கம்பரும் 'தாலி வாங்குதல்' என்றே கூறியுள்ளார்:

"திரு வாங்கலாம் என்று அழும் மாதரார் பலர்" (5)

இங்கே திரு என்பது தாலியாகும். தாலியைத் திருநாண், திருமங்கல நாண் என்றெல்லாம் குறிப்பிடுவதுண்டு மகளிர்க்குத் தாலியே பெருஞ்செல்வம் என்பதைத் 'திரு' என்பது அறிவிக்கிறது.

கம்பர் அமைச்சர்களை (மந்திரிகளை) 'மந்திரத்து அளவறு முதியரும்' (20) என அகவை முதிர்ந்தவர்களாகக் குறிப்பிட்டிருப்பது எண்ணத் தக்கது. மற்றும், 'சீதையை 'மிதிலை நாடி' (20) என்று குறிப்பிட்டுள்ளார். 'மிதிலை நாடன்' என்னும் ஆண்பாலுக்கு நேரான பெண்பால் 'மிதிலை நாடி' என்பது. சீதை மிதிலை நாட்டாள் ஆதலின், அவளை 'மிதிலை நாடி' எனக் கம்பர் குறிப்பிட்டிருப்பது சுவையாய் உள்ளது. மிதிலை நாடி என்பதன் சுருக்கம் 'மைதிலி' என்பது. மிதிலையில் பிறந்தவள் மைதிலி.

வெகு விரைவில் என்னும் பொருளில் 'ஏ' எனா முன் (113) எனவும், 'ஏ' எனும் அளவில் (திருவடி தொழுத படலம்-30) எனவும், 'ஏ' என்னும் ஒலிக் குறிப்பைக் கம்பர் பயன்படுத்தியுள்ளார். 'ஆம்' என்பதற்குள், 'ஊம்' என்பதற்குள — என்றெல்லாம் மக்கள் கூறுவதுண்டு. 'அம்' எனும் அளவில் ஆயிரம் பாடல்களும், 'இம்' என்னும் அளவில ஈராயிரம் பாடல்களும் பாடுவார் என்றெல்லாம் சொல்லும் வழக்கு உண்டு.

பன்னிரண்டு நாள் என்பதற்குப் பன்னிரண்டு பகல் என்று கம்பர் கூறியுள்ளார்.

> "பன்னிரு பகலில் சென்று தென்திசைப்
> பரவை கண்டார்."
>
> —திருவடி தொழுத படலம்-52.

இவ்வாறாக, சிறப்பான சொல்லாட்சிகளையும் தொடர் ஆட்சிகளையும், சிறப்பான கருத்தாளுகையையும் கையாண்டு கம்பர் காப்பியத்தை நயப்படுத்திக் கற்போர்க்குச் சுவை பயக்கச் செய்துள்ளார். இங்கே மற்றுமொரு சிறப்பான கருத்தாட்சியை மறப்பதற்கில்லை

அனுமன் இராவணனிடம், இராமன்—சுக்கிரீவன் நட்பு எவ்வாறு ஏற்பட்டது என்பதை விளக்குகின்றான்:

சுக்கிரீவன், தன் மனைவி உருமை என்பாளை அண்ணன் வாலி பற்றிக் கொண்டு தன்னையும் துரத்தி விட்டதால் இராமனது நட்பைப் பெற்றுத் தனக்கு உதவி புரியும்படி வேண்டினான். உடனே இராமன் வாலியிடத்திலிருந்து அரசையும் உருமை என்பாளையும் மீட்கா முன்பே, அரசையும் உருமையையும் சுக்கிரீவனுக்குத் தந்து விட்டதாக உறுதி கூறிப் பின்பு வாலியைக் கொன்றான்:

> "ஓவியர்க்கு எழுத ஒண்ணா உருவத்தன்
> உருமை யோடும்
> கோ இயல் செல்வம் முன்னே கொடுத்து
> வாலியையும் கொன்றான்"—
>
> (பிணி வீட்டு படலம்-81)

என்பது பாடல் பகுதி. வாலியைக் கொல்லுதற்கு முன்பே சுக்கிரீவனுக்கு ஆட்சியைக் கொடுத்து விட்டதாக இராமன் உறுதி கூறினான்— என்னும் கருத்தாளுமையைக் கம்பர், தமக்கும் முன்னோடிகளான தொல்காப்பியர், கழகப் (சங்கப்) புலவர்கள் முதலியோரிடம் கற்றுக் கொண்டிருப்பார் எனத் தோன்றுகிறது; அவர் கல்வியில் பெரியவ

ராயிற்றே! தொல்காப்பியம்— பொருளதிகாரம்— புறத்திணையியலில்,

''கொள்ளார் தேஎம் குறித்த கொற்றமும்'' (12-1)

என்பதாக ஒரு கொற்றம் கூறப்பட்டுள்ளது. இதற்கு உரையாசிரியர் நச்சினார்க்கினியர்,

''பகைவர் நாட்டினைத் தான் கொள்வதற்கு முன்னேயும் கொண்டான் போல வேண்டியோர்க்குக் கொடுத்தலைக் குறித்த வெற்றியும்— 'கழிந்தது பொழிந்தென' என்னும் புறப்பாட்டும்...... 'ஆனா ஈகை அடுபோர்' என்னும் புறப்பாட்டும் அது. இராமன் இலங்கை கொள்வதன் முன் வீடணற்குக் கொடுத்த துறையும் அது''—

என்று இலக்கிய மேற்கோள்களுடன் உரை எழுதியுள்ளார். புறப்பாட்டு என்பது புற நானூறு.

அவர் காட்டியுள்ள 'கழிந்தது பொழிந்தென' (203)

என்னும் தொடங்கும் புறநானூற்றுப் பாடல், 'சேரமான் பாமுளூர் எறிந்த நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி' என்னும் சோழ மன்னனைப் பற்றி, 'ஊன் பொதி பசுங் குடையார்' என்னும் புலவர் பாடியது.

பகைவரது கோட்டை அவரிடம் இருக்கும்போதே— அதை நீ வெல்வதற்கு முன்பே, பாணர்க்குப் பரிசாகக் கொடுக்கும் வள்ளன்மை உடையவன் நீ! —என்று புலவர் சோழனை நோக்கிக் கூறியுள்ளார்:

''ஒன்னார் ஆரெயில் அவர்கட் டாகவும் நுமதெனப்

பாண் கடன் இறுக்கும் வள்ளியோய்'' (203: 9-11.)

என்பது பாடல் பகுதி. அடுத்து 'ஆனா ஈகை அடுபோர்' (42) என்று தொடங்கும் புறநானூற்றுப் பாடல், 'சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை'க் கோவூர் கிழார் பாடியது:

"சோழ மன்னா! புலவர்கள் உதவி வேண்டி உன்னை நோக்கினர். நீயோ (அவர்கட்குக் கொடுத்து விட்டதான பொருளில்) சேரர் நாட்டையும் பாண்டியர் நாட்டையும் நோக்கினாய்!" என்று புலவர் கூறியுள்ளார்.

"புலவ ரெல்லாம் நின்நோக் கினரே
நீயே..............................................

மாற்றிரு வேந்தர் மண்ணோக்கினையே" (42: 21-24)

என்பது பாடல் பகுதி. மற்றும், மாங்குடி மருதனார் பாடிய மதுரைக் காஞ்சி என்னும் நூலில் உள்ள—

"அரிய எல்லாம் எளிதினில் கொண்டு
உரிய எல்லாம் ஓம்பாது வீசி"— (145, 146)

என்னும் பகுதிக்குப் பின்வருமாறு நச்சினார்க்கினியர் உரை எழுதியுள்ளார்:

"பிறர்க்கு அரிய நுகர் பொருள்கள் எல்லாம் எளிதாக நின் ஊரிடத்தேயிருந்து மனத்தால் கைக்கொண்டு, அப்பொருளையெல்லாம் நினக்கென்று பாதுகாவாது ஊரிடத்தேயிருந்து பிறர்க்குக் கொடுத்து—"

என்பது உரைப் பகுதி. (சிலர் பிறர் பொருள்களை அவர்கள் கொடுக்காமலேயே தாங்களாகவே திருடிக் கொள்கிறார்களே— அவர்களும் தொல்காப்பியத்தையும் கழக இலக்கியங்களையும் பின்பற்றுகின்றனரோ— அந்தோ!)

கம்பர் மேற்கூறிய பாடல்களையெல்லாம் படித்தவராதலின், அந்தக் கருத்தைத் தம் பாடலிலும் புகுத்தியுள்ளார் போலும்! இது சிறந்ததொரு கருத்தாளுமையன்றோ!

நச்சினார்க்கினியர் இராமன் செயலை எடுத்துக் காட்டியிருப்பதைக் கொண்டு, கம்பராமாயணம் புலவர் பலராலும் பெரிதும் பயிலப்பட்டு வந்துளது என்னும் உண்மை புலனாகும்.

# 4. கருத்து வெளியீட்டில் புதுமை

கம்பர் கருத்துகளை வெளியிடுவதில் சிறப்பான புதுமைகளைக் கையாண்டுள்ளார். இந்த அமைப்பு படிப்பதற்குச் சுவை பயக்கிறது. சில எடுத்துக் காட்டுகளைத் தரின் இது விளங்கும்.

**(ஊர் தேடு படலம்)**

புகழை வெண்ணிறமாக உருவகிப்பது மரபு, எனவே, இகழை—இகழ்ச்சியை 'இகழ்' என்று கூறாமல் 'வெண்மை நீங்கிய புகழ்' என்கிறார். (ஊர் தேடு படலம்—44)

இராவணனுக்கு உரிய இயக்க மாதர் காம நோயால் வருந்தும்போது இசைக்கப்படும் யாழ் ஓசை தேள் கொட்டுவதுபோல் வருத்துகிறதாம் காம நோயின்போது இன்பப் பொருள்கள் எல்லாம் துன்பப் பொருள்களாகத் தோன்றுவதாகச் சொல்வது இலக்கியமரபு. அதன்படி இங்கே யாழோசை தேள் கடுப்பாகச் சொல்லப்பட்டுள்ளது. ''செவியில் புகும் நாமயாழ்த் தேளினால் திகைப்பு எய்து கின்றார் சிலர்''—இது பாடல் பகுதி. (ஊ தே. ப—175) திங்கள் நெருப்பை வீசுகிறது; மலர்கள் முள்ளாய்க் குத்து கின்றன என்றெல்லாம் கூறப்பட்டிருப்பதைப் பல இலக்கியங்களில் காணலாம். ஆனால் யாழிசை தேள் கடுப்பாயுள்ளது என்பது புதுமை தானே.

இராவணன் கூடாத தனிமைக் காலத்தில், அரக்கியர் தனியாக இல்லாமல் ஒரு துணையோடு உள்ளனராம்.

அந்தத் துணை காம ஆசைதான். "ஆசையும் தாழுமே ஆய்"—பாடல் பகுதி. (ஊ.178)

புலவர் சிலர் தயிருக்குப் பனிக்காலத்து நிலவை ஒப்புமையாகக் கூறியுள்ளனர். அந்தத் தயிரைக் கள்ளின் நிறத்துக்கு ஒப்புமையாகக் கம்பர் கூறியுள்ளார். "தயிர் நிறத்து உறுகள்"—188.

மேலோராயினும் கீழோரிடம் அகப்பட்டுக் கொள்ளின் தீமை வருமா—நன்மை வருமா என்று கூற முடியாது. இவ்வாறு தென்றல் காற்று அரக்கியரிடம் அகப்பட்டுக் கொண்டு, அவர்கள் வா என்றால் வருவதும் போ என்றால் போவதுமாக ஊஞ்சல் போல உலவிற்றாம்.

"விழைவு நீங்கிய மேன்மைய ராயினும்
    கீழ்மையர் வெகுள்வுற்றால்
பிழைகொல் நன்மைகொல் பெறுவது என்றையுறு
    பீழையால் பெருந்தென்றல்
உழையர் கூவப்புக்கு, ஏகுஎனப் பெயர்வதோர்
    ஊசலின் உளதாகும்" (ஊ 196)

தென்றலைப் பற்றிப் புலவர்கள் பலர் பல விதமாகப் பாடியுள்ளனர். இது கம்பரின் கூற்று.

திங்களுக்குப் பதினாறு கலைகள் உள்ளதாகக் கூறுவது மரபு. இக்கலைகள் நாளுக்கு நாள் ஒவ்வொன்றாய்க் குறைவதும் ஒவ்வொன்றாய்க் கூடுவதுமாகச் சொல்வர். சிவன் தலையில் சூடிக் கொண்டது ஒரே கலை தான். அதனால் அந்தக் கலைத் திங்கள், 'குழந்தை வெண் மதி' (207) எனக் குழந்தையாகக் கூறப்பட்டுள்ளது

மயில் எவ்வளவு காம வேட்கை மிகினும, தான் இருக்கும் குன்றை விட்டுக் காதலரைத் தேடி இன்னொரு குன்றுக்குச் செல்லுதல் அரிது என்னும் ஒரு கருத்து கூறப்பட்டுள்ளது. அரக்கியர், இராவணனின் இருபது தோள்களுள் ஒரு தோளைத் தழுவி அடுத்தடுத்த தோள்

கட்குச் செல்வது கடினமாயிருக்கிறதாம். இதற்கு மயில் ஒப்புமையாக்கப்பட்டுள்ளது.

''மென்தொழில் கலாப மஞ்ஞை வேட்கைமீக்
கூரு மேனும்
குன்றொழித் தொருமாக் குன்றின் அரிதின்சேர்
கொள்கை போல
வன்றொழில் கொற்றப் பொன்தோள் மணந்தரு
மயிலே அன்னார்
ஒன்றொழித் தொன்றின் ஏக அரியதோள்
ஒழுக்கினானை'' (213)

**(காட்சிப் படலம்)**

காதலரின் பிரிவைப் பற்றிப் புலவர் பலர் ஆயிரக் கணக்கான பாடல்கள் பாடியுள்ளனர். கம்பர் இங்கே சீதையின் பிரிவைப் பற்றி ஒரு புதுமை படைத்துள்ளார். உலகில் உள்ள காதலர்களின் பிரிவுகள் எல்லாம் சேர்ந்து ஓர் உரு எடுத்ததுபோல் சீதை காணப்பட்டாளாம். இஃது ஒரு புதுமை யன்றோ?

''உரிய காதலின் ஒருவரோ டொருவரை உலகில்
பிரிவெனும் துயர் உருவு கொண்டா லன்ன
பிணியாள்'' (7)

அசோக வனத்தில் சீதை தூங்கவேயில்லை என்பதை ''இராப் பகல் இல்லாள்'' (16) என்னும் தொடரால் கம்பர் குறித்துள்ளார்.

முடி சூடிக் கொள் என்ற போதும், முடி துறந்து காடு ஏகு என்ற போதும் ஒரே மாதிரியான மலர்ச்சியுடன் இராமன் முகம் இருந்ததாம், இந்த முக மலர்ச்சிக்குத் தண்ணீரில் உள்ள தாமரை மலரை ஒப்புமை காட்ட முடியாது; ஏனெனில் அது அசையும்—இரவில் குவிந்து விடும். ஆனால், சித்திரத்தில்—(ஓவியத்தில்) எழுதப்பட்ட

மலர்ந்த தாமரை என்றுமே அசையாமல் குவியாமல் ஒரே மாதிரியாயிருக்கும் அந்த உவமையைக் கம்பர் கூறியுள்ளார்.

''மெய்த்திருப்பதம் மேவு என்ற போதினும்
இத்திருத் துறந்து ஏகு என்ற போதினும்
சித்திரத்தின் அலந்த செந்தாமரை
ஒத்திருக்கும் முகத்தினை உன்னுவாள்'' (20)

என்பது பாடல் 'சித்திரத்துச் செந்தாமரை' என்றதும், ஜான் கீட்சு (John Keats) என்னும் ஆங்கிலப் புலவர் இயற்றிய ODE ON A GRECIAN URN என்ற பாடல் நினைவுக்கு வருகிறது. ode=கிரோக்கப் பாடல் வகை Grecien urn=கிரோக்கப் பாணிச் 'சால்' (கொள்கலம்)

ஒரு கிரேக்கச் சாலின் வெளிப்புறத்தைச் சுற்றிலும் ஓவியங்கள் (சித்திரங்கள்) வரையப்பட்டுள்ளன. என்றும் மாறாத—ஒரே நிலையில் உள்ள ஒவ்வோர் ஓவியத்தையும் ஒருவன் விளித்துச் சொல்வதுபோல் பாடல் அமைக்கப் பெற்றுள்ளது.

யாராலும் கொண்டு செல்ல முடியாத அமைதியான பெண்—நன்கு பேணி வளர்க்கப்படும் ஒலியெழுப்பாத குழந்தை—விருப்பம் இல்லாத கன்னிப் பெண்ணை ஆண் மகன் காம வெறி பிடித்துத் தொடர்கிறான். அவன் தொடாதபடி பெண் போராடித் தப்பித்துக் கொள்கிறாள். (தொடர்வது போன்ற படத்தில் ஆணுக்கும் பெண்ணுக்கும் இடைவெளி இருக்கும் மல்லவா? அதுதான், தொடர முடியாத—தொட முடியாத நிலை எனப்படுகிறது அந்த இடைவெளி எப்போதும் இருந்து கொண்டேதானே இருக்கும்). இன்னியங்கள் இசைக்கப்படுகின்றன; களி வெறி காணப்படுகிறது.

"Thou still unravished bride of quietness
　　Thou foster child silence..........
What men or gods are these?
　　What maidens loath?

What mad pursuit? what struggle to escape"
　　What pipes and timbrels? what will ecstasy?"(11)

காதால் கேட்க முடியாத இனிய இசை—உள் உணர்வால் உணரக் கூடிய—கற்பனையால் உணரக் கூடிய இனிய இசை! மரத்தின் கீழே இருக்கும் அழகிய இளைஞனே! நீ இசைப்பாடலை என்றுமே நிறுத்த முடியாது; தொடர்ந்து இசைத்துக் கொண்டேயிருப்பாய். அந்த மரத்தின் இலைகள் என்றுமே உதிரமாட்டா.

துணிவான இளைஞனே! நீ விரும்பும் அந்தப் பெண்ணை அடைய வெற்றி இலக்கை (Winning goal) நெருங்கி விட்டதுபோல் தோன்றினும், நீ அவளை முத்தமிட முடியாது. வருந்தாதே. அவள் மறைந்து கொள்ள மாட்டாள். அவளை நீ என்றும் காதலித்துக் கொண்டேயிருக்கலாம். அவள் இதே நிலையில்தான் இருப்பாள்—கிழவியாக மாட்டாள் ஆதலின் அவள் அழகும் என்றும் நிலைத்திருக்கும்? (சித்திரம் ஓரே நிலையில்என்றும் இருக்குமாதலின் இவ்வாறு கூறப்பட்டுள்ளது.)

"Heard melodis are sweet, but those unheard
　　Are sweeter, therefore, ye soft pipes, play on;
Not to the sensual ear, but more endeared,
　　Pipe to the spirit ditties of no tone;

Fair youth, beneath the trees, thou canst not leave
　　Thy song, nor ever can those trees be bare;
　　Bold lover, never, never canst thou kiss

Though winning near the goat yet do not grieve;
She cannot fade, though thou had not thy bliss,
For ever wilt thou love, and she be fair!" (2)

இன்பூட்டும் மரக்கிளைகளே! உங்கள் இலைகள் உதிர மாட்டா. இலை தளிர்க்கும் இளவேனில் காலச் சூழ் நிலைக்கு வழியனுப்பு விழாவே (பிரிவுபசாரமே) கிடையாது; என்றும் இளவேனில் காலத்திலேயே நீங்கள் (மரங்கள்) இருக்க முடியும். மகிழ்ச்சியூட்டும் இன்னியங்கள் இசைப் பவர்கள் எப்போதும் களைப்பு இன்றி இசைத்துக் கொண்டேயிருப்பர்; இசை எப்போதும் புது இசையாகவே இருக்கும். எவ்வளவு மகிழ்ச்சியான காதல்—எவ்வளவு மகிழ்ச்சியான காதல்! காதலர்கள் என்றும் இளமையுடன் இருந்து குளிர்ந்த (warm—வெதுவெதுப்பான) காதல் சுவையை நுகர்ந்து கொண்டேயிருப்பர்; துன்பமின்றித் தெவிட்டாமல் காதலிப்பர் :

"Ah happy, happy boughs! that cannot shed
Your leaves, nor ever bid the spring adieu;
And happy melodist, unwearied
For ever piping songs for ever new;
More happly love! more happy. happy love!
For ever warm and still to be enjoyed,
For ever panting and for ever young;
All breathing human passion for above,
That leaves a heart high sorrowful and cloyed
A burning forehead, and a parching tongue." (3)

என்பது ஆங்கிலப்பாடலாகும். இவ்வளவு நீளப் பாடலைக் கம்பர் 'சித்திரத்துச் செந்தாமரை' என்னும் தொடரில் அடக்கி விட்டார். சித்திரத்துப் பொருள் எவ்வா றிருக்கும் என்பதன் விளக்கமே இந்த ஆங்கிலப் பாட லாகும். மொழி— இலக்கிய ஒப்புமை காண்டல் என்னும்

முறையில் இந்த ஆங்கிலப் பாடல் தரப்பட்டுள்ளது. இது ஒரு சார் ஒப்புமையாகும்.

அசோகவனத்தில் சீதை அன்னம் போன்றிருந்தாள். அன்னம் தண்ணீரில் அல்லவா இருக்கும்? இங்கே,

அவளது கண்ணீராகிய தடாகமே அன்னமாகிய அவள் இருக்கும் இடம். இந்த அமைப்பும் சுவையானது.

"கடல்துணை நெடியதன் கண்ணின் நீர்ப்பெருந்
தடத்திடை இருந்ததோர் அன்னத் தன்மையாள்"(60)

இராவணன், இராமனுள்ளே உள்ள உயிரை ஒளித்து வைத்துள்ளானாம். அந்த உயிர் சீதைதான்!

"கள்ளவாள் அரக்கன் கமலக் கண்ணனார்
உள்ளுறை உயிரினை ஒளித்து வைத்தவா?" (61)

உயர் பண்புடைய குடிப்பிறப்பு என்பதும், நாணம் என்னும் மகளிர் பண்பும் தவம் செய்த்தால் சீதை தோன்றினாளாம். அதாவது, சீதை நாணம் குன்றாமல் பிறந்த குடிப் பெருமையைக் காத்தாள்.

"பேண நோற்றது மனைப்பிறவி, பெண்மைபோல்
நாணம் நோற்று உயர்ந்தது, நங்கை தோன்றலால்" (69)

இராவணன் பன் மணிகள் ஒளி வீசும் முடியுடன் வந்ததால் இரவு பகலாயிற்றாம்.

"வகைய பொன் மகுடம் இளவெயில் எறிப்ப
கங்குலும் பகல்பட வந்தான்" (74)

இராவணன் தன் உயிர் குடிக்கும் நஞ்சை, அமிழ்தம் என எண்ணி விரும்புகின்றானாம். இங்கே நஞ்சு சீதை.

"வெவ்விடத்தை அமிழ்தென வேண்டுவான்" (97)

இராவணன் கயிலையை எடுத்த போது, சிவன் அடி, விரல் நுனியால் மலையை அழித்தினானாம். விரல் நுனியைச் 'சேவடிக் கொழுந்து' (118) என்கிறார் கம்பர்.

இராவணன் சீதையை நோக்கி, நீ இணங்காவிடின் விரைவில் கொன்று விடுவேன் என்பதை அறிவிக்கு முகத் தான், 'குறைந்த நாளோய்' (அற்ப ஆயுள் உடையவளே) (145) என விளிக்கின்றான்.

(உருக்காட்டுப் படலம்)

அனுமன் இராமன் தான் தன்னை அனுப்பினான் என்பதை மெய்ப்பிக்க இராமனின் உடல் உறுப்புகளின் இயல்பை விளக்குகிறான். கழுத்துக்கு எல்லாரும் கடலி லிருந்து எடுத்த சங்கையும் கமுகையும் உவமிப்பர், ஆனால் (இராமராகிய) திருமாலிடத்தும் சங்கு இருப்பதால் நாங்கள் அந்தச் சங்கை உவமிப்போமே தவிர கடல் சங்கை உவமிக்க மாட்டோம் என்கிறான்.

"கடல்படு பணிலமும் கன்னிப் பூகமும்
மிடற்றினுக்கு உவமை என்று உரைக்கும்
வெள்ளியோர்க்கு
உடன்பட ஒண்ணுமோ? உரகப்பள்ளியான்
இடத்துறை சங்கம் ஒன்று இருக்க எங்ஙனம்?" (50)

கடல் சங்கை உவமிப்பவர் வெள்ளியோராம்—அறிவுத் திறமை இல்லாதவராம்.

இராமனது திருமுகத்திற்குச் சிலர் தாமரையை உவமிக் கலாம் சரி, முகத்திற்குத் தாமரையை உவமித்துவிடின் தன் கண்ணுக்கு எதை உவமிப்பது? தாமரையை அவன் கண்ணுக்கல்லவா உவமிக்க வேண்டும்? செந்தாமரை கண்ணன்—கமலக் கண்ணன் என்பன அவன் பெயர்களா யிற்றே! சரி, முகத்திற்குத் தாமரை உவமிக்க முடியா தெனின், திங்களை (சந்திரனை) உவமிக்கலாமே என்றால், சந்திரன் மெலிந்து தேயக் கூடியவனாயிற்றே. இராமன்

முகம் எப்போதும் ஒரே இயல்பினதாயிருத்தலின், அதற்குத் திங்களை எவ்வாறு உவமிக்க முடியும்?

"அண்ணல் தன் திருமுகம் கமலமாம் எனின்,
கண்ணினுக்கு உவமை வேறு யாது காட்டுகேன்?
தண்மதி யாமென உரைக்கத் தக்கதோ,
விண்ணுடல் பொலிந்து அதுமெலிந்து தேயுமால்?" (51)

வாய்க்குப் 'பவளவாய்' எனப் பவளத்தை ஒப்புமை யாகக் கூறுவர்? ஆனால், பவளம் புன்முறுவல் பூக்காதே!

"மூரல் வெண் முறுவல் பூவாப் பவளமோ
மொழியற் பாற்றே" (52)

பற்களுக்கு உவமையாகக் கூடியன, வரிசையான முத்துக்களோ? நிலாத் துண்டுகளின் வரிசையோ? அமிழ்தத் துளிகளின் தொகுப்போ? அறம் முளைத்த விதைகளோ? முல்லையரும்புகளின் நிரலோ? வேறு யாதோ?

"முத்தம் கொல்லோ? முழுநிலவின் முறியின் திறனோ?
முறை அமுதச்
சொத்தின் துள்ளி வெள்ளியினம் தொடுத்த கொல்லோ?
துறை அறத்தின்
வித்து முளைத்த அங்குரங்கொல் வேறேசிலகொல்?
மெய்ம் முகிழ்த்த
தொத்தின் தொகைகொல் யாதென்று பல்லுக்கு
உவமை சொல்லுகேன்?" (53)

இங்கே அறத்தின் விதைகளோ என்றது, பற்கள் முப்பத்திரண்டு இருப்பதைப் போல, அறங்களும் முப்பத்திரண்டாம் ஆதலின் என்க. இது ஒரு புதுமை!

ஆற்று மணலின்—கடல் மணலின் எண்ணிக்கையினும் பல்லாண்டு வாழ்க என வாழ்த்துதல் மரபு. இங்கே, நீண்ட ஓர் ஊழிக்காலத்தை ஒரு நாளாய்க் கணக்கிட்டுக் கொள்ளும் பற்பல ஆண்டுகள் வாழ்க எனவும், பதினான்கு

உலகமும் அழிந்த பின்னும் வாழ்க எனவும் சீதை அனுமனை வாழ்த்துகிறாள் :

''ஊழி ஓர்பகலாய் ஓதும் யாண்டெலம்,
உலகம் ஏழும்
ஏழும் வீவுற்ற ஞான்றும், இன்றென
இருத்தி என்றாள்'' (72)

சடாயு இராவணனோடு பொருது, தன் உயிரை விற்று அத்தொகைக்குப் புகழை விலைக்கு வாங்கினானாம்.

''தன் உயிர் புகழ்க்கு விற்ற சடாயுவை
வந்து சார்ந்தான்'' (78)

பிறர்க்கு உதவி செய்வதால், ஏதேனும் கேடு (இழப்பு) வருமாயின், ஒருவன் தன்னை (தன் உயிரை) விற்றாவது அக்கேட்டைப் பெறுவதே தக்கது—என்னும் கருத்துடைய,

''ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து'' (220)

என்னும் திருக்குறள் ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது.

அனுமன் பேருருவம் எடுத்த போது, அவனுடைய இரண்டு காதுகளிலும் இருந்த குண்டலங்கள் (காது அணிகள்) ஞாயிறு, திங்கள் என்னும் இரு சுடர்களையும் ஒளியாலும் தோற்றத்தாலும் மிஞ்சினவாம்:

''குண்டலம் இரண்டும் அக்கோளின் மாச்சுடர்
மண்டலம் இரண்டொடும் மாறு கொண்டவே'' (102)

'கோளின் மாச்சுடர் மண்டலம்' என்பது, கோள்களுக்குள் மிகுந்த ஒளியுடைய ஞாயிறு—திங்கள் ஆகிய இரண்டையும் குறிக்கிறது. ஞாயிறு போலவும் அதனினும் பெரிதாகவும் விண்வெளியில் பல ஞாயிறுகள் இருப்பதும், திங்களுக்குச் சொந்த ஒளி கிடையாது,—அது ஞாயிற்றின் ஒளியையே எதிரொளிக்கிறது (பிரதி பலிக்கிறது) என்பதும் அந்தக் காலத்தில் கம்பருக்கோ வேறு வம்பருக்கோ தெரியாது.

விண்வெளியில் ஞாயிறும் திங்களுமே மிக்க ஒளி உடையன வாகக் கண்ணுக்குத் தெரிவதால் 'மாச்சுடர் மண்டலம் இரண்டு' என்றார் கம்பர்.

இலக்கிய ஒப்பு காண்டல் என்னும் முறையில் வேறு சில நூல்களிலும் இத்தகைய உருவம் கூறப்பட்டிருப்பதைக் காண்போம்.

புகார் (காவிரிப் பூம்பட்டினம்) என்னும் மடந்தை, மாலையில் ஒரு பக்கம் வெண் தோடும் இன்னொரு பக்கம் பொன் தோடும் அணிந்திருந்தாற்போல், அந்நகரின் கீழ்பால் முழுத்திங்களும் மேல்பால் ஞாயிறும் மாலையில்— ஒரே நேரத்தில் விளங்கின—எனச் சாத்தனார் மணிமேகலை நூலில் கூறியுள்ளார்:—

> ''புலவரை யிறந்த புகாரெனும் பூங்கொடி
> குணதிசை மருங்கில் நாள்முதிர் மதியமும்
> குடதிசை மருங்கில் சென்று வீழ் கதிரும்
> வெள்ளி வெண்தோட்டோடுபொன் தோடாக''

(மணிமேகலா தெய்வம் வந்து தோன்றிய கதை(109, 119-121) என்பது பாடல் பகுதி. பரிபாடலிலும் இவ்வாறு கூறப்பட்டுள்ளது.

திருமாலின் இரண்டு கைகளிலும் உள்ள ஆழியும் (சக்கரமும்) வளையும் (சங்கும்) விண்ணில் உள்ள ஞாயிறும் திங்களும் போல் விளங்குகின்றன – என்று கூறப்பட்டுள்ளது :—

> ''பருவம் வாய்த்தலின் இருவிசும் பணிந்த
> இருவேறு மண்டிலத் திலக்கம் போல
> நேமியும் வளையும் ஏந்திய கையால்''
>
> (பரிபாடல்—13: 7—9)

என்பது பாடல் பகுதி. சிலப்பதிகாரத்திலும் இவ்வாறு முகிலானது ஒரு பக்கம் ஞாயிறும் மற்றொரு பக்கம்

திங்களும் இருக்கத் தோன்றுவது போல திருமால் இரு கைகளிலும் ஆழியும் வளையும் தாங்கியுள்ளார் என இளங்கோவடிகள் கூறியுள்ளார்.

> ''விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி
> இருமருங் கோங்கிய இடைநிலைத் தானத்து
> மின்னுக் கொடி உயர்த்து விளங்குவில் பூண்டு
> நன்னிற மேகம் நின்றது போலப்
> பகையணங்கு ஆழியும் பால்வெண் சங்கமும்
> தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி''
> (காடு காண் காதை: 43—48)

என்பது பாடல் பகுதி. கம்பரும் இத்தகைய கற்பனையை விட்டாரிலர்.

தான் இறந்து விடப் போவதாகச் சீதை அனுமனிடம் கூறி, இராமரை அயோத்திக்குச் சென்று பட்டம் சூட்டிக் கொள்ளச் சொல்—அங்குள்ள எல்லாருக்கும் என் வணக்கத்தைச் சொல்—என்றெல்லாம் பல செய்திகள் கூறினாள்.

கேட்ட அனுமன், சீதையை நோக்கி, 'நீ சாகமாட்டாய். உன்னைப் பிரிந்து இராமர் உயிர் வாழார்; அவர் அயோத்தி சென்று நீ இல்லாமல் முடி சூடிக் கொள்ளார்; இலங்கையில் இராவணன் மகிழ்ச்சியுடன் வாழான்; வில்லேந்திய இராம இலக்குமணர் போகார், என்ற மாதிரியில் கூறவில்லை. பின் எவ்வாறு அனுமன் கூறினான்?

சீதையே! இங்கேயே நீ இறந்து விடுவாய் என்பதும் மெய்யே! இராமன் உன்னைப் பிரிந்தும் உயிர் வாழ்வார் என்பதும் அயோத்திக்குச் சென்று அவர் முடிக் கொள்வார் என்பதும் உண்மையே! உன்னைச் சிறையிட்ட இராவணன் உயிர் வாழ்வதும் உறுதி! உன்னை மீட்காமல் வில்லேந்திய இராம இலக்குமணர் போய் விடுவார்கள் என்பதும் நடக்கக்

கூடியதே—என்று எதிர் மறையாக அனுமன் கூறியிருப்பது சுவை பயக்கிறது.

**(சூடாமணிப் படலம்)**

"வீவாய் நீயிவண் மெய் யஃதே!
ஓய்வான் இன்னுயிர் உய்வானாம்!
போய்வான் அந்நகர் புக்கன்றோ
வேய்வான் மௌலியும் மெய்யன்றோ? (40)

"கைத்தோடும் சிறை, கற்போயை
வைத்தோன் இன்னுயிர் வாழ்வானாம்!
பொய்த்தோர் வில்லிகள் போவாராம்!
இத்தோடு ஒப்பது யாதுண்டோ! (41)

இவ்வாறு நடக்கக் கூடியது வேறு யாதுளது? என அனுமன் சொன்னதாகக் கம்பர் கருத்து வெளியீட்டில் ஒரு புது முறையைக் கையாண்டிருப்பது சுவைக்கத் தக்கது.

"அன்னையே, எங்களுக்கு வாலியிடத்திலிருந்து அரசச் செல்வத்தை மீட்டுத் தந்த இராமனுக்கு. நீந்தமுடியாத துன்பக் கடலில் நீ நீந்திக் கொண்டே இராதபடி உன்னை மீட்டுத் தரவில்லையெனில், எங்களினும் உயர்ந்தவர் யார் உள்ளார்?'' என்றனன். உன்னை மீட்டு இராமனிடம் தராவிடின் நாங்கள் நன்றி மறந்தவராய்—தாழ்ந்தவராய் மதிக்கப்படுவோம் என்று சொல்வதற்குப் பதிலாக, எம்மினும் உயர்ந்தார் யார் என அனுமன் எதிர் மறையாகக் கூறியிருப்பதாகக் கம்பர் அமைந்திருப்பதும் ஒரு வகைப் புதுமை!

"நீந்தா இன்னலின் நீந்தாமே
தேய்ந்தாறாத பெருஞ் செல்வம்
ஈந்தானுக்கு உனை ஈயாதே
ஓய்ந்தால் எம்மின் உயர்ந்தோர் யார்?'' (43)

என்பது பாடல். இப்பாடலில் உள்ள 'நீந்தா இன்னலின் நீந்தாமே' என்னும் முதலடி, ஒரு திருக்குறளுக்குப் பொருத்தமான உரை காண உதவுகின்றது. சுவையான அச்செய்தியைக் காண்பாம்:

''பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்

இறைவ னடிசேரா தார்'' (கடவுள் வாழ்த்து-10)

என்னும் குறளுக்குப் பரிமேலழகர் உள்ளிட்ட உரையாசிரியர்கள் பலரும், இறைவனடி சேராதார் பிறவிப் பெருங்கடல் நீந்தார்; சேர்ந்தார் நீந்துவர் எனச் 'சேர்ந்தார்' என்னும் ஒரு சொல்லை வருவித்துப் பொருள் கூறியுள்ளனர். அங்ஙன மெனில் 'சேர்ந்தார் என்னும் சொல்லை வள்ளுவர் குறளில் அமைக்காதது, எப்படிக் கூர்மையாக எண்ணிப் பார்க்கினும் குறையுடையதாகவே தோன்றுகின்றது. வள்ளுவர் விரும்பினால் இக்குறை வராதவாறு செய்யலாம். வேறு சில குறள்களிலும், இவ்வாறு இல்லாத சொல்லையோ—சொற்களையோ வருவித்துச் சில உரையாசிரியர்கள் உரை எழுதியுள்ளனர். இங்கெல்லாம், இல்லாத எந்தச் சொல்லையும் புதிதாக வருவிக்காமல் பொருள் கூற முடியும். எனவே, இக்குறளுக்கு இல்லாத 'சேர்ந்தார்' என்னும் சொல்லை வருவிக்காமலே எவ்வாறு பொருள் செய்வது என முயன்று பார்க்கலாம்.

''பிறவிப் பெருங்கடல் நீந்துவருள் நீந்தார்
இறைவனடி சேராதார்''

எனக் குறளை வள்ளுவர் அமைத்திருக்கலாம். இதற்கு, பிறவிப் பெருங்கடலை நீந்திக் கொண்டிருப்பவர்கட்குள் இறைவனடி சேராதார் நீந்தார் என எளிதில் பொருள் கொள்ளலாம். ஆனால் வள்ளுவர். நீந்துவருள்' என்னாது 'நீந்துவர்' என்றே அமைத்துள்ளார். இங்கேதான் கம்பராமாயணப் பாடல் பகுதி துணைசெய்கிறது.

சீதை இராமனைப் பிரிந்து இராவணனிடம் அகப்பட்டுக் கொண்டு வருந்துவது, நீந்தமுடியாத துன்பக்

கடலை நீந்திக் கொண்டிருப்பதாகும். ஆனால், இராமனை அடையாவிடின், நீந்திக்கொண்டேதான் இருக்க வேண்டுமே தவிர, நீந்திக் கரையேற முடியாது. அங்ஙனம் நீந்திக்கொண்டேயிருப்பது நேராதவாறு உன்னை இராமனிடம் சேர்க்கிறேன் என்று அனுமன் அறிவிக்கிறான். இல்லையேல் சீதை நீந்தாள். இது போலவே, ''இறைவனடி சேராதார் பிறவிப் பெருங்கடல் நீந்துவர்'' என்றால் நீந்திக் கொண்டேயிருப்பார்கள்; ஆனால், 'நீந்தார்' = நீந்திக்கரை யேறமாட்டார்கள் என்று பொருள் கொள்ளின், இல்லாத சொல்லை வருவிக்கவேண்டிய இரங்கத் தக்க நிலை ஏற்படாது. அறிஞர்கள் ஆய்க.

அனுமன் மேலும் சீதைக்குச் சொல்லுகிறான்: நான் போர்புரியின், பேயும் பறவைக்கூட்டமும் அரக்கரின் புண்களிலிருந்து வரும் குருதி நீராகிய கடலில் முதலில் குளித்து, பின்பு, அரக்கியரின் கண்ணீராகிய ஆற்றில் குளிப்பதைக் காணலாம்.

''விண்ணின் நீளிய நெடுங் கழுதும் வெஞ்சிறை
எண்ணின் நீவிய பெரும் பறவை ஈட்டமும்
புண்ணின் நீர்ப் புணரியில் படிந்து, பூவையர்
கண்ணின் நீர் ஆற்றினில் குளிப்பக் காண்டியால்'' (56)

உலகில், நல்ல நாட்களில்—விழா நாட்களில் முதலில் கடலில் குளித்த மக்கள், பின்னர் உப்புக் கசிவைப் போக்கிக் கொள்வதற்காக நல்ல ஆற்று நீரில் குளிப்பது வழக்கம். அருகில் ஆறு இல்லாவிடின், வாய்க்கால் நீரிலோ, அல்லது கிணற்று நீரை மொண்டோ குளிப்பர். காவிரிப்பூம் பட்டினத்தில் முதலில் கடலில் குளித்தவர்கள் பின்னர்க் காவிரி நீரில் குளிப்பர் எனப் பட்டினப் பாலை என்னும் நூலில் கூறப்பட்டுள்ளது:

''தீது நீங்கக் கடல் ஆடியும்
மாசு போகப் புனல் படிந்தும்''— (99,100)

தீமை நீங்க நன்னாட்களில் கடலில் குளித்துப் பின்னர் அழுக்குப் போகக் காவிரி நீரில் குளிப்பார்களாம். இந்தச் செய்தியை உள்ளத்தில் வைத்துக் கொண்டு கல்வியில் பெரிய கம்பர் இந்தப் பாடலை எழுதியுள்ளார்.

மீண்டும் அனுமன் சீதையிடம் கூறுகின்றான் அன்னையே! இராவணன் இறந்த பின், முரசு முழங்க, யாழிசை ஒலிக்க, தேவமாதர்கள் அரங்கில் நடனம் ஆட, அதை நம் வானரர்கள் கண்டு மகிழ்ச்சியால் குதிக்கப் போவதைக் காண்பாய்.

''கரம்பயில் முரசினம் கறங்க, கைதொட ர்
நரம்பியல் இமிழிசை நவில, நாடகம்
அரம்பையர் ஆடிய அரங்கின், ஆண் தொழில்
குரங்குகள் முறைமுறை குனிப்பக் காண்டியால்.'' (57)

குரங்குகள் காணும் நடனம் ஒன்று மணிமேகலை நூலில் கூறப்பட்டுள்ளது: தும்பிகள் குழலூத, வண்டுகள் யாழ்மீட்ட, மயில் ஆடும் நடன அரங்கை மந்திகள் காண்கின்றனவாம்:—பளிக்கறை புக்க காதை:—

''குழலிசை தும்பி கொளுத்திக் காட்ட
மழலை வண்டினம் நல்லியாழ் செய்ய
வெயில் நுழைபறியாக் குயில் நுழை பொதும்பர்
மயிலாடு அரங்கின்மந்தி காண்பனகாண்'' (3—4)

என்னும் மணிமேகலை அரங்கைக் கம்பரும் காட்டியுள்ளார்; கல்வியில் பெரியவராயிற்றே!

இறக்கும் அரக்கர்களின் குருதியாகிய வெள்ளம் கடலில் கலக்க, மிகுதியான நீரைக் கடல் வாங்க முடியாமையால், அக்குருதி நீர் கடலினின்றும் மீண்டு ஆற்றில் எதிர்த்து வருவதைக் காணப் போகிறாய்:

''நீல்நிற அரக்கர்தம் குருதி நீத்தநீர்
வேலை மிக்கு ஆற்றொடு மீள...'' (63)

இப்போதும் சில இடங்களில் கடல் நீர், தன்னிடம் வந்து புகும் ஆறுகளில் எதிர்த்துப் புகுவதையும் ஆற்றுநீர் உப்பு கரிப்பதையும் காணலாம். இவ்வாறு எதிர்த்து வந்துள்ள நீருக்கு 'Back water' என்னும் பெயர் ஆங்கிலத்தில் சொல்லப்படுகிறது. இதைத் தமிழில் 'எதிர் ஏறு நீர்' என்று கூறலாம்.

உலகம் அழியும் ஊழிக் காலத்தில், அளவற்ற உயிர்களைத் தெவிட்டாமல் உண்ணக்கூடிய எமனும், இராமனால் அரக்கர்கள் அனைவரும் கொல்லப்பட, உயிர்களை உண்ணும் எமன், உயிர்களாகிய உணவு மிகுதியால் செரிமானம் இன்றிப் பல உயிர்களை வெளியில் கக்கப் போவதை (வாந்தி எடுக்கப் போவதை) அன்னையே, நீ காணப் போகிறாய்:

''ஞாலம் முற்றுறு கடையுகத்து நச்சு அறாக்
காலனும் வெறுத்து உயிர் காலக் காண்டியால்'' (63)

'உயிர் கால' என்பதற்கு, 'உயிரைக் கக்க'—என்னும் பொருள் செய்தலன்றி, உண்ண முடியாமையால் 'பெருமூச்சுவிட' என்றும் பொருள் கூறுவதுண்டு. இக் கருத்துகள் எல்லாம் புதுமையாக உள்ளன அல்லவா?

அன்னையே, நீ குறித்த நாளுக்குள் இராமன் வந்து உன்னை மீட்கவில்லையெனில் இராமனைப் பழி பாவம் சுற்ற, அருளில்லாத இராமன் இராவணனாகக் கருதப்படுவான்; இராவணன் இராமனாக மாறிக் காணப்படுவான்.

''குராவரு குழலி நீ குறித்த நாளினே
விராவரு நெடுஞ்சிறை மீட்கிலான் எனின்,
பராவரும் பழியொடு பவம் பற்றுதற்கு
இராவணன் அவன்; இவன் இராமன் என்றனன்''
(74)

இப்பாடலில் கம்பர் அப்படியே மாற்றிப் போட்டுக் காட்டி வியக்கச் செய்துள்ளார்.

## (பொழில் இறுத்த படலம்)

அனுமன் அசோகவனத்தை அழித்த காலையில், தெய்வ மரங்களில் இருந்த பறவைகள் தம் கூண்டுகளோடு துறக்கம் (சொர்க்கம்) அடைந்தனவாம். அனுமன் சீறிச் சினந்ததற்கே சொர்க்கம் கிடைத்ததெனில், அனுமன் அருள் (கருணை) புரிந்திருந்தால் இன்னும் பெரும் பயன் கிடைத்திருக்கலாமோ!

> "தோட்டொடும் துதைந்த தெய்வ மரம்தொறும்
> தொடுத்தபுள் தம்
> கூட்டொடும் துறக்கம் புக்க; குன்றெனக்
> குவவுத் திண்தோள்
> சேட்டகன் பரிதி மார்பன் சீறியும் தீண்டல்
> தன்னால்;
> மீட்டவன் கருணை செய்தால் பெரும்பதம்
> விளம்பலாமோ! (43)

கம்பர் கருத்து வெளியிட்டிருக்கும் இந்த முறையும் ஒரு வகை நயம் பயக்கிறது. மற்றும், 'கூட்டொடும் துறக்கம் புக்க' என்னும் தொடர் குறிப்பிடத்தக்கது. உலகியலில் 'கூண்டோடு கைலாசம் போகிறார்' என்று கூறும் வழக்காற்றை இத் தொடர் நினைவு செய்கிறது. உடம்பினின்றும் உயிர் பிரிந்த பின், உயிர் துறக்கம் புகுவது ஒரு வகை. உடம்புடனேயே துறக்கம் புகுவது மற்றொரு வகை சுந்தர மூர்த்தி நாயனார், சேரமான் பெருமாள் நாயனார் முதலியோர் உடம்புடனேயே கயிலை புக்கனர் என்பது பெரிய புராண வரலாறு. ஔவையாரும் இவ்வாறு சென்றாராம். இதனை, ஒரு சார் மெய்யுணர்வு (தத்துவ) நூலோர், 'சீவன் முத்தி' என்று குறிப்பிடுவர். கம்பர் இதனை உள்ளத்தில் கொண்டு, 'கூட்டொடும் துறக்கம் புக்க' என்று கூறியிருப்பது சிறப்புடைத்து.

தேவர்கள் இலங்கையில் காவல் காக்கின்றனராம். அசோகவனத்திலும் நேரத்துக்கு நேரம் முறை மாற்றிக்,

காவல் காக்கின்றனராம். இவர்களைப் பருவத்தேவர் என்கிறார் கம்பர். பருவத்துக்குப் பருவம் எனப் பெரும் பொழுதாகவும் கொள்ளலாம். 'டூட்டி மாற்றுதல்' என்று இப்போது சொல்வது போல் குறிப்பிட்ட கால அளவில் முறை மாற்றியும் காவல்புரிவர். இவர்கள், அனுமன் அசோக வனத்தை அழித்த போது, நீர் நனைந்த உடையினராய், அச்சமாகிய நெருப்புற்ற நெஞ்சினராய், நெகிழ்ந்த உருவினராய், தளர்ந்து பின்னுகிற கால்களை உடையவராய், வாய் பிளந்து கூவி அலறிக் கொண்டே ஓடினராம்:

> "நீரிடு துகிலர், அச்ச நெருப்பிடு நெஞ்சர்; நெக்குப்
> பீரிடும் உருவர்; தெற்றிப் பிறங்கிடு தாளர்; பேழ்வாய்
> ஊரிடு பூசல் ஆர உளைந்தனர் ஓடி உற்றார்
> பாரிடு பழுவச் சோலை பாலிக்கும் பருவத் தேவர்."
> (55)

அச்சத்தால் ஏற்பட்ட வியர்வையால் உடல் நனைந்து போயிற்று என்ற பொருளிலும் "நீரிடு துகிலர்" என்பதைக் கொள்ளலாம்; அடுத்து அச்சத்தை நெருப்பாகச் சொல்லி விட்டதால், அச்சத்தால் உடையிலேயே சிறுநீர் கழித்துக் கொண்டனர்—என்றும் கூறலாம். "அவன் பயந்து போய் ஒன்றுக்கு (சிறுநீர்) விட்டுக் கொண்டான்" என்று சொல்லும் வழக்காறு ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. (இக் காலத்தில் பலர் சிறுநீர் கழிப்பதில்லை—'யூரின் பாஸ்' பண்ணுகிறார்கள் )

**(கிங்கரர் வதைப்படலம்)**

உலகியலில் ஒரு கூட்டம் தொடர்ந்து சென்று கொண்டிருக்கும் போது—இடையில் தடை ஏற்பட்டால்—அதாவது, முன்னால் இருப்பவர்கள் நகராது நின்றால், பின்னால் இருப்பவர்கள் ஏன் கூட்டம் நிற்கிறது—ஏன் கூட்டம் நிற்கிறது?-என்று கேட்பார்கள். அதற்கு, முன்னால் இருப்பவர்கள், என்ன காரணம் என்று தெரியவில்லை—எங்களுக்கும் முன்னால் இருப்பவர்கள் நகரவில்லை—என்ன

காரணம் என்று தெரியவில்லை எனக் கூறுவார்கள். பிறகு, பின்னால் உள்ள 'அவசரக் குடுக்கைகள்' சிலர் முன்னால் இருப்பவரின் முதுகை இடித்து உந்தித் தள்ளிக்கொண்டு முன்னேற முயல்வர், இவ்வாறே அரக்க வீரர்கள், ஏன் கூட்டம் நிற்கிறது என்று கேட்பவர்க்கு, ஏன்—ஏன் என்பது தெரியவில்லை எனப்பதில் இறுத்தனராம். பின்னால் உள்ளவர்கள் முன்னால் இருப்பவரின் முதுகு தீயும் படி முடுக்கினராம்:

"என் என்றார்க்கு, என் என் என்றார்; எய்தியது
அறிந்திலாதார்;
முன் நின்றார் முதுகு தீயப் பின் நின்றார்
முடுகுகின்றார்" (9)

முன்னின்றவர் முதுகு தீயும்படி—எரிச்சல் உண்டாகும் படி— உறுத்தும்படி முடுக்குகின்றார்களாம். இங்கே, நேரில் பட்டறிந்த நிகழ்ச்சியொன்று நினைவுக்கு வருகிறது. ஒருமுறை புதுச்சேரியிலிருந்து பேருந்தில் சென்னைக்குச் சென்று கொண்டிருந்த பொழுது, நாங்கள் சென்ற பேருந்து, முன்னால் உள்ள பல பேருந்துகள் நகராமல் நின்று கொண்டிருந்ததால் தானும் நகரவில்லை. அப்போது, எங்கள் பேருந்தில் இருந்த ஒருவர் முன்பின் அறியாத இன்னொருவரை நோக்கி, ஏன் வண்டி நின்று விட்டது – ஏன வண்டி நின்று விட்டது— என்று அடிக்கடிக் கேட்டார். அதற்கு மற்றவர், ஏனையா, நானும் உன்னைப் போல் உள்ளேதானே உட்கார்ந்து கொண்டுள்ளேன்— எனக்கு மட்டும் நிற்பதற்குக் காரணம் தெரியுமா? —ஏன் சும்மா கேட்டு என் உயிரை வாங்குகிறாய்— என்று கூறி விட்டு, கேட்டவரின் பக்கத்திலிருந்து எழுந்து வேறிடத்தில் போய் அமர்ந்து கொண்டார்.

கம்பன் உலகியல் நிகழ்ச்சிகள் பலவற்றைத் தன் காப்பியத்தில் பிழிந்து தந்துள்ளான் என்பதற்கு இப் பாடலும் ஒரு தக்க சான்றாகும்.

போருக்கு மிக்க— பெரிய கூட்டமாகச் செல்லும் அரக்கர்களுள் சிலர், தெரு இடம் போதவில்லை என்று வானில் பறந்து சென்றனராம்; சிலர், புருவமும் வில்லும் வளையப் புகையெனப் பெருமூச்செறிந்து சென்றனராம்; சிலர், ஒருவர் பின் ஒருவர் என்ற வரிசை முறை மாறி— ஒருவரையொருவர் மாறி மாறி முந்திக் கொண்டு சென்றார்களாம்; சிலர், இலங்கையின் அகலமும் நீளமும் போதவில்லை என்று கூவிக் கொண்டு சென்றனராம்:

''தெருஇடம் இல்லென் றெண்ணி வானிடைச்
செல்கின்றாரும்,
புருவமும் சிலையும் கோட்டிப் புகை உயிர்த்து
உயிர்க்கின்றாரும்,
ஒருவரின் ஒருவர் முந்தி முறை மறுத்து
உருக்கின்றாரும்,
விரிவிலது இலங்கை என்று வழி பெறார்
விளிக்கின்றாரும்'' (13)

இங்கே, 'ஒருவரின் ஒருவர் முந்தி முறை மறுத்து உருக்கின்றாரும்' என்ற பகுதி கருதத் தக்கது. 'முறை' என்றது, 'இப்போது கியூ வரிசை' (Queue) என்று சொல்லப் படும் அடைவு முறையாகும்— தொடர் வரிசையாகும். இப்போது, தொடர் வரிசையில் நிற்பவர்கட்குள் பின்னால் இருக்கும் யாராவது முன்னால் சென்று நிற்கின், மற்றவர் சினந்து அவரைக் கடிவதும் பின்னால இழுத்து விடுவதும் உண்டு இதைத்தான், இப்பகுதியில் குறிப்பிட்டுள்ளார். 'உருக்கின்றார்' என்றால், ஒருவர்க்கொருவர் சினந்து பேசிக் கொள்கின்றனர் என்று பொருளாம். கம்பன் 'கியூ' வரிசையையும் விடவில்லை.

அனுமன் கிங்கரர்களுடன் கடும்போர் புரிந்து பலரைக் கொன்று குவித்துக் கொண்டேயிருக்கின்றான். உடல்களி லிருந்து உயிர்கள் பிரிந்து விட்டன. உயிர்களைப் பிடித்துச் செல்லும் எமன், பிடித்துப் பிடித்து முடியாமல் ஓய்ந்து

உட்கார்ந்து விட்டான். அதனால், உடல்களை விட்டுப் பிரிந்த உயிர்கள், விண்மீன்களிலும் முகில்களிலும் மேலே வான மண்டலத்திலும் தொத்திக் கொண்டும் சுற்றிக் கொண்டு இருந்தனவாம்:

> "ஊனெலாம் உயிர்கவர்வுறும் காலன் ஓய்ந்து உலந்தான்;
> தான் எலாரையும் மாருதி சாடுகை தவிரான்;
> மீனெலாம் உயிர், மேகமெலாம் உயிர், மேன்மேல்
> வானெலாம் உயிர், மற்றும் எலாம் உயிர் சுற்றி" (45)

இராவணன் அரக்கர்களைக் கண்டிப்பதை, 'வாய் தொறும் நெருப்பு உமிழ்கின்றான்' (57) என்பதாகக் கம்பர் கூறியுள்ளார்.

சம்புமாலி என்னும் படைத் தலைவன், இராவணனின் சினம் போவது போல் போருக்குச் சென்றானாம். இதை, "இலங்கை வேந்தன் போர்ச் சினம் போவது ஒப்பான்" என்று கம்பர் கூறுகிறார்.

**(சாம்பு மாலி வதைப் படலம்)**

அரக்கர்களின் படைத்தலைவர்களுள் ஒருவனாகிய சம்புமாலி என்பவன், அனுமனுடன் போர்புரியத் தன் படையை அணிவகுப்பு செய்து வருகிறான். அணிவகுத்தல் என்றால், தலைவனின் முன்னால் இந்திந்தப் படையும் நடுவில் இந்திந்தப் படையும், பின்னால் இநதிந்தப் படையும் தலைவனின் இருபக்கங்களிலும் இன்னின்ன படையும் இருக்கும்படி அமைத்தல் ஆகும். அரக்கர் பலராதலால் சம்புமாலி அவ்வாறு அணி வகுப்பு செய்ய முடிந்தது.

ஆனால், அனுமனோ தனி ஆள். இருப்பினும் இவன் செய்து கொண்ட அணிவகுப்பு வியக்கத்தககது. முன்னால் உள்ள படைக்கு 'நெற்றி' என்றும், பின்னால் உள்ள படைக்குக் 'கடைக்கூழை' என்றும், நடுவில் உள்ள

படைக்குப் 'பேரணி' என்றும், இரு பக்கங்களிலும் உள்ள படைக்குக் 'கைப்படை' என்றும் பெயர் வழங்கப்பெறும்.

இங்கே அனுமன், தன் நெற்றியையே நெற்றிப்படையாகவும், தன் உடம்பில் நீட்டிக் கொண்டிருக்கும் மயிர்களையே பேரணிப் படையாகவும், தன் வாலைக் கடைக்கூழைப் படையாகவும், தன் இரு கைகளையும் கைப்படையாகவும், கைகளில் உள்ள நகங்களை வாளாகவும் கொண்டு தன்னைத் தானே அணிவகுத்துக் கொண்டான்.

''ஐயனும் அமைந்து நின்றான் ஆழியான்
அளவில் ஆற்றல்
நெய்சுடர் விளக்கின் தோன்றும் நெற்றியே
நெற்றி யாக,
மொய்ம்மயிர் சேனை பொங்க, முரண்அயில்
உகிர்வாள் மொய்த்த
கைகளே கைகள் ஆகக் கடைக் கூழை
திருவால் ஆக'' (21)

என்பது பாடல். நூலாசிரியருக்கு அனுமனைத் தனியாக விட விருப்பமில்லை போலும். அதனால் அனுமனையே ஒரு பெரும் படையாகப் படைத்துக் காட்டி மகிழ்வித்துள்ளார்.

அனுமன் சம்புமாலியுடன் போர் புரியும்போது ஓரிடத்தில் நில்லாமல், அரசரது ஆணைச் செங்கோல் போலவும், அறவோரின் அறிவு போலவும், முலை விலை பகரும் வேசியரின் மனம் போலவும், காற்றாடி போலவும் மேலும் கீழும் பக்க வாட்டத்தில் பரந்தும் சுற்றித் திரிந்து கொண்டே இருந்தானாம்:

''பிரிவரும் ஒருபெருங் கோலெனப், பெயரா
இருவினை துடைத்தவர் அறிவுஎன, எவர்க்கும்
வருமுலை விலைக்கென மதித்தனர் வழங்கும்
தெரிவையர் மனமெனக், கறங்கெனத் திரிந்தான்''
(35)

கோல் என்பது செங்கோல், அரசரது செங்கோல் ஆணை நாடு முழுதும் பரந்திருக்கும். இருவினை நீங்கிய அறவோரின் அறிவு எல்லா உயிர்களும் இன்பம்உற வேண்டும் எனப் பரந்த பான்மையுடன் செயல்படும்.

> "அப்பா நான் வேண்டுதல் கேட்டருள் புரிதல் வேண்டும்
> ஆருயிர்க்கெல்லாம் நான் அன்பு செயல்வேண்டும்"—

என்னும் இராமலிங்க வள்ளலாரின் அருட்பாப் பகுதியும்,

> "எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
> அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே"

என்னும் தாயுமானவரின் பராபரக் கன்னிப் பாடலும்,

> "தாமின் புறுவது உலகின்புறக் கண்டு
> காமுறுவர் கற்றறிந் தார்" (399)

என்னும் குறட்பாவும், கம்பரின் "இருவினை துடைத்தவர் அறிவு என" என்னும் தொடருக்குப் பொருள் விளக்கம் தரும்.

முலையை விலை பகர்ந்து—அதாவது வருபவரிடம் பொருள் பெற்றுப் புணர்ந்து வாழும் வேசியரின் உள்ளம், இன்னும் யார் வருவார் அவர்—வருவாரா—இவர் வருவாரா என்று எண்ணி, ஒருவரோடு நில்லாது பலர்பாலும் சென்று திரியும். காற்றாடி மேலும் கீழும் பக்க வாட்டத்திலும் பறந்து திரியும். அதனால், இவை சுற்றித் திரியும் அனுமனுக்கு உவமையாக்கப்பட்டுள்ளன.

பொருள் விரும்பிப் புணரும் வேசியர் என்று சொன்னால் போதாதா? முலை விலை பகர்பவர் என்று சொல்ல வேண்டுமா? சிலர் நாடகங்களிலும் திரையோவியங்களிலும் பெண்களின் முலைகள் எடுப்பாக இருப்பதாகப் பொய்யாகப் புனைந்து காட்டிப் பார்ப்பவர்களை மயக்கிப்பொருள் ஈட்டுவது கண்கூடு. சில இதழ்களிலும் இவ்வாறு படம் போடுவர். இவர்களும் முலைவிலை பகர்பவர்களேயாவர். வேசியரின் முதற்பொருள் (மூலதனம்) எடுப்பான முலை

களே. 'வருமுலை' என்றார் கம்பர். மேலும் மேலும் இயற்கையாகவோ—அல்லது—செயற்கையாகவோ பெரிதாக வளர்ந்து வருவது போல் தோற்றம் அளிக்கும் முலைகளாம். அவ்வளவு ஏன்? திருவள்ளுவரே கூட, முலைகளின் 'மாபெருஞ்சிறப்பைக்' கூற மறந்தாரிலர்.

> ''கல்லாதான் சொல்கா முறுதல் முலையிரண்டும்
> இல்லாதாள் பெண்காமுற் றற்று'' (402)

என்று பாடிப் பெருமூச்சு விட்டுள்ளார். எனவே, வாய்ப்பு கிடைத்தபோது கம்பர் மட்டும் விடுவாரா என்ன! வேசியர் மேலும் மேலும் வருபவர்களை எதிர்நோக்குவது போல, அனுமன், மேலும் மேலும் அரக்கர்கள் போருக்கு வர மாட்டார்களா என்று எதிர்பார்த்துத் துடித்துக் கொண் டிருந்தான் என்னும் பொருள் நயமும் இதனால் புலனாகும்.

**(பஞ்ச சேனாதிபதிகள் வதைப்படலம்)**

அரக்கர்கள் ஏந்தி வரும் போர்க் கொடிகளைப்பற்றிக் கம்பர் கூறுகிறார்: முகில் மண்டலம் வரையும் சென்று முகிலைக் குத்துகின்றனவாம் கொடிக்கம்பங்கள். கம்பின் நுனியில் இருக்கும் கொடித் துணிகள். போய்விட்ட பகைவர் களின் புகழ் போலவும், வானகத்துக் கங்கையின் வெண்மை யான அலை போலவும் இருந்தனவாம்:

> ''தானை மாக்கொடி மழைபொதித்து உயர்
> நெடுந்தாள்,
> மானம் மாற்றரு மாருதிமுனிய நாள் உலந்து
> போன மாற்றலர் புகழ்எனக் கால்பொரப்புரண்ட
> வானயாற்று வெண்திரையென வரம்பில பரந்த'' (7)

புகழை வெண்ணிறமாகக் கூறுவது ஒரு வகை இலக்கிய மரபு என்னும் கருத்து, இந்நூலில் வேறோர் இடத்திலும் கூறப்பட்டுள்ளது. கொடித் துணி வெள்ளையாதலின் அதற்குப் புகழ் ஒப்புமையாக்கப்பட்டது.

கொடி அங்கும் இங்கும் அசைந்து ஒரு பக்கம் வருவதும் இன்னொரு பக்கம் போவதுமாக இருக்கும். ஆற்றின் வெண்மையான அலையும் முன்னும் பின்னும் போவதும் வருவதுமாக இருக்கும். அரக்கர்களின் புகழும் அவர்களின் போர்த்திறமையால் வருவதும் அவர்கள் இறந்த பின்பு போவதுமாக உள்ளது. இவ்வாறு ஒப்புமைக்குப் போவதும் வருவதுமான பொதுமை காண வேண்டும்.

அரக்கர்கள் அனுமன் மேல் சில படைக்கலங்களை எறிந்தும் அம்புகளை எய்தும் பொருதனர். அப்படைக் கலங்கள், விறைத்துக் கொண்டிருக்கும் அனுமனின் மயிர்களின் மேல் பட்டு வீழ்ந்தன. அவை மயிர்ப்புறம் படுவது அனுமனுக்குத் தினவு தீரச் சொறிந்து விட்டது போல் இருந்ததாம். தினவுக்குச் சொறிந்ததால் அனுமன் ஒரு வகை ஆறுதல் பெற்றவன் போல் காணப்பட்டானாம்:

"எறிந்தனர் எய்தனர் எண் இறந்தன
பொறிந்தெழு படைக்கலம் அரக்கர் போக்கினார்;
செறிந்தன மயிர்ப்புறம்; தினவு தீர்வுறச்
சொறிந்தனர் என இருந்து அனுமன் தூங்கினான்"
(50)

இங்கே உலகியல் செய்தி ஒன்று நினைவுக்கு வருகிறது. ஒருவன் தன் எதிரியால் தன்னை ஒன்றும் செய்ய முடியாது என்னும் பொருளில், 'அவனால் என் கடைமயிரையும் அசைக்க முடியாது' என்றும், 'அவன் என்ன— என் மயிரைப் பிடுங்கிவிடுவானா' என்றும் கூறுவது உலகியல். அவ்வாறே, அரக்கர்களின் படை அனுமனின் மயிரையும் ஒன்றும் செய்ய முடியாமல் சொறிந்து கொடுத்தது போல் இருந்ததாம்—என்பதாகப் பாடியுள்ள கம்பரின் கவி நயம் சுவைக்கத்தக்கது.

**(அக்ககுமாரன் வதைப் படலம்)**

ஆயிரக் கணக்கான—கோடிக் கணக்கான அரக்கர்கள், காட்டுத்தீயில் காய்ந்த புல்காடு அழிவது போல், "ஏ"

என்னும் நேரத்தில் அனுமனால் கொல்லப்பட்டனர். இறந்தவர்களின் உயிர்கள் எல்லாம் எமன் உலகம் சென்றன. ஒவ்வொருவர் உயிரையும் ஒவ்வொரு எமதூதர் பிடிப்பதெனில், எமனுக்கு ஆயிரம் கோடித் தூதர்கள் உள்ளனர் போலும்!

"காய் எரி முளிபுல் கானில் கலந்தென, காற்றின் செம்மல்
'ஏ' எனும் அளவில் சொல்லும் நிருதர்க்கு ஓர் எல்லை இல்லை;
போயவர் உயிரும் போகித் தென்புலம் படர்தல் பொய்யாது;
ஆயிரங் கோடி தூதர் உளர்கொலோ நமனுக்கு அம்மா!" (26)

எமதூதர் வந்து உயிரைப் பிடித்துச் செல்லுவதாகச் சொல்வது வழக்கம். ஓர் உயிருக்கு ஒரு தூதன் எனில், எமனது அலுவலகத்தில் எத்தனை தூதர்கள் பணிபுரிகின்றனரோ, தெரியவில்லையே—என அயர்ந்து விட்டிருக்கிறார் கம்பர்.

இந்திர சித்தின் தம்பியான அக்ககுமாரனும் ஒரே நாளில் பலரைக் கொல்லக் கற்ற அனுமனும் எதிரெதிர் நின்று கடும்போர் புரிகின்றனர். இமைக்காத (மூடித்திறக்காத-திறந்து கொண்டேயிருக்கின்ற) கண்களை உடைய தேவர்கள், போரைக் கண்டு, அனுமனுக்கு என்ன நேருமோ எனக் கசிந்து, இமைக்காத—மூடாத கண்களைப் பெற்ற நமக்கு இது ஒரு நல்வாய்ப்பு ஆகும்—தொடர்ந்து போரைப் பார்க்க முடிகிறதல்லவா என்று எண்ணி இரு பக்கமும் நின்று பார்த்துக் கொண்டிருந்தனராம்.

"உற்றான் இந்திர சித்திக்கு இளையவன்;
ஒரு நாளே பலர் உயிர் உண்ணக்
கற்றானும் முகம் எதிர் வைத்தான்; அது
கண்டார் விண்ணவர் கசிவுற்றார்;

எற்றாம் மாருதி நிலை என்பார்; இனி
இமையா விழியினை இவை ஒன்றோ
பெற்றாம் நல்லது பெற்றாம் என்றனர்;
பிரியாது எதிரெதிர் செறிகின்றார்'' (32)

தேவர்கள் கண் இமைக்கார் என்ற கருத்தை வைத்துக் கொண்டு கம்பர் இந்தப் பாட்டில் விளையாடியுள்ளார்.

அனுமனுக்கு அஞ்சிய அரக்கர் பலர், தாம் உயிர் பிழைக்கப் பல்வேறு மாற்றுருவங்கள் எடுத்துத் தப்பித்துக் கொண்டதைக் கம்பர் நகைச் சுவையுறப் படைத்துக் காட்டியுள்ளார்:

சிலர் மீனாகிக் கடலில் புக்காராம்; சிலர் பசு உருக் கொண்டு வழியில் மேயத் தொடங்கினராம்; சிலர் ஊன் (மாமிசம்) தின்னும் பறவை வடிவெடுத்து ஆங்குள்ள உடல்களைக் கொத்தினராம்; சிலர் பார்ப்பன உருவெடுத் தனராம்; சிலர் பெண்வடிவங் கொண்டு தம் கூந்தலை வகிர்ந்து கொண்டிருந்தாராம்; சிலர் ஐயா அனுமனே! யாங்கள் உம் அடைக்கலம்— எங்களை விட்டு விடுங்கள் என்று கெஞ்சினராம்; சிலர் அசையாமல் நின்று கொண்டு (நாராயணாய நம—நாராயணாய நம என்பதுபோல்) திருமாலின் திருப்பெயர்களைச் சொல்லிக் கொண்டு திருமால் அடியவர்கள்போல் நடித்தனராம்.

சிலர் தம் மனைவியரும் உறவினரும் வந்து தம்மைக் கட்டிக்கொண்டு அழுதபோது, ஐயையோ—யாங்கள் உங்கள் உறவினர்கள் அல்லர்; போர் காணவந்த தேவர்கள் என்று சொல்லி அவர்களை உதறித் தள்ளி அப்பால் சென்றனராம்; சிலர் நாங்கள் அரக்கர் அல்லர்—மனிதர்கள் என்றனராம்; சிலர்வண்டு வடிவம் எடுத்துப் பொழில்களில் சென்று தங்கினராம்; சிலர் மயக்கம் கொண்டவர்போல் படுத்துக் கொண்டனராம்; சிலர் தம் அரக்கக் கோரைப் பற்களை ஒடித்து மனிதப் பற்கள்போல் ஆக்கிக் கொண்டன

ராம்; சிலர் அரக்கராகிய தம் செம்பட்டை மயிரைக் கருமை யாக்கிக் கொண்டு மனிதர்கள் போல் நடித்தனராம்:

''மீனாய் வேலையை உற்றார் சிலர்; சிலர்
பசுவாய் வழிதொறும் மேய்வுற்றார்;
ஊனார் பறவையின் வடிவானார் சிலர்;
சிலர் நான்மறையவர் உருவானார்;
மானார் கண்ணிள மடவார் ஆயினர்
முன்னே தம் குழல் வகிர்வுற்றார்
ஆனார் சிலர்; சிலர் ஐயா நின்சரண்
என்றார்; நின்றவர் அரி என்றார்.'' (40)

''தம்தாரமும் உறுகிளையும் தமையெதிர்
தழுவுந்தொறும், நும தமர் அல்லேம்—
வந்தேம் வானவர் என்றேகினர் சிலர்;
சிலர் மானுயர் என வாய்விட்டார்;
மந்தாரம் கிளர் பொழில்வாய் வண்டுகள்
ஆனார் சிலர்; சிலர் மருள் கொண்டார்;
இந்தார் எயிறுகள் இறுவித்தார் சிலர்;
எரிபோல் குஞ்சியை இருள் வித்தார்'' (41)

பசு வடிவமும் பார்ப்பனர் வடிவமும் பெண் வடிவமும் சிலர் கொண்டதாகக் கம்பர் கூறியுள்ளதன் உட்பொருள் என்ன? அறப்போர் புரியும் அரசர்கள், மாற்றார் நாட்டில் போர் தொடங்குமுன், பசுக்களும் பசுப் போன்ற பார்ப்பன மாக்களும் பெண்களும் பிள்ளை பெறாதவர் களும் அகன்று விடவேண்டும்; யாம் அம்பு எய்து போர் புரியப் போகிறோம் என்று முன்கூட்டி அறிவித்து அப் புறப்படுத்தச் செய்வார்களாம்—இதனை, நெட்டிமையார் என்னும் புலவர் பாடியுள்ள,

"ஆவும் ஆனியல் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போல் புதல்வர்ப் பெறஅ தீரும்
எம்அம்பு கடிவிடுதும் நும்மாண் சேர்மினென
அறத்தாறு நுவலும் பூட்கை..." (9:1—6)

என்னும் புறநானூற்றுப் பாடலால் அறியலாம். அனுமனும் அறப்போர் புரிபவன் ஆதலின், பசு—பாப்பனர்—பெண்டிர்—போன்ற வடிவம் எடுப்பின் ஒன்றும் செய்யான் என எண்ணிச் சில அரக்கர்கள் அவ்வாறு செய்ததாகப் புறநானூறு படித்துள்ள கம்பர் புகன்றுள்ளார்.

**(பாசப் படலம்)**

இந்திரசித்தை "வீரத்தின் பன்மை தீர்ப்பான்" (13) என்று கம்பர் குறிப்பிட்டுள்ளார். வீரம் பலர்க்குப் பொது வானது அன்று; இந்திரசித்து ஒருவனுக்கே உரியது என்று சொல்லும் அளவுக்கு அவன் மிக்க வீரம் உடையவன் என்ற கருத்தில் கம்பர் இவ்வாறு புனைந்துரைத்துள்ளார். இது உயர்வு நவிற்சியணி, இங்கே 'பன்மை' என்பது 'பொதுமை' என்னும் பொருளது.

உலகம் பல மன்னர்கட்குப் பொதுவாய் இன்றி, ஒரு மன்னனுக்கே உரியது என்னும் கருத்தில்,

"தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய ஒருமை யோர்க்கும்"—

என்னும் நக்கீரரின் புறநானூற்றுப் பாடல் பகுதியில் (189: 1,2) உள்ள 'பொதுமை' என்பது போல, இங்கே 'பன்மை' என்பதைக் கொள்ள வேண்டும்.

இந்திர சித்து தன் குடும்பத்தினர்க்கு ஏற்பட்ட இன்னல்களை எண்ணி வருந்துகிறான்: காட்டில் என் அத்தை சூர்ப்பணகைக்கு ஏற்பட்ட மானக்கேடும், கரன் பட்ட

பாடும், தம்பி அக்ககுமாரன் இறந்ததவும் பிறவும் எல்லாம், மனிதர் இருவராலும் குரங்கு ஒன்றினாலும் நேர்ந்தன எனில், அம்மாடி! எனது வீரம் மிகவும் அழகாயிருக்கிறது என்று கூறித் தன்னைத் தானே புகழ்வது போல் இகழ்ந்து கொண்டு நோகிறான்:

> "கானிடை அத்தைக் குற்ற குற்றமும் கரனார் பாடும்
> யானுடை எம்பி வீந்த இருக்கணும் பிறவும் எல்லாம்
> மானிடர் இருவராலும் வானரம் ஒன்றினாலும்
> ஆனதே! உளஎன் வீரம் அழகிற்றே அம்ம என்றான்"
> (18)

இலக்கிய ஒப்புமை காண்டல் என்னும் பெயரில் வேறொரு நூலிலிருந்து இது போன்ற நோக்காட்டை எடுத்துக் காணாமல், செய்யுள் ஒப்புமை காண்டல் என்னும் பெயரில் கம்பராமாயணத்திலிருந்தே இது போன்றதொரு செய்தியைக் காணலாம்:

இலக்குவன் இராமனுக்குத் துணையாகக் காடு சென்றுள்ளான் என்பதை யறிந்த பரதன் தன்னை நொந்து கொள்கிறான். இராமனின் தம்பியருள் யான் முடிவு இல்லாத துன்பத்திற்குக் காரணம் ஆனேன்; இலக்குவனோ இராமனது துயரைத் துடைக்கச் சென்றுள்ளான் எனது அன்புக்கு அளவு உண்டோ? அண்ணனுக்கு யான் செய்யும் ஏவல்— உதவி— அடிமை மிகவும் அழகு— என்று கூறி வருந்துகிறான்:

> "என்பத்தைக் கேட்ட மைந்தன், இராமனுக்கு
> இளையர் என்று
> முன்பொத்த தோற்றத்தேமில், யான் என்றும்
> முடிவிலாத
> துன்பத்துக்கு ஏது ஆனேன்; அவனது துடைக்க
> நின்றான்;
> அன்பத்துக்கு எல்லை உண்டோ அழகிது என்
> அடிமை என்றான்"
> (கங்கை காண் படலம்-52.)

பரதன் 'என் அடிமை அழகிது' என்றாற் போல இந்திரசித்து 'என் வீரம் அழகிற்றே' என்றான்.

போருக்கு வந்த இந்திரசித்தைக் கண்ட அனுமன், இனி வெல்லுதல் அல்லது தோற்றல் என்னும் இரண்டில் ஒன்று இன்றே தெரிந்து விடும்; இதோ இந்திரசித்து வந்துள்ளான்— என்று எண்ணுகிறான்:

"ஒன்றே இனி வெல்லுதல் தோற்றல் அடுப்பதுள்ளது
இன்றே சமையும் இவன் இந்திரசித்து என்பான்"
(பாசப் படலம்-24.)

உலகியலில், 'இரண்டில் ஒன்று' என்று சொல்லும் வழக்காற்றைக் கம்பர் இப்பாட்டில் கையாண்டுள்ளார்.

இந்திரசித்தன் தேர்ப்படை முழுதும், உழுந்து (உளுந்து) புரளும் நொடி நேரத்திற்குள் சிதையும்படி அனுமன் உதைத்தானாம்.

"செழுந்திண் மாமணித் தேர்க்குலம் யாவையும் சிதைய
உழுந்து பேர்வதன் முன்நெடு மாருதி உதைத்தான்".
(52)

நாம் வாழும் பூவுலகம் சுமார் 24, 480 கல் (மைல்) சுற்றளவு உடையது இது தன்னைத் தானே, ஒரு நிமிடத்திற்குப் பதினேழு கல் (மைல்) வேகத்தில் ஒருமுறை சுற்றிக் கொள்ள இருபத்து நான்கு மணி நேரம் ஆகிறது. ஓர் உழுத்தம் (உளுத்தம்) பயறோ, ஒருமுறை உருண்டு தன்னைத் தானே சுற்றிக் கொள்வதற்கு ஒரு நொடி நேரமும் ஆகாது. அவ்வளவு விரைவில் அனுமன் உதைத்தானாம்.

அனுமன் இந்திரசித்திடம் அகப்பட்டுக் கொண்டான். அனுமனைக் கயிற்றால் கட்டி இராவணனிடம் அரக்கர்கள் இழுத்துச் செல்கின்றனர். நம்மைக் கட்டுவது போன்ற கயிற்றால் அனுமனைக் கட்ட முடியாதே எவ்வளவு பெரிய

—மொத்தமான கயிறானாலும் அனுமன் அறுத்து எறிந்து விடுவானே.

அதனால், ஊஞ்சல் கயிறுகள், தேர் கட்டி இழுக்கும் கயிறுகள், குதிரைகளைக் கட்டும் கயிறுகள், யானைகளின் காலிலும் கழுத்திலும் கட்டும் கயிறுகள் ஆகியவற்றையும் பயன்படுத்தினார்களாம். அம்மட்டுமா! நாட்டிலுள்ள—நகரத்தில் உள்ள கயிறுகளையெல்லாம் கொண்டு வந்து கட்டினார்களாம். அதாவது, கயிற்றுக் கடைகளில் உள்ள கயிறுகள், கயிறு திரித்து முறிக்கி உண்டாக்குகின்ற—உற்பத்தி செய்கின்ற தொழிற் சாலைகளில் உள்ள கயிறுகள்— முதலியனவும் அனுமனைக் கட்டப் பயன் பட்டனவாம்.

அவ்வளவு ஏன்? பெண்களின் கழுத்துகளில் உள்ள தாலிக் கயிறுகள் தவிர, மற்ற கயிறுகள் அனைத்தையும் பயன்படுத்திக் கட்டி அனுமனை இழுத்துக் கொண்டு போனார்களாம். பிணி வீட்டு படலம்:—

''நாட்டில் நகரில் நடு உள்ள கயிறு நவிலும்
தகைமையவே
வீட்டின் ஊசல் நெடும்பாசம் அற்ற; தேரும்
விசி துறந்த;
மாட்டும் புரவி ஆயமெலாம் மருவி வாங்கும்
தொடை அழிந்த;
பூட்டும் வல்லி மூட்டோடும் புரசை இழந்த
போர் யானை'' (114)

"பெண்ணிற்கு இசையும் மங்கலத்தில் பிணித்த கயிறே
இடை பிழைத்த;
கண்ணில் கண்ட வன்பாசம் எல்லாம் இட்டுக்
கடடினார்.'' (115)

'நாட்டில்— நகரில் நடு உள்ள கயிறு' என்பதில் கடைகளில் உள்ள கயிறுகள், உற்பத்திச் சாலையில் உள்ள கயிறுகள் முதலியன அடங்கும். பெண்களின் தாலிக் கயிறு

களே தப்பிப் பிழைத்தனவாம். மற்றபடி, கண்ணில் கண்ட ஏனைய கயிறுகளெல்லாம் பயன்படுத்தப்பட்டனவாம்.

"போர் யானை பூட்டும் வல்லி மூட்டோடும் புரசை இழந்த"—என யானைகளின் கயிறுகளாக வல்லி, புரசை என இரண்டு கூறப்பட்டுள்ளன. வல்லி என்பது யானையின் காலில் பூட்டிக் கட்டும் கயிறு; புரசை என்பது யானையின் கழுத்தில் மணியுடன் கட்டும் கயிறாகும்.

## (திருவடி தொழுத படலம்)

இலங்கையினின்றும் அனுமன் மீண்டு வந்து இக்கரையில் உள்ள வானரர்களைக் கண்டான். அங்கதன், சாம்பவான் ஆகியோரை வணங்கினான். எல்லாருக்கும் சீதை வாழ்த்துக் கூறியதாகச் சொன்னான். பின்னர், வானரர்கள் இலங்கையில் நடந்ததைச் சொல்லுக என வினவினர். அதற்கு அனுமன், சீதை உயர்ந்த கற்புடன் இருப்பதாகவும் சூடாமணியை அடையாளமாகத் தந்ததாகவும் கூறினான். தான் அரக்கர்களோடு போர்புரிந்து வென்றதையும் ஊரைக் கொளுத்தியதையும் சொல்லவில்லை; காரணம் தற்பெருமை பேசலாகாது என்ற நாண உணர்வாம். அனுமன் நடந்தனவற்றைச் சொல்லிக்கூட இருப்பான். ஆனால், கம்பர் காப்பியத்திற்குச் சுவையூட்ட, அனுமன் சொல்லாததாகவும், இலங்கையில் நடந்தனவற்றை வானரர் குறிப்பால் உணர்ந்து கொண்டதாகவும் கூறிக் காப்பியத்தை ஒட்டிச் செல்கிறார்.

அனும! நீ அங்கே போர் புரிந்திருக்கிறாய் என்பதை உன் புண்களே சொல்கின்றன. நீ அரக்கர்களை வென்றுள்ளாய் என்பதை நீ உயிரோடு திரும்பி வந்துள்ளமையே உரைக்கிறது நீ இலங்கையைக் கொளுத்தி வந்திருக்கிறாய் என்பதை அதோ ஓங்கித் தெரியும் புகையே ஓதுகிறது. அரக்கர்களும் வல்லவர்கள் என்பதை நீ சீதையை மீட்டு வர முடியாமையே காட்டுகிறது—இவற்றையெல்லாம்

நாங்கள் தெளிவாக உணர்ந்தறிந்து கொண்டோம்—என்று வானரர் கூறினர் :

''பொருதமை புண்ணே சொல்ல, வென்றமை
போந்த தன்மை
உரைசெய, ஊர்தீ யிட்டது ஓங்கிரும்
புகையே ஓத,
கருதலர் பெருமை தேவி மீண்டிலாச்
செயலே காட்டத்
தெரிதர உணர்ந்தேம்; பின்னர் என்னினிச்
செய்தும் என்றார்'' (10)

என்பது பாடல். இப்பாடலில் கம்பர், சொல்ல—உரைசெய —ஓத—காட்ட— அமைந்திருக்கும் சொல்லாட்சிகள் குறிப்பிடத்தக்கன. இந்தக் கற்பனை ஒரு புதுமுறை யல்லவா?

அனுமன் வானரர்களோடு ஓரளவு நேரம் கழித்த பின்னர் இராமனை அடைந்தான். அனுமனைக் கண்ட இராமன், அனுமன் தன்னைத் தொழுது வணங்குவான் எனவும், உடனடியாகச் சீதையைப் பற்றிய செய்தியைச் சொல்லுவான் எனவும் எதிர்பார்த்திருக்கலாம். ஆனால், சொல்லின் செல்வனாகிய அனுமன் சொன்னானா—அல்லது—ஒன்றும் சொல்ல வில்லையா?

அனுமன் இராமனை அடைந்ததும் தொழவே இல்லை; ஒன்றும் சொல்லவேயில்லை. அனுமன் தன் முதுகுப் பக்கத்தை இராமன் காணுமாறு திருப்பிக் கொண்டான்; சீதை இருந்த தென் திசையை நோக்கி முகத்தை வைத்துக் கொண்டான்; தன் இரண்டு கைகளையும் தலைமேல் குவித்து வைத்துக்கொண்டான்; இராமன் பக்கம் கால்களை நீட்டிக்கொண்டும் சீதை இருக்கும்பக்கம் தலையை வைத்துக் கொண்டும் நெடுஞ் சாண் கிடையாய்க் கீழே விழுந்து தரையைத் தழுவிப் படுத்துக் கொண்டு வணங்கியபடியே சீதையைப் போற்றிப் புகழ்ந்து வணங்கியபடியே வாழ்த்திக் கொண்டிருந்தான்.

அனுமனின் செயல்களைக் கண்ட இராமன், சீதை தென் திசையில் உள்ள இலங்கையில் இருக்கிறாள்—அவளை அனுமன் கண்டு வந்திருக்கிறான்—பழிப்புக்கு இடமின்றி அவள் நல்ல கற்பு நெறியில் உள்ளாள்—என்று குறிப்பால் அறிந்து கொண்டான். இச் செய்திகளைச் சொல்லின் செல்வனாகிய அனுமன் ஒரு சொல்லும் சொல்லாமல் சொல்லித் தெரிய வைத்து விட்டான். இராமனும் ஓரளவு ஆறுதல் பெற்றான். இந்த நிகழ்ச்சிகளைப் பின் வரும் பாடல்களால் அறியலாம்:

"எய்தினன் அனுமனும், எய்தி ஏந்தல்தன்
மொய்கழல் தொழுகிலன்; முளரி நீங்கிய
தையலை நோக்கிய தலையின் கையினன்
வையகம் தழீஇ நெடிதிறைஞ்சி வாழ்த்தினான்" (22)

"தின்திறல் அவன்செயல் தெரிய நோக்கினான்;
வண்திறல் ஒதியும் வலியள்; மற்றிவன்
கண்டதும் உண்டு; அவள் கற்பும் நன்றெனாக்
கொண்டனன் குறிப்பினால் உணரும்
கொள்கையான்" (23)

அனுமன் இப்படியெல்லாமா நடந்து கொண்டிருப்பான்? இங்கே கம்பர் தம்கைவண்ணம் காட்டிக் கற்பவரைக் களிக்கச் செய்துள்ளார்.

அனுமனைக் காணுவதற்கு முன், இராமன், சீதை கிடைப்பாளோ—மாட்டாளோ—என்று செத்துச் செத்துப் பிழைத்தானாம். இவ்வாறு பலமுறை செத்துச் செத்துப் பிழைப்பதற்கு இராமன் ஆயிரம் உயிர்கள் உடையவனாய் இருந்திருப்பானோ? ஓர் உயிர் செத்ததும் பின்பு மற்றோர் உயிராய்ப் பிறப்பதும், அது செத்ததும் வேறோர் உயிரால் பிழைப்பதுமாகச் செய்வதற்கு ஆயிரம் உயிர்களா இருந்தன?

''ஆருயிர் ஆயிரம் உடைய னாம்எனா
சோர்தொறும் சோர்தொறும் உயிர்த்துத்
தோன்றினான்'' (14)

இஃதும் சுவைக்கத்தக்க புதிய வெளியீடு!

இராமனை மகிழ்விக்க அனுமன் வெளிபபடையாகவே அறிவிக்கத் தொடங்கி விட்டான். என்னவென்று அறிவித்தான்? ஐயனே! இங்கிருந்து இலங்கைக்குத் தாவிச் சென்றேன்—என்னைப் பலர் எதிர்த்தனர்—நான் அவனைக் கொன்றேன்-இவனைக் கொன்றேன்—என இராமாயணமா வளர்த்திக் கொண்டு போனான்? இல்லையில்லை. எடுத்த எடுப்பிலேயே, 'கண்டு விட்டேன்' என்றான். எதை? கற்புக்கு அணிகலமாவதை. யாராவது சீதை இருக்கிறாள் இலங்கையில் என்று சொல்லக் கேட்டறிந்தேனா—இல்லையில்லை—என் இரு கண்களால் நேரில் கண்டனன் என்கிறான்.

''கண்டனென் கற்பினுக்கு அணியைக் கண்களால்''
(25)

என்பது பாடல் பகுதி. இங்கே சீதை என்று குறிப்பிடாமல் 'கற்பினுக்கு அணி' என்று உயர்த்திக் காட்டுகிறான்.

அனுமன் மேலும்கூறுகிறான்: ' ஐயனே! இல்லையில்லை யான் இலங்கையில் சீதையைக் காணவில்லை; ஒரு நடனத்தைக் கண்டேன்; மூன்று (பண்புகள்) சேர்ந்து கொண்டு குழு நடம் புரிந்தன அதாவது, உயர்குடிப் பிறப்பு என்ற ஒன்றும், பொறுக்கும் உயர் பண்பு என்ற ஒன்றும், கற்பு என்ற ஒன்றும் களி நடம்—ஆனந்தநடனம் ஆடக்கண்டேன்'' என்று.

''விற்பெருந் தடந்தோள் வீர! வீங்குநீர்
இலங்கை வெற்பில்
நற்பெருந் தவத்தளாய நங்கையைக்
கண்டேனல்லேன்

இற்பிறப் பென்ப தொன்றும் இரும்பொறை
என்பதொன்றும்
கற்பெனும் பெயர தொன்றும் களிநடம்
புரியக்கண்டேன்.'' (29)

இத்தகைய வியப்பான—புதுமையான கருத்து வெளிப்பாடு அனுமனுடையதா? கம்பனுடையதா? 'நான் அங்கே அண்ணல் காந்தியடிகளைக் காணவில்லை—ஒரு மனித தெய்வத்தைக் கண்டேன்'-என்று சொன்னால் எப்படியோ-அப்படி இருக்கிறதல்லவா இந்தக் கற்பனை!

சீதை இலங்கையில் தவநிலை மேற்கொண்டிருக்கிறாள் இங்கே, சீதை தவம் செய்கிறாள் என்று கூறாமல், தவம் என்கிற ஒன்று, சீதையை அடையத்தான் தவம் செய்து அவளை அடைந்துள்ளதாம் எனக் கம்பர் கூறுகிறார்: ''தவம் செய்த தவமாம் தையல்'' (3.) என்பது பாடல் பகுதி.

ஒரு நல்ல பாம்பு நஞ்சுடையது எனில், எல்லா நல்ல பாம்புகளுமே நஞ்சுடையன என்பது பொருள். ஓர் ஆ (பசு) பால் தரும் எனின், எல்லா ஆக்களுமே பால் தரும் என்பது கருத்து. ஒரு மனிதன் கொடியவனாயிருப்பின், அக்கொடுமையில் மக்களினம் முழுமைக்கும் பங்கு உண்டு. ஒரு பெண் மிகவும் உயர்ந்த பெருமை உடையவளாயிருப்பின், அப்பெருமையில் பெண்ணினம் முழுவதற்கும்பங்கு உண்டு. இந்த அடிப்படை விதியின்படி, சீதையின் பெருமையில் மற்ற பெண்கட்கும் பங்கு உண்டு. சீதையின் கற்புப் பெருமையால் மனிதப் பெண்கள் உயர்வடைந்ததல்லாமல், பெண் தெய்வங்களும் உயர்வு பெற்றனராம். அதாவது, இந்திராணி முதலிய தேவமாதரும் பெருமை பெற்றனர்; சிவனது இடப்பாகத்தில் இருந்த உமை அவனது முடிமேல் இடம் பெற்றாளாம். திருமாலின் மார்பில் இருந்த திருமகள் இப்போது அவனுடைய ஆயிரம் முடிகளின் மேல் இடம் பெற்றாளாம்.

'சோகத்தாள் ஆய நங்கைகற்பினால் தொழுதற்கு ஒத்த
மாகத்தார் தேவி மாரும் வான் சிறப்பு உற்றார்;
மற்றைப்
"பாகத்தாள் இப்போது ஈசன் மகுடத்தாள்;
பதுமத்தாளும்
ஆகத்தாள் அல்லள் மாயன் ஆயிரம் மௌலி
மேலாள்.'' (34)

உமை சிவன் தலைமேலும் திருமகள் திருமால் தலைமேலும் ஏறிக்கொண்டார்கள் என்பதன் கருத்து என்ன? சிவனும் திருமாலும் மனைவியரைத் தலைமேல் தூக்கி வைத்துக் கொண்டனர் என்பது கருத்து. அவர் அவனைத் தலைமேல் தூக்கி வைத்துக் கொண்டார் என்னும் உலக வழக்காற்றின் கருத்து என்ன? உண்மையில் தலைமேலா அவன் ஏறி அமர்ந்து கொண்டான்? இல்லை. அவன் மிகவும் உயர்ந்துவிட்டான் என்பது கருத்து, அதுவேதான் இங்கும்! திருமாலுக்கு ஆயிரம் முடிகள் இருப்பதாகச் சொல்வர். திருமகள் ஆயிரம் மடங்கு உயர்ந்து விட்டாள் என்ற பொருள்நயம் இங்கே சுவைக்கத்தக்கது.

அனுமன் மேலும் இராமனிடம் கூறுகிறான்: நான் சீதையினிடத்தில் ஒரு நேரத்திற்குள்ளேயே இருவித நிலைகளைக் கண்டேன். நீ தந்த கணையாழியை அவளிடம் தந்ததும், அதை அவள் தன் முலைமேல் வைத்தாள்; பிரிவுத் துன்ப வெப்பத்தினால் அக்கணையாழி உருகி விட்டது. பின் அவள் மனத்தில் ஏற்பட்ட மகிழ்ச்சிக் குளிர்ச்சியினால்; உருகி நீர்மைப்பட்டிருந்த கணையாழி குளிர்ந்து கட்டிப் பொருளாகிவிட்டது—என்கிறான்?

''ஒரு கணத்து இரண்டு கண்டேன்; ஒளி மணி ஆழி
ஆன்ற
திருமுலைத் தடத்து வைத்தார்; வைத்தலும் செல்வ
நின்பால்

விரகம் என்பதனின் வந்த வெங்கொழுந் தீயினால்
வெந்து
உருகியது; உடனே ஆறி வலித்தது குளிர்ப்பு
உள்ளூற.'' (42)

இந்த இரண்டும் ஒரு நொடியில் நடந்தனவாம். இங்கே உலகியல் நிகழ்ச்சி ஒன்று நினைவுக்கு வருகிறது. பொற் கொல்லர்கள் உலை நெருப்பில் இட்டுப் பொன்னை உருகச் செய்து தூய்மை உண்டாக்குவார்கள்; பின் உடனே தண்ணீரில் எடுத்துப் போட்டுக் குளிர்ச்சியடையச் செய்வார் கள். இங்கே பொன் கணையாழிக்கும் இந்த நிலை ஏற்பட்டது.

அனுமன் மேலும் கூறுகிறான்: நான் தந்த கணை யாழியைச் சீதை பெற்றதும், ஐயோ, இது வஞ்சகரின் ஊருக்கு வந்து விட்டதே என்றெண்ணி, ஆயிரம் குடத்து நீரால் முழுக்காட்டியது போல், தன் கண்களினின்றும் வந்த நீர் மழையில் அதை முழுக்காட்டினாள், மனம் ஏங்கினாளே தவிர ஒன்றும் வாய் பேசவில்லை; மகிழ்ச்சி யால் உடல் பூரித்தாள்; வியந்தாள்; கண்ணை இமைக்காமல் -திறந்து மூடாமல்-வாங்கிய கண் வாங்காதபடி அதையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள்; பெருமூச் செறிந்தாள்:

''வாங்கிய ஆழி தன்னை வஞ்சகர் ஊர் வந்ததாம் என்று
ஆங்குயர் மழைக் கண்ணீரால் ஆயிரம் கலசம் ஆட்டி
ஏங்கினள் இருந்த தல்லால், இயம்பலள் எய்த்த மேனி
வீங்கினள்; வியந்த தல்லால் இமைத்திலள் உயிர்ப்பு
விண்டாள்.'' (43)

கோயிலில் குடமுழுக்கு (கும்பாபிஷேகம்) செய்பவர் பல கலசங்கள் வைத்து என்னென்னவோ செய்வார்கள். கணையாழி வஞ்சகர் ஊருக்கு வந்ததால் மாசுபட்டது என கோயிலில் குடமுழுக்குச் செய்வது போல் கண்ணீரால் கழுவித் தூய்மை செய்தாளாம். 'ஆயிரம் கலசம்' என்னும் கம்பரின் எண்ணிக்கை வியப்பளிக்கின்றது.

இது காறும் கூறியவற்றால், கம்பரின் கருத்து வெளியீட்டுப் புதுமை இமயம் அளவு உயர்ந்துள்ளமை புலனாகும்.

# 5. திருக்குறள் ஆட்சி

கம்பர் சுந்தர காண்டத்தில் சில திருக்குறள் கருத்து களையும்— பகுதிகளையும் எடுத்தாண்டுள்ளார். அவை வருக:—

மண்டோதரி உறங்குகிறாள். பணிப் பெண்டிர் வா என்றால் வருவதும் போ என்றால் போவதுமாகத் தென்றல் காற்று செயல்படுகிறது. ஒன்றன் பயனை அறிந்த பெரியோர், எவ்வளவு பழகியவராயிருப்பினும் ஒருவரிடம் பண்பல்ல செயல்களைச் செய்ய மாட்டார்கள். அதுபோல் தென்றல் எவ்வளவு பழகியதாயிருப்பினும் அதனை இவ்வாறு நடத்தலாகாது. ஊர் தேடு படலம்:—

"விழைவு நீங்கிய மேன்மையர் ஆயினும்
கீழ்மையர் வெகுள்வுற்றால்,
பிழைகொல் நன்மைகொல் பெறுவதென்று ஐயுறு
பீழையால், பெருந்தென்றல்
உழையர் கூவப் புக்கு ஏகு எனப்பெயர்வதோர்
ஊசலின் உளதாகும்.
பழையம் யாமெனப் பணிபல செய்வரோ
பருணிதர் பயன் ஓர்வார்" (196)

"பழையம் எனக் கருதிப் பண்பல்ல செய்யும்
கெழுதகைமை கேடு தரும்" (700)

என்னும் குறள் மேற்கண்ட பாடலில் எடுத்தாளப் பட்டுள்ளது.

அசோக வனத்தில் இருந்த சீதை கற்பு கெடாமல் காக்கப்படுவதைக் கண்டு அனுமன் வியக்கிறான்: சீதையை அறம் காத்ததோ— அவள் தந்தை சனகன் செய்த நல்வினை காத்ததோ அவளது கற்பு காத்ததோ அருமை அருமை! இது பற்றி எம்மனோர் சொல்லி முடியுமோ!

''தருமமே காத்ததோ! சனகன் நல்வினைக்
கருமம் காத்ததோ! கற்பின் காவலோ!
அருமையே அருமையே! யாரிது ஆற்றுவார்!
ஒருமையே எம்மனோர்க்கு உரைக்கற்பாலதோ! (71)

இப்பாடலில் உள்ள 'கற்பின் காவலோ' என்ற பகுதி மிகவும் இன்றியமையாதது. சிறையில் இட்டுக் கற்பைக் காப்பாற்றி விட முடியாது: மகளிர் விரும்பினால் சிறைக் காப்பை மீறியும் எதுவும் செய்ய முயலலாம். எனவே, மகளிரின் கற்பு காக்கும் தற்காப்பே தலையாயது— என்னும் கருத்துடைய,

''சிறைகாக்கும் காப்பெவன் செய்யும் மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை'' (57)

என்னும் குறள் கருத்து அடங்கியுள்ளது.

சீதை அசோகவனத்தில் இருந்தபோது பலவாறு எண்ணி வருந்துகிறாள்: கவரி மாவைப் போன்ற மானம் உடைய உயர் மகளிரின் முன், கணவனைப் பிரிந்து கள்வர் ஊரிலே இருந்தவள் என்னும் ஏச்சுடன் எவ்வாறு நிற்பேன் —என்று வருந்துகிறாள் :

''வருந்தலில் மானம்மா அனைய மாட்சியர்
பெருந்தவ மடந்தையர் முன்பு பேதையேன்
கருந்தனி முகிலினைப் பிரிந்து கள்வன் ஊர்
இருந்தவள் இவளென ஏச நிற்பெனோ?
(உருக்காட்டு படலம்-19)

இந்தப் பாடலில்,

''மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்'' (969)

என்னும் குறள் மறைந்து கொண்டுள்ளது. கவரிமா என்பது, மேலே மயிர்களை உடைய 'யாக்' என்று பெயர் வழங்கப்படுகின்ற ஒருவகை விலங்காகும். இந்தியாவின் வட எல்லையில்— 'லடாக்' என்னும் பகுதியில் 'யாக்' என்னும் பெரிய விலங்கு உள்ளது. கவரிமாமயிர் நீப்பின் வாழாதது போல், சீதை கற்பு நீப்பின் வாழாள்— என்பது கருத்து.

இங்கே மானம் என்பது பற்றிச் சிறு ஆய்வு செய்ய வேண்டியுள்ளது. கிடைத்திருக்கும் நூல்களுள் மிகவும் பழையதாகிய தொல்காப்பியத்தில், மானம் என்பது குற்றம் என்னும் பொருளில் பல இடங்களில் ஆளப் பட்டுள்ளது.

"தம்மியல் கிளப்பின் எல்லா எழுத்தும்
மெய்ந்நிலை கிளப்பின் மானம் இல்லை" (47)
"ஆனிடை வரினும் மானம் இல்லை" (199)
"வல்லெழுத்து மிகினும் மானம் இல்லை" (230, 246)
"ஆடூஉ மகடூஉ ஆயிரு பெயர்க்கும்
இன் இடை வரினும் மானம் இல்லை" (271)
"மெல்லெழுத்து மிகினும் மானம் இல்லை" (323)
"முதனிலை நீடினும் மானம் இல்லை" (465)

இவை தொல்காப்பியத்தில் உள. இவற்றில் உள்ள மானம் என்னும் சொல்லுக்குக் குற்றம் என்பது பொருளாகும்.

தொல்காப்பியம்— பொருளதிகாரம்— அகத்திணை யியல்— 44 ஆம் நூற்பாவின் இடையில் உள்ள

"புகழும் மானமும் எடுத்து வற்புறுத்தலும்" (44-14)
என்னும் பகுதிக்கு இளம்பூரணர் பின்வருமாறு உரை எழுதியுள்ளார்.

"பிரிந்ததனான் வரும் புகழும் பிரியாமையான் வரும் குற்றமும் குறித்துத் தலைமகளையான் வருந்துணையும்

ஆற்றியிருத்தல் வேண்டுமெனக் கூறுதற் கண்ணும்'' என்பது இளம் பூரணர் உரைப் பகுதி. இங்கே, மானம் என்பதற்குக் குற்றம் என்றே அவர் பொருள் கூறியுள்ளார். ஆனால், நச்சினார்க்கினியர் இதன் உரையில் மானம் என்பதற்குப் பெருமை என்று பொருள் கூறியுள்ளார்; இவரது உரைப் பகுதி வருமாறு:—

''தமக்கேற்ற புகழும் பெருமையும் எடுத்துக் காட்டி இதனாற் பிரிதுமெனத் தலைவியையும் தோழியையும் வற்புறுத்தற் கண்ணும்''

என நச்சினார்க்கினியர் மானம் என்பதற்குப் பெருமை என்னும் பொருள் கூறியிருப்பதையறியலாம்.

தொல்காப்பியர் மிகப் பல இடங்களில் மானம் என்னும் சொல்லைக் குற்றம் என்னும் பொருளிலேயே ஆண்டிருப்பதால், அவ்வாறே இளம்பூரணர் கூறியிருக்கும் பொருளே பொருத்தமானது. பெருமை என நச்சினார்க்கினியர் கூறியிருப்பது தவறாகும். ஒருவேளை, பெருமை என்னும் பொருளில் மானம் என்னும் சொல்லை இங்கே தொல்காப்பியர் பயன்படுத்தியிருப்பராயின் அவரும் குற்றம் உடையவரேயாவார்.

எனவே, மானம் என்னும் சொல், முற்காலத்தில் குற்றம் என்னும் வடதுருவத்தையும், பிற்காலத்தில் பெருமை என்னும் தென் துருவத்தையும் குறிக்கலாயிற்று என்பதை உணரலாம்.

வடதுருவம் தென் துருவமாகிய மாறியது எப்படி—எப் போது? மாறிய வரலாறு யாது?

பதினென்கீழ்க்கணக்கு நூல்களுள் சில, வடதுருவத் தையும் தென் துருவத்தையும் இணைக்க முயன்றுள்ளன. அதாவது, 'உயர் நிலையிலிருந்து தாழ்ந்துவிடின் உயிர் வாழாமை' என்னும் பொருளில் மானம் என்னும் சொல்லை ஆண்டுள்ளன.

இவ்வாறு இணைத்ததில், திருக்குறள், நாலடியார், பழமொழி, திரிகடுகம், ஏலாதி, இனியவை நாற்பது முதலிய நூல்கட்குப் பங்கு உண்டு. இந்நூல்களுள் சிலவற்றின் சில பாடல்களில், மானம் என்பது, அப்படியும் இப்படியுமாகக் குழப்பம் தரும் நிலையிலும் ஆளப்பட்டுள்ளது.

மானம் என்பதற்கு வள்ளுவர் அகராதியில், 'இளிவரின் வாழாத மானம்' (970) எனத் தெளிவாகப் பொருள் கூறப்பட்டுள்ளது. இளிவரின் என்பது, வடதுருவம்; வாழாத மானம் என்பது தென் துருவம். எனவே, இருதுருவங்கட்கும் இடையே பாலம் அமைத்தவை பதினெண்கீழ்க் கணக்கு நூல்கள் சிலவாகும். திருக்குறளுக்கு அதில் பெரும் பங்கு உண்டு. நாள் ஆக—ஆக, குற்றம் என்னும் பொருளாகிய வடதுருவம், இணைத்த பாலத்தின் வழியாகச் சென்று, பெருமை என்னும் தென் துருவத்தைப் பிற்காலத்தில் அடைந்து விட்டது. இனிக் கம்பரிடம் வருவோம்

''வருந்தலில் மானம் மாஅனைய மாட்சியர்''

என்னும் பகுதியில் உள்ள 'வருந்தலில்' என்பதை வருந்தல் இல் எனப் பிரித்து, ஏதேதோ சொற்களை வருவித்து 'வருந்துதல் இல்லாத' என்று அதற்குப் பொருள் கூறிச்சில உரையாசிரியர்கள் இடர்ப்பட்டுள்ளனர். குறைவு நேரின் வருந்துவதிலே மான மா போன்ற மாட்சியர் என்று பொருள் கூறலே பொருந்தும். வருந்தலில் என்றால், 'வருந்துவதிலே' என்று பொருளாம் கீழோர் குறைவு நேரினும் வருந்துவது இல்லை என்பது நினைவு கூரத் தக்கது:

இங்கே இதுகாறும் இதுபற்றி இவ்வளவு விரிவாகக் கூறியது, கம்பரும் இருதுருவங்களையும் இணைக்கும் பாலமாக இருந்திருக்கிறார் என்பதை அறிவிப்பதற்கேயாம். வருத்துவதிலே மானமா அனைய மகளிர் முன் என் நிலை என்னாவது என்று வருந்தும் சீதையும் வருந்துவதைத் தொடர்ந்து உயிர் விடத் துணிந்தாள் அல்லவா?

இதே கருத்தில் இன்னுமோரிடத்தில் கம்பர் மானம் என்னும் சொல்லைப் பயன்படுத்தியுள்ளார். இந்திரசித்து, தன் தம்பி அக்ககுமாரனும் அரக்கர் பலரும் அனுமனால் இறந்து கிடந்ததைக் கண்டு பொறுக்க முடியாமல், புண்ணுக்குள் கோல் இட்டதைப் போன்ற மான உணர்வினால் புழுங்கினானாம்.

''புண்ணுளே கோல் இட்டன்ன
மானத்தால் புழுங்குகின்றான்''—
(பாசப் படலம்—17)

இங்கேயும், மானம் என்பது, வடதுருவத்தையும் தென் துருவத்தையும் இணைக்கும் பாலமாக உள்ள பொருளில் ஆளப்பட்டுள்ளமை காணலாம்.

இனி மற்றொரு குறள் ஆட்சியைக் காணலாம்: அனுமன் அரக்கர் பலரோடு முன்னிலும் மும்மடங்கு ஆற்றல் பெற்றுப் போரிட்டபோது, அவன் ஞாயிற்றின் வெயில் போலக் காணப்பட்டானாம்; இறக்கும் அரக்கர்கள், வெயிலில் துடித்துச்சாகின்ற எலும்பு இல்லாத புழுக்கள் போலக் காணப்பட்டனராம்:

''வர உற்றார், வாராநினைறார், வந்தவர், வரம்பில் வெம்போர்
பொர உற்ற பொழுது, வீரன் மும்மடங்கு ஆற்றல் பொங்க
விரவிப் போய்க் கதிரோன் ஊழி இறுதியின் வெய்யன் ஆனான்;
உரவுத்தோள் அரக்கர் எல்லாம் என்புஇலா உயிர்கள் ஒத்தார்''
(அக்ககுமாரன் வதைப் படலம்—27)

இப்பாடலில்,

''என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம்'' (77)

என்னும் குறள் அடங்கியுள்ளது.

விருந்து அருந்திச் செல்லும்படி வேண்டிய மைந்நாகத்திடம் அனுமன் கூறுகிறான்: "உடலுக்கு எலும்பு வலிமை தருவதுபோல் வேறு உண்டோ? பூசனைக்கு (உபசரிப்பதற்கு) அன்பினும் சிறந்த தொன்று உண்டோ?"

'என்பின் சிறந்தாயதோர் ஊற்றம் உண்டு
என்னல் ஆமோ?
அன்பின் சிறந்தாய தோர் பூசனை யார்கண்
உண்டோ?"
(கடல் தாவு படலம்—50)

என்பும் அன்பும் இணைத்துப் பேசப்பட்டுள்ள இவ்விடத்தே பின் வரும் குறள் நினைவிற்கு வருகிறது.

"அன்பிலார் எல்லாம் தமக்குரியர்; அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு" (72)

என்பு=எலும்பு, என்பும் என்னும் உம்மை, எலும்பின் இன்றியமையாச் (முக்கியமான) சிறப்பினை உணர்த்தும் உயர்வு சிறப்பு உண்மையாகும். கம்பர் பாடலில் உள்ள "என்பின் சிறந்தாயதோர் ஊற்றம் உண்டு என்னல் ஆமோ" என்னும் நீண்ட தொடர், குறளில் உள்ள 'என்பும்' என்னும் சொல்லின் இறுதியில் உள்ள 'உம்' என்பதில் அடங்கியுள்ள அருமை வியந்து நயத்தற்கு உரியது.

உலகியலில், 'அவன் முதுகு எலும்பு (Back Boan) இல்லாதவன்' என்றும், 'அந்த நிறுவனத்திற்கே அவர் தாம் முதுகெலும்பு' என்றும் கூறப்படும் வழக்காறுகள் ஈண்டு

நினைவு கூரத் தக்கன, "அன்பின் சிறந்தாயதோர் பூசனை யார்கண் உண்டோ" என்னும் கம்பரின் பாடல் பகுதி, அன்புடையார் பிறர்க்கு உரியர்' என்னும் குறள் பகுதியில் அடங்கியுள்ளது.

கம்பர் தம் நூலில் வேறு பல இடங்களிலும் திருக்குறள் கருத்துகளையும் தொடர்களையும் எடுத்தாண்டுள்ளார். இதனால், திருக்குறளின் பரவல் பெருமை புலனாகும். மற்றும், கம்பர் போன்ற பெரும் புலவர்கள் திருக்குறளை நன்கு பயின்றுள்ளனர் என்பது தெளிவு.

# 6. கம்பர் கண்ட சிவமும் முருகும்

கம்பர் சிவனைப் பற்றியும், முருகனைப் பற்றியும் சுந்தர காண்டத்தில் பல இடங்களில் குறிப்பிட்டுள்ளார். திருமாலின் ஒரு பிறவியாகிய இராமனைப் பற்றிக் கம்பர் எழுதியிருப்பதால் அவரை வைணவர் என்று பலர் கூறுவர். அவர் சிவனைப் பற்றியும் முருகனைப் பற்றியும் பல இடங்களில் குறிப்பிட்டிருப்பதால் அவரைச் சைவர் எனப் பலர் கூறுவர்.

நாட்டரசன் கோட்டையில் உள்ள கம்பரின் அடக்கத்தின் (சாமாதியின்) மேல் சிவலிங்கம் வைத்திருப்பதால் அவரைச் சைவர் என்று பலர் கூறுவர்- கம்பரின் அடக்கத்தின் மேல் முதலில் வைணவ அறிகுறியாகத் துளசி மாடம் இருந்தது; பின்னர் அதை நீக்கி விட்டுச் சிவலிங்கத்தைச் சைவர்கள் வைத்து விட்டனர் என வைணவர் சிலர் கூறுகின்றனர்.

சைவர்களுள் சிலர் திருமால் கோயிலுக்குச் செல்வதோ— திரு மண் (நாமம்) அணிவதோ இல்லை. இவ்வாறே வைணவர் சிலர் சிவன் கோயிலுக்குச் செல்வதோ— திருநீறு அணிவதோ இல்லை. சிவன் திருமேனி ஊர்வலமாகத் தெருவில் வந்தபோது தம் வீட்டுத் தெருக்கதவுகளைச் சாத்தி மூடிக் கொண்ட வைணவர்களும் இருந்தனர்.

இராமரே சிவனை வணங்கியதின் சான்றாக இராமேசுரம் இருப்பதைச் சிலர் சுட்டிக் காட்டி, இராமர் வரலாற்றை எழுதியதால் கம்பரை வைணவர் என்று கூறி விட முடியாது என்பது சைவர் சிலரின் வாதம்.

அண்மையில் தில்லித் தொலைக் காட்சியில் (டி.வி. யில்), 'ஓம் நமசிவாய— ஓம் நமசிவாய' என்று கூறி இராமர் சிவலிங்கத்தை வழிபட்ட காட்சியையும், இராமர் தம் மனம் நொந்தபோது சிவலிங்கத்திடம் சென்று 'பிரபோ' என விளித்து வேண்டியதையும் கண்ட என் நண்பர் ஒருவர் இராமரே கூடச் சைவர்தான் என்று கூறிக் 'குதி—குதி' என்று குதித்தார்.

மேற் கூறியவற்றின் அடிப்படையில் நோக்குங்கால், கம்பருக்குச் சைவம்—வைணவம் என்ற பாகுபாடு கிடையாது; அவர் இரண்டிற்கும் பொதுவானவர்—இரண்டையும் ஏற்றுக் கொண்டவர் என்று திடமாகத் தீர்ப்பு வழங்கலாம்.

சைவர்கள் இராமாயணம் படிக்கக்கூடாது என்று முதியவர் ஒருவர் என்னிடம் கூறிய நினைவு உள்ளது. கம்பரே தம் இராமாயண நூலில் சிவனைப் பற்றிப் பல இடங்களில் குறிப்பிட்டிருப்பதால், 'மறந்தும் புறம் தொழார்' என்பது கம்பருக்குப் பொருந்தாது என்பதை நிலைநாட்டக் கம்பர் சிவனைப் பற்றிக் கூறியிருக்கும் பகுதிகள் சிலவற்றை ஈண்டு காண்போம்:

கழுத்தில் நீலக் கறையுடைய சிவன், யானைத்தோலை உரித்தான் என்ற செய்தி கூறப்பட்டுள்ளது.

> ''கண்டத்திடைக் கறையுடைக் கடவுள் கைம்மா
> முண்டத்து உரித்த உரியால்....''
>
> (கடல் தாவு படலம்—65)

அனுமன் ஆற்றிய மறச் செயலைக் கயிலைச் சிவனும் பார்த்தானாம்.

"அகன் கயிலையில் தொலைவு இலோனும்
பார்த்தான்" (73)

சிவன் தொலைவு அழிவு இல்லாதவன் எனக் கம்பர் கூறியுள்ளார். உண்மைதான், அவர் எந்தப் பிறவியும் எடுக்கவோ—இறக்கவோ இல்லை தானே!

இலங்கையில் உள்ளவர்கட்குத் தேவர்கள் எல்லாரும் ஏவல் செய்கின்றனராம். தெய்வ இனத்தவர் மூவருள் இருவர் மட்டும் ஏவல் செய்யவில்லையாம்.

"தேவர் என்பவர் யாரும் இத்திருநகர் வீரர்க்கு
ஏவல் செய்பவர்; செய்கிலாதவர் எவர் என்னின்,
மூவர் தம்முளும் இருவர்..."
(ஊர் தேடு படலம்—10)

நான்முகன், திருமால், சிவன் என்னும் மூவருள்—மும்மூர்த்திகளுள், திருமால் இராமராக வந்து விட்டதால், மற்ற இருவரும் 'மூவருள் இருவர்' எனக் குறிப்பிட்டுள்ளனர்.

இலங்கையை இரவில் இருள் கவ்வியதற்குச் சிவன் தொடர்பான ஓர் உவமை கூறுகிறார் கம்பர். முப்பிரிவுடைய சூலப் படையையுடைய சிவன், தாருகாவனத்து அந்தணர்கள் வேள்வித் தீயினின்றும் வந்த யானையைத் தன் மேல் அனுப்பிய போது உரித்த கரிய அந்த யானைத் தோலால் உறை போர்த்தது போல் இருள் கவ்வியதாம்.

"கரித்த மூன்று எயிலுடைக் கணிச்சி வானவன்,
எரித்தலை அந்தணர் இழைத்த யானையை
உரித்த பேர் உரிவையால் உலகுக்கு ஓர் உறை
புரித்தன னாம்எனப் பொலியும் பொற்பதே" (42)

அனுமன் இலங்கையினுள் புக முயன்றபோது, நகர்க் காவல் தெய்வமாகிய இலங்கைமாதேவி, அனுமனைத்

தடுத்தும் அவன் உள் செல முயன்றான். அப்போது அவள், திரும்பிப் போகாமல் எதிர்ப் பேச்சு பேசும் நீ யாரடா, முப்புரம் எரித்த சிவனை ஒத்தவர்களும் இந்நகர்க்குள் புக அஞ்சுவர்; நீ புக முடியுமா? என்றாளாம்,

> "என்னா முஃனம் ஏகுஎன ஏகாது எதிர்மாற்றம்
> சொன்னாயே நீ யாவன் அடா! தொல்புரம் அட்டான்
> அன்னாரேனும் அஞ்சுவர் எய்தற்கு அரி உற்றால்
> உன்னால் எய்தும் ஊர்கொல் இவ்வூர் என்றுற
> நக்காள்" (82)

'அன்னாரேனும்' என்பதில் உள்ள உம்மை சிவனது உயர்வை அறிவிக்கும் 'உயர்வு சிறப்பு உம்மையாகும்.

பின் அனுமன் நான் புக்கே தீர்வேன் என ஏளனச் சிரிப்பு சிரித்தான். கண்ட இலங்கைமாதேவி, இவன் குரங்கு அல்லன்—யாரோ ஒரு வஞ்சகன் இவன்; என்னை எமன் கண்டாலும் அஞ்சிச் சோர்வான்; ஆனால் இவனோ, நஞ்சுண்ட சிவன் போல் நகுகின்றான்—என வியந்து எண்ணுகின்றாள்.

> "வஞ்சம் கொண்டான் வானரம் அல்லன்; வருகாலன்
> துஞ்சும் கண்டால் என்னை; இவன் சூழ்திரை ஆழி
> நஞ்சங் கொண்ட கண்ணுதலைப் போல் நகுகின்றான்;
> நெஞ்சம் கண்டே கல்என நின்றே நினைகின்றான்."
> (84)

இங்கே சிவன் மிக உயர்ந்தவன் என்னும் குறிப்புக் கிடைக்கிறது மற்றும், சிவன் சிரித்தே முப்புரத்தை எரித்தான்; அவனைப் போல் அனுமன் சிரித்தானாம்.

வீடணனது மாளிகையில் யாரும் அறியாமல் புகுந்த அனுமன் உறங்கும் வீடணனது இனிய—நல்ல தோற்றத்தைக் கண்டு வியக்கிறான். முக்கண் உடைய சிவன் மகனாகிய முருகன் தன் ஆறு முகங்களையும்

பன்னிரு தோல்களையும் மறைத்துக் கொண்டிருந்தால் எப்படியோ அப்படியாக—அம் முருகனைப் போலத் தோற்றம் அளிக்கிறான் இவன். அரக்கனாக இருப்பானோ இவன்—இல்லை—மழுப்படையுடைய சிவன் மகனாகிய முருகனாகவே இருப்பானோ? யார் எனப் புரியவில்லையே—என அனுமன் வியக்கின்றான்.

''முக்கண் நோக்கினன் முதல் மகன் அறுவகை
முகமும்
திக்கு நோக்கிய புயங்களும் சிலகாந் தனையான்
ஒக்க நோக்கியர் குழாத்திடை உறங்குகின்றானைப்
புக்கு நோக்கினன், புகை புகாவாயிலும் புகுவான்''
(138)

''வளையும் வாள் எயிற்று அரக்கனோ கணிச்சியான்
மகனோ?
அளையில் வாளரி அனையவன் யாவனோ அறியேன்''
(139)

அனுமன் புக முடியாத இடத்திலும் புகுவானாம். இங்கே முருகன், சிவனுடைய முதல் மகன் எனக் கூறியிருப்பது ஆராய்ச்சிக்கு உரியது. மூத்த பிள்ளையார் எனப்படும் விநாயகர், பரஞ்சோதியாம் சிறுத்தொண்டரால் வாதாபியிலிருந்து தமிழ் நாட்டுக்குக் கொண்டு வரப்பட்டவர். இப்போதும், சேர நாடாகிய மலையாளத்தில் 'விநாயகர் சதுர்த்தி விழா' கொண்டாடுவதில்லை.

மேலும் வியக்கிறான் அனுமன் : இவனைத் (வீடணனை) துணையாக உடைய இராவணன், மூன்று உலகங்களையும் வென்றது அரிய செயல் அன்று—எளிய செயலே சிவன், நான்முகன், திருமால் ஆகியவர்களைத் தவிர, வேறு யாரும் இவனுக்கு ஒப்பாக மாட்டார்.

''இவனை இன்துணை உடையபோர் இராவணன் என்னே
புவனம் மூன்றையும் வென்றது ஓர்பொருள்எனப் புகறல்!
சிவனை நான்முகத் தொருவனைத் திருநெடு மாலாம்
அவனை அல்லவர் நிகர்ப்பவர் என்பதும் அறிவோ?''
(140)

'இங்கே, திருநெடுமாலாம் அவனை' என இராமனை அனுமன் குறிப்பிட்டதாகக் கம்பர் கூறியிருப்பாரோ? எது வாயினும் சரியே!

மேரு மலையை வில்லாக வளைத்த சிவனது கயிலை மலையை எடுத்த இராவணனின் தோளைத் தழுவிய இயக்க மகளிரின் மார்பகத்தில் தோளில் இருந்த சாந்து படிய, அம்மகளிர் மகிழ்ந்து குலாவினராம்:

''கவ்வு தீக்கணை மேருவைக் கால்வளைத்து
எவ்வினான் மலை ஏந்திய ஏந்தல் தோள்
வவ்வு சாந்து தம்மா முலை வவ்விய
செவ்வி கண்டு குலாவுகின் றார்சிலர்''— (175)

சிவனது கயிலை மலையை ஏந்திய இராவணன், சிறந்த ஆண் மகனைக் குறிக்கும் 'ஏந்தல்' என்னும் சொல்லால் குறிப்பிடப்பட்டுள்ளான். 'ஏந்திய ஏந்தல்' என்னும் தொடராட்சி நயமாயுள்ளது.

நடனம் ஆடிய சிவனது புகழை, அவனது கயிலை மலையின் கீழ் அகப்பட்டுக் கொண்ட பொழுது, ஒரு தலையைக் கொய்து கையாகிய நரம்பை மீட்டி வீணையாக்கிப் பாடிய இராவணனது புகழைப் பெண்டிர் சிலர் பாடினர்.

"கூடி நான்குயர் வேலையும் கோக்க நின்று
ஆடினான் புகழ், அம்கை நரம்பினால்
நாடி நால்பெரும் பண்ணும் நயப்புறப்
பாடினான் புகழ் பாடுகின் றார்சிலர்" (176)

இங்கேயும் சிவன் குறிப்பிடப்பட்டுள்ளார். மீண்டும் மலையெடுத்த செய்தி சொல்லப்பட்டுள்ளது. குழந்தை மதியாகிய ஒற்றைப் பிறை நிலவை முடியிலே சூடிய சிவனது மலையை எடுத்த தோள் வலிமையுடையவனாம் இராவணன்.

"குழந்தை வெண்மதிக் குடுமியன் நெடுவரை
குலுக்கிய குலத் தோளை...." (207)

அடுத்து,—சிவனது மழுப்படையும், திருமாலின் நேமியும் (சக்கரப் படையும்), இந்திரனின் வச்சிரப் படையும் ஒரு பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளன. இவற்றின் வாய்மை துடைத்த மார்பனாம் இராவணன்:

"முழு வானவராய் உலகம் ஒரு மூன்றும்
காக்கும் முதல்தேவர்
மழுவாள், நேமி, குலிசத்தின் வாய்மை
துடைத்த மார்பானை"— (213)

அனுமன் தானே இராவணனை முடிக்க எண்ணினான். பிறகு உணர்வு தெளிந்து, நஞ்சுண்ட சிவன் போன்ற மிக்க ஆற்றல் உடையவர்களாயினும் அமைதியுடன் செயலாற்ற வேண்டும்— காலம் பார்க்க வேண்டும் என்று எண்ணுகின்றான்.

"ஆலம் பார்த்து உண்டவன் போல
ஆற்றல் அமைந்துளர் எனினும்,
சீலம் பார்க்க உரியோர்கள் எண்ணாது செய்பவோ"
(220)

இங்கேயும், எனினும் என்பதில் உள்ள உம்மை, சிவனது உயர்வை அறிவிக்கும் உயர்வு சிறப்பு உம்மையாகும்.

இராமன் முரித்த வில், கங்கையணிந்த சிவன் தந்த வில். அதை இராமன் முரித்ததை எண்ணிச் சீதை மெலிகின்றாள்:

''தேங்கு கங்கைத் திருமுடிச் செங்கணான்
வாங்கு கோல வடவரை வார்சிலை''—
(காட்சிப் படலம்—21)

ஈசனே (சிவனே)யாயினும் அஞ்சாத—பெருமையை விட்டுக் கொடுக்காத மனத்தினனாம் இராவணன்:

''ஈசற்கு ஆயினும் ஈடு அழிவுற்று இறை
வாசிப்பாடு அழியாத மனத்தினான்''— (98)

'ஈசற்கு ஆயினும்' என்பதில் உள்ள உம்மையும் சிவனது உயர்வை அறிவிக்கும் உயர்வு சிறப்பு உம்மையாகும். ஈசன் என்பது சிவனைக் குறிக்கும். ஈசன், ஈசுரன் என்ற ஈறுகளில் முடியும் சிவன் பெயர்கள் நூற்றுக் கணக்கில் உள்ளன. மண்டல புருடர் என்பார் தமது சூடாமணி நிகண்டின்— பதினோராம் தொகுதியின் முதல் பாடலில்,

''பகவனே ஈசன் மாயோன் பங்கயன் சினனே புத்தன்'' எனக் கடவுளரின் பட்டியல் தரும்போது, சிவனை 'ஈசன்' என்னும் பெயராலேயே குறிப்பிட்டுள்ளார். சிவனுக்கு உள்ள முதன்மையையும் (Seniority) அவர் விட்டாரிலர். இத்தனைக்கும் அவர் ஒரு சமண சமயத்தவர்.

சீதை இராவணனைக் கடிந்து பேசுகின்றாள்: நீ அன்று சடாயு என்னும் பறவைக்குத் தோற்றதாகவே எண்ண வேண்டும். கங்கை நீர் தாங்கிய முடியையுடைய சிவன் தந்த வாள் உன்னிடம் இருந்ததால் நீ சடாயுவை

வென்றாய். இல்லையேல் இறந்து போயிருப்பாய். மற்றும், நீ கயிலை மலையை எடுத்தபோது காலால் அழுத்தி உன்னை வென்ற சிவன் தந்த வில்லையே என் கணவன் (இராமர்) அன்று ஒடித்ததை நீ கேள்விப்பட்டதில்லையோ —என்றெல்லாம் கடிகின்றாள்:

''தோற்றனை பறவைக்கு அன்று;
துள்ளுநீர் வெள்ளம் சென்னி
ஏற்றவன் வாளால் வென்றாய்
அன்றெனின் இறத்தி அன்றே! (116)

''குன்று நீ எடுத்த நாள்தன் சேவடிக் கொழுந்தால் உன்னை
வென்றவன் புரங்கள் வேவத் தனிச்சரம் துரந்தமேரு
என்துணைக் கணவன் ஆற்றற்கு உரன் இலாது இற்று வீழ்ந்த
அன்று எழுந்து உயர்ந்த ஓசை கேட்டிலை போலும் அம்மா!'' (118)

இராவணன் கயிலையைத் தூக்கியபோது, சிவன் தன் கால் அடி முழுவதாலும் கூட மலையை அழுத்தவில்லை; கால் அடியில் உள்ள விரலின் நுனியால் மட்டுமே அழுத்தினான் என்பதைச் 'சேவடிக் கொழுந்தால்' என்னும் தொடரால் குறிப்பிட்டிருக்கும் கம்பர் சொல்லாட்சி மிகவும் நயத்திற்கு உரியது.

மேலும் சீதை இராவணனை நோக்கிக் கூறுகின்றாள்:

மண்ணுலகும் விண்ணுலகும் அஞ்சும்படி வாழும் கொடியோனே! நீ என் கணவரை, திருமால் என்றும் நான்முகம் என்றும் சிவன் என்றும் எண்ணி விட்டாயோ? என் கணவர் அவர்களினும் ஆற்றல் மிக்கவர். உன் கெடு மதியை விலக்கிக் கொள்:

"அங்கண் ஞாலமும் விசும்பும் அஞ்சவாழ்
வெங்கணாய்! புன்தொழில் விலக்க உட்கொளாய்
செங்கண் மால், நான்முகன், சிவன், என்றேகொலாம்
எங்கள் நாயகனையும் நினைத்தது ஏழைநீ"— (122)

திருமாலே இராமர் என்ற குறிப்பைப் பல இடங்களில் தந்துள்ள கம்பரே, இங்கே திருமாலினின்றும் இராமரைப் பிரித்துக் காட்டியுள்ளார். இராவணனுக்குச் சீதை தன் கணவரின் பெருமையைக் கூறும்போது இப்படித்தான் கூற முடியும் என்று கொண்டு காப்பியத்திற்குச் சுவை ஊட்டியுள்ளார்.

இந்தப் பெரிய செல்வ வன்மையைச் சிவன் உனக்குத் தந்தது உன் தவத்தினால் அல்லவா? நீ தவநெறி பிறழ்ந்து செல்வமும் உறவினரும் அழியும்படி அறத்தினின்றும் வழுவுகின்றாய். இனி அறநெறியை விரும்புவாயாக!

"இப்பெருஞ் செல்வம் நின்கண் ஈந்தபேர் ஈசன் யாண்டும்
அப்பெருஞ் செல்வம் துய்ப்பான் நின்றுமா தவத்தின் அன்றே?
ஒப்பருந் திருவும் நீங்கி உறவொடும் உலக்க உன்னி
தப்புதி அறத்தை; ஏழாய்! தருமத்தைக் காமியாயோ?"
(127)

ஏழாய்—ஏழையே என்பது, இராவணன் எல்லாம் துறந்த ஏழையாவான் என்ற குறிப்பை அறிவிக்கிறது.

அனுமன் இராமனது நிலையைச் சீதைக்கு அறிவிக்கிறான். இராமன் மன மயக்கம் கொண்டு புலன்கள் நிலைத்டுமாறி, பாம்பு சூடிய சிவன் போல் பித்தன் ஆனான்' விதியை யாரே வென்று கடக்கவல்லார்? என்றான்.

"கன்மத்தை ஞாலத்தவர் யார் உளரே காடப்பார்?
பொன்மொய்த்த தோளான் மயல் கொண்டு புலன்கள் வேறாய்
நன்மத்தம் நாகத் தயல் சூடிய நம்பனேபோல்
உன்மத்தன் ஆனான், தனை ஒன்றும் உணர்ந்திலா தான்"

(உருக் காட்டு படலம்—84)

இராமன் சிவன் போல் பித்தன் ஆனானாம். சிவனைப் 'பித்தா' எனச்சுந்தரரே அழைத்துள்ளார். சிவனைப் பித்தனாக இப்பாடலில் கூறியிருப்பதில் ஒரு புராணக் கதை புகுந்து கொண்டிருப்பதாகத் தோன்றுகின்றது. சிவன் பிரமனின் ஒரு தலையைக் கிள்ளினானாம். பிரமன் அந்தணனாதலின், அவனது தலையைக் கிள்ளியதால் சிவனைப் 'பிரமசத்தி' பிடித்துக் கொண்டதாம். அதனால் சிவன் பித்தன் போல் திரிந்தானாம். பின்னர்ச் சிவனது சாபப் பிழையைத் திருமால் தீர்த்தாராம். தஞ்சாவூருக்கும் திருவையாற்றிற்கும் இடையே கண்டியூர் என்னும் ஊர் உள்ளது. அங்கே சிவன் கோயிலும் உள்ளது— திருமால் கோயிலும் உள்ளது. அவ்வூர்த் திருமால் சிவன் சாபத்தைத் தீர்த்தவராம்; அதனால் அவ்வூர்த் திருமால் கோயில் 'அரன் சாபம் தீர்த்த பெருமாள் கோயில்' எனப்படுகிறது. இந்தக் கதையின் அடிப்படையில் சிவனைப் பித்தன் என்று கூறியிருக்கலாம். ஆனால், சைவர்கள் இந்தக் கதையை ஒத்துக் கொள்வதில்லை.

அனுமன் அசோகவனத்தை அழித்து ஒரு தனியனாக நின்றானாம். உலகம் அழியும் இறுதி ஊழிக்காலத்தில ஒரு தனியனாக இருக்கும் சிவனைப்போல அனுமன் தோன்றினானாம்:

"தாழ் இரும் பொழில்கள் எல்லாம்
துடைத்து ஒரு தமியன் நின்றான்.......
ஊழியின் இறுதிச் காலத்து
உருத்திர மூர்த்தி ஒத்தான்."

(பொழில் இறுத்த படலம்—46)

உருத்திர மூர்த்தி என்பது சிவனை—இப்பாடலால், சிவனது முதன்மைத் தலைமை புலனாகலாம்.

அனுமன் தன்னொடு போர் செய்த எமன் போன்ற அரக்கர்களைச் சிவன் (உருத்திரன்) போல் எழுந்து தனித்தனியாகக் காலால் உதைத்தானாம்.

'மறுத்தெழு மறலிகள் இவர் என அதிர்ந்தார்;
ஒறுத்து உருத்திரன் எனத் தனித்தனி உதைத்தான்-''

(சம்புமாலி வதைப் படலம்—38)

மார்க்கண்டேயனுக்காக எமனைச் சிவன் உதைத்தது போல அனுமன் அரக்கர்களை உதைத்தானம்.

பஞ்சசேனாபதிகளாம் அரக்கர்கள், சிவனது சூலப் படை தைத்தாலும் ஊசி குத்தியது போலவே தெரியக் கூடிய திண்ணிய தோளை உடையவர்களாம்.

''ஈசன் வன் தனிச் சூலமும் என்றிவை ஒன்றும்
ஊசி போழ்வ தோர் வடுச் செயா நெடும் புயம்
உடையார்''

(பஞ்சசேனாபதிகள் வதைப் படலம்—16)

சூரனைக் கொன்ற முருகனது ஊர்தி மயில் என்பது குறிப்பிடப்பட்டுள்ளது;

''சூர் தடிந்தவன் மயிலிடைப் பறித்தவன் தோகை.-''(17)

முழுமுதல் கடவுளும் நெற்றிக் கண் உடையவனும் முருகன் தந்தையும் ஆகிய சிவனது மழுப்படையைப்

போன்ற எழுவால் (இரும்புத்தடியால்) அனுமன் அரக்கரை நொறுக்கினான்:

"முழுமுதல் கண்ணுதல் முருகன் தாதை கைம்
மழு எனப் பொலிந்தொளிர் வயிரவாள் தனி
எழுவினின் பொலங்கழல் அரக்கர் ஈண்டிய
குழுவினைக் களம்படக் கொன்று நீக்கினான்"— (45)

இப்பாடலில் சிவன் முற்றிலும் முதல் கடவுள் என்று குறிப்பிடப்பட்டிருப்பது எண்ணத்தக்கது.

அக்ககுமாரன் வதைப் படலம்-இரண்டாம் பாட்டில் 'முக்கணான் ஊர்தி அன்றேல்'—எனச் சிவனது ஊர்தி (காளை) குறிப்பிடப்பட்டுள்ளது.

அக்ககுமாரன் தன் தந்தை இராவணனிடம், குரங்கு உருவில் வந்து இங்கே கொடுமை செய்பவன் முக்கண் சிவனே யாயினும் அவனை எளிதில் வென்று பிடித்துக் கொண்டு வந்து உன்னிடம் தருவேன்—என்று கூறுகின்றான்:

"கொய்தளிர் கோதும் வாழ்க்கைக்
கோடரத்து உருவு கொண்டு
கைதவம் கண்ணி ஈண்டோர்
சிறுபழி இழைக்கும் கற்பான்
எய்தினன் இமையா முக்கண்
ஈசனே என்ற போதும்
நொய்தினின் வென்றுபற்றித்
தருகுவென் நொடியில் நுன்பால்" (4)

ஈசனே என்றபோதும் = உம்மை ஈசனது உயர்வைச் சிறப்பிக்கும் உயர்வு சிறப்பு உம்மை. அக்ககுமாரனைக் கண்ட அனுமன், இவன் பல தலைகளையுடைய இராவணனாகவும் தெரியவில்லை. ஆயிரம் கண்ணனாகிய இந்திரனை வென்ற இந்திரசித்தாகவும் தோன்றவில்லை;

அவர்கட்கெல்லாம் மேலானவனாகிய முருகனாகவும் புலப் படவில்லை; இவன் யாராக இருப்பானோ? என்று ஐயுறுகின்றான்:

"பழி இலது உரு என்றாலும்
பல்தலை அரக்கன் அல்லன்;
விழிகள் ஆயிரமும் கொண்ட
வேந்தை வென்றானும் அல்லன்;

மொழியின் மற்றவர்க்கு மேலான்
முரண் தொழில் முருகன் அல்லன்;
அழிவில் ஒண்குமரன் யாரோ
அஞ்சனக் குன்றம் அன்னான்." (20)

இப்பாடலில் முருகனது பெருமை மொழியப் பெற்றுள்ளது.

(பாசப் படலம்)

பின்பு, தம்பி இறந்ததை அறிந்த இந்திரசித்து, முப்புரங்களை அழிக்க வில்வளைத்த பரஞ் சுடராகிய சிவனைப் போல் வெகுண்டெழுந்தான்.

"அரம் சுடர் வேல் தனது அனுசன் இற்ற சொல்
உரம் சுடஎரி உயிர்த்து ஒருவன் ஓங்கினான்;
புரம் சுட வரி சிலைப் பொருப்பு வாங்கிய
பரஞ்சுடர் ஒருவனைப் பொருவும் பான்மையான்."(2)

பரஞ்சுடர் என்பது, சிவன் பரம்பொருள் என்பதை உணர்த்துகின்றது.

இந்திரசித்து இராவணனுக்கு அறிவுரை தருகிறான், தந்தையே! போருக்குச் சென்ற நம் படை மறவரும் திரும்பவில்லை. அவர்களைக் கொன்ற அந்தக் குரங்கு, சிவனோ, நான்முகனோ, திருமாலோ என்று கூறமுடியவில்லை. எட்டுத் திக்கு யானைகளையும் முப்புரம் எரித்த சிவனது

கயிலையையும் மூவுலகையும் நீ வென்றாய்! இக்குரங்கை எவ்வாறுவெல்வது என்றெல்லாம் கூறுகின்றான்:

"இங்கு ஒரு பேரும் மீண்டார் இல்லையேல்,
குரங்கு அது எந்தாய்,
சங்கரன் அயன்மால் என்பார் தாம்எனும்
தகைய தாமோ!" (10)

"திக்கய வலியும் மேல்நாள் திரிபுரம் தீயச் செற்ற
முக்கணன் கயிலையோடும் உலகு ஒரு மூன்றும்
வென்றாய்..."(11)

போருக்கு வந்த இந்திரசித்தை, அனுமன், முப்புரம் எரித்த சிவனைப் போல் நோக்கினானாம்?

"மூண்டு முப்புரம் சுட முடுகும் ஈசனின்
ஆண்தகை வனைகழல் அனுமன் நோக்கினான்" (23)

கயிலைச் சிவனே, சீதையின் கற்பின் பெருமையால் இலங்கையை அழிக்கக் குரங்கு உருவில் வந்துளானோ என அரக்கர்கள் பேசிக் கொண்டனர்.

(பிணி வீட்டுப் படலம்)

"கயிலையின் ஒரு தனிக் கணிச்சி வானவன்
மயிலியல் சீதைதன் கற்பின் மாட்சியால்
எயிலுடைத் திருநகர் சிதைப்ப எய்தினன்
அயில்எயிற்று ஒரு குரங்காய் என்பார் பலர்." (15)

'தள் இல் முக்கணான் கணிச்சி' (38) என ஒரு பாடலில் சிவனது படை குறிக்கப்பட்டுள்ளது.

இராவணன் அனுமனை நோக்கி, நீ, உயிர் கவரும் எமனோ? தாருகனின் இரவுஞ்ச மலையை அழித்த முருகனோ? நீயார்? என வினவுகிறான்:

"நின்றசைத்து உயிர்கவர் நீலக் காலனோ
குன்றிசைத் தயிலுற எறிந்த கொற்றனோ" (66)

என்பது பாடல் பகுதி. யார் எனக் கேட்ட இராவணனுக்கு, அனுமன், இராமனின் பெருமையை அறிவிக்கின்றான். இராமன், தேவரும் அல்லன்—திக்குக் காவலரும் அல்லன்—கயிலை ஈசனும் அல்லன்—என்றெல்லாம் கூறுகின்றான்.

"தேவரும் பிறரும் அல்லன்; திசைக்களிறு அல்லன்; திக்கின் காவலர் அல்லன்; ஈசன் கயிலையங் கிரியும் அல்லன்..."(72)

மூன்று தலைகளை (நுனிகளை) உடைய சூலப் படையை உடைய சிவன் என்னும் பொருளில் 'முத்தலை எஃகன்'' எனச் சிவன் ஒரு (110) பாடலில் கூறப் பட்டுள்ளான்.

அனுமன் இலங்கையை எரியூட்டத் தன் வாலை நீட்டினான். அனுமன் இலங்கையை எரித்த அளவுக்கு நாம் முப்புரத்தை எரிக்கவில்லையே எனச் சிவன் நாணும்படி மிக்க ஆற்றல் காட்டினானாம் அனுமன்:

"துன்னலர் புரத்தை முற்றும் சுடுதொழில்
தொல்லையோனும்
பன்னின பொருளும் நாண......வாலினைப்
போகவிட்டான்" (130)

இங்கே சிவன் 'தொல்லையோன்' எனக் குறிப்பிடப் பட்டுள்ளான். தொல்லையோன் என்பதற்குப் பழமை யானவன் என்பது பொருள். இது சிவனது முதன்மையை அறிவிக்கிறது. ஈண்டு, "முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளே'' என்னும் மாணிக்கவாசகரின் திருவாசகப் பாடல் (திருவெம்பாவை—9:1) பகுதி ஒப்பு நோக்கத்தக்கது.

அரக்கர்கள் தீ மூட்டி நெய்பெய்து வேள்வி செய்யாத தால், தீக்கடவுள் (அக்கினி பகவான்) நெடுநாளாய்ப் பசித் திருந்தானாம். இப்போது அவனது பசி போகும்படி அனுமன் இலங்கை முழுவதையும் எரியுண்ணச் செய்

தானாம். இதற்கு ஓர் உவமை கூறப்பட்டுள்ளது. இறுதியில் உலகெல்லாம் அழியும்படி சிவன் எரியூட்டும் ஊழிக் காலம் போல் எரியுண்ணப் பட்டதாம்.

> "நீல்நிற நிருதர் யாண்டும் நெய்பொழி வேள்வி நீக்க,
> பால்வரு பசியன், அன்பால் மாருதி வாலைப் பற்றி,
> ஆலம் உண்டவன் நன்று ஊட்ட உலகெலாம்
> அழிவின் உண்ணும்
> காலமே என்ன மன்னோ கனலியும் கடிதின்
> உண்டான்" (133)

இப்பாடலாலும் சிவனது முதன்மைத் தன்மை புலப்படும்.

அனுமன், சூலப் படையுடைய சிவனாலும் முடிக்க முடியாத செயல்கள் செய்து மீண்டானாம்:

> "முத்தலை எஃகினாற்கும் முடிப்ப அருங் கருமம் முற்றி
> வித்தகன் தூது மீண்டது......"
> (திருவடி தொழுத படலம்...13)

'முத்தலை எஃகி னாற்கும்' என்னும் உம்மை, சிவனது உயர்வை விளக்கும் உயர்வு சிறப்பு உம்மையாகும்.

இவ்வாறாக, சுந்தர காண்டத்தில், சிவன் பல இடங்களிலும், முருகன் சில இடங்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளனர். வைணவரே இராமாயணம் படிக்க வேண்டும்—சைவர்கள் படிக்கலாகாது என்று சொன்னவர், தம் கொள்கையை மறு ஆய்வு செய்யவேண்டும்; கம்பர் வைணவர் மட்டும் அல்லர்—சைவரும் ஆவார்—அவ்வளவு ஏன்? கம்பர் சமயப் பொதுவுடைமையாளர் என்பதையும் உணரவேண்டும்.

இத்தகு மாபெருஞ் சான்றாகச் சுந்தர காண்டத்திலிருந்து ஒரு பாடலைக் காண்போம்: அனுமன் இராவணனுக்கு இராமனைப் பற்றிக் கூறுகிறான்: நாம் இராம

னுடைய தூதன். அந்த இராமன் எப்பேர்ப்பட்டவன் என்று சொல்வேன்: (சிவனுக்கு உரிய) சூலப் படையும், (திருமாலுக்கு உரிய) ஆழியையும் (சக்கரம்) வளையையும் (சங்கு) (நான்முகனுக்கு உரிய) கமண்டலத்தையும் விட்டு அவற்றிற்குப் பதிலாகக் கையில் வில் ஏந்திக் கொண்டு, இருப்பிடங்களாகிய (திருமாலுக்கு உரிய) ஆல் இலையையும் (நான்முகனுக்கு உரிய) தாமரை மலரையும், (சிவனுக்கு உரிய) வெள்ளிக் கயிலை மலையையும் துறந்து அயோத்தியில் வந்து தோன்றினான். அவன் தோற்றமும் வாழ்க்கையும் அழிவும் இல்லாதவன் — காலக் கணக்கைக் கடந்தவன் — என்று கூறுகிறான்:-

> ''மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் மும்மைத் தாய
> காலமும் கணக்கும் நீத்த காரணன்; கையில் ஏந்தி,
> சூலமும் திகிரி சங்கும் கரகமும் துறந்து, தொல்லை
> ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும் விட்டு
> அயோத்தி வந்தான்''—
> (பிணி வீட்டுப் படலம்—75)

இவ்வாறு அனுமன் சொன்னானோ—இல்லையோ! அனுமன் சொன்னதாகக் கம்பர் கூறியுள்ளார். கம்பரின் சமயப் பொதுமைக் கொள்கைக்கு இதனினும் வேறு சான்று வேண்டுமோ?

# 7. சீதையின் பண்பு விளக்கம்

சீதை மிகவும், உயரிய பெண்மையும் கற்பும் உடைய வளாகத் திகழ்ந்தாள். சீதையின் குண நலன்கள் சிலவற்றை இவண் காண்பாம்.

1. உறுதியான கற்பு உடைமை.

2. இராவணனுக்கு ஆட்படாமை. அவனுக்குச் சினந்தும் நயந்தும் அறிவுரை கூறினமை.

3. இராவணன் தன்னைத் தொட்டால் வெடித்து வீடுவான் என்ற அளவு தெய்வத்தன்மை உடைமை.

4. உலகம் முழுவதையும் சொல்லினால் சுடும் ஆற்றல் உடைமை.

5. அனுமன் தன் தோள் மேல் ஏறிக் கொள்ளச் சொன்னபோது ஒத்துக் கொள்ளாமை.

6. திரிசடையுடன் இனிய நட்பு கொண்டிருந்தமை.

7. அனுமனை நல்லன் எனப் புரிந்து கொண்ட திறமை.

8. கற்பு கெட நேரும் போல் தெரிந்த போது தற்கொலைசெய்து கொள்ள முயன்றமை.

9. அனுமனிடம், இராமருக்குச் சொல்லும்படியாக உருக்கமாகச் செய்திகள் கூறினமை.

10. இராமர் வேறு மாதரை விரும்பாதிருக்க வேண்டும் என எண்ணிய பற்று.

11. இப் பிறவியில் தவறினால், மறு பிறவியிலாயினும் இராமரை அடைய வேண்டும் என விரும்பியமை.

12. மாமியார் முதலானவர்க்கு வணக்கமும் மற்றுளார்க்கு வாழ்த்தும் தெரிவிக்க அனுமனை வேண்டினமை.

13 தான் இல்லாமல், கணவர் எங்ஙனம் நல்ல உணவு உண்பார்? விருந்தினர் வந்தபோது என்ன செய்வார்? என வருந்தினமை.

14. இலக்குவன் சொல் கேளாத தனது தவறுக்கு வருந்தினமை.

15. அனுமனுக்கு உற்ற துயரையறிந்து தாயன்பு கொண்டு வருந்தி, அவனது வாளைச் சுடாதே எனத் தன் கற்பின் மேல் ஆணையிட்டுத் தீக்கடவுளை வேண்டிக் கொண்டமை.

16. சீதை பிறந்த குடிக்கும் புக்ககுடிக்கும் பெருமை தந்தாள். இதைப்பற்றி அனுமன் இராமனிடம், உன் குலப் பெருமையை உனக்கு உரியதாக்கியும், தன் குலப் பெருமையைத் தனக்கு உரியதாக்கியும், அரக்கர் குலம் எமனிடம் போவதற்காயவற்றைப் புரிந்தும், தேவர் குலத்தை வாழச் செய்தும், என் (வானரர்) குலப் பெருமை எனக்கு உரியதாக்கியும் தூய்மையுள்ளள் — என்று கூறினான்:

"உன்குலம் உன்னதாக்கி உயர் புகழுக்கு ஒருத்தி ஆய
தன்குலம் தன்ன தாக்கித் தன்னை இத் தனிமை செய்தான்

வன்குலம் கூற்றுக்கு ஈந்து வானவர்
குலத்தை வாழ்வித்து
என்குலம் எனக்குத் தந்தாள்; என் இனிச்
செய்வது எம்மோய்!''
(திருவடி தொழுத படலம்—28)

17. முதல் முதல் கண்ட அனுமனால் கற்பு பாராட்டப் படுதல்:—காஞ்சிப்படலம்—

''காசுண்ட கூந்தலால் கற்பும் காதலும்
ஏசுண்ட தில்லையால்; அறத்திற்கு ஈறு உண்டோ?

18. பெண்மையின் இயல்புக்கு ஏற்ப, அனுமன் பேருருவம் எடுத்த போது, அஞ்சினவள் போல், உருவை அடக்குக என வேண்டினமை.

19. தான் தூக்கிக் கொண்டு சென்று இராமரிடம் விடுவதாகக் கூறிய அனுமனைப் பதமாக—நயமாக மறுத்தமை. 'அனும! உனக்கு இது இயலாத செயல் அன்று; உன் வலிமைக்கு ஏற்றதே! உன்னால் செய்ய முடியும். ஆனால், இது சரியன்று என எனது பெரிய பேதைமை யான சிறிய பெண்மதியால் உணர்கிறேன்'— என்றனள்.

''அரிய தன்று நின் ஆற்றலுக் கேற்றதே
தெரிய எண்ணினை செய்வதும் செய்தியே
உரிய தன்றென ஓர்கின்ற துண்டு அது என்
பெரிய பேதைமைச் சின்மதிப் பெண்மையால்
(சூடாமணிப் படலம்—12)

இங்கே சீதை, தன்னைப் பெரிய பேதமை உடைய வளாகவும் சின்மதி உடையவளாகவும் கூறிக் கொண்ட அடக்கம் குறிப்பிடத்தக்கது.

19. தான் அனுமனுடன் சென்றால், தன் கணவரின் ஆற்றல் குறைவுபடும் எனக் கூறல்.

"அன்றியும் பிறிதுள்ள தென்று; ஆரியன்
வென்றி வெஞ்சிலை மாசுணும்..." (14)

20. இராமர் வந்து இலங்கையை அழிக்காமல், யான் அனுமனுடன் சென்று விடின், இல்பிறப்பின் பெருமையையும் நல்லொழுக்கத்தையும் மாசற்ற தூயகற்பையும் பிறர்க்கு எவ்வாறு உணர்த்துவேன் என்று சீதை கூறியமை

"பொன்பிறங்கல் இலங்கை பொருந்தலர்
என்பு மால்வரை ஆகிலதே எனின்,
இல்பிறப்பும் ஒழுக்கும் இழுக்கம் இல்
கற்பும் யான் பிறர்க்கு எங்ஙனம் காட்டுகேன்?" (17)

21. அனுமனே! நீ ஐம்பொறி யுணர்வை அடக்கியவன் எனினும், நீ ஆடவன் ஆதலால், உன்னொடு வருதல் சரியன்று: என் கணவர் உடலைத் தவிர வேறு ஆடவரின் உடலைத் தீண்டமாட்டேன்—எனச் சீதை கூறியமை:

"வேறும் உண்டு உரை கேள் அது மெய்ம்மையோய்
ஏறு சேவகன் மேனியல்லால் இடை
ஆறும் ஐம்பொறி நின்னையும் ஆண் எனக்
கூறும் இவ்வுருத் தீண்டுதல் கூடுமோ?" (19)

22. சீதை தான் அமர்ந்த இடம் செல்லரிக்கும்படி அசோகவனத்தில் ஒரே இடத்தில் இருந்தாள். இலக்குவன் காட்டிய சிறு குடிலோடு இராவணனன் எடுத்து வந்ததால், அசோகவனத்திலும் அந்தக் குடிலிலேயே இதோ இருக்கிறேன் பார் என்று அனுமனிடம் கூறினாள்:

"இருந்த மாநிலம் செல்லரித்திடவும்
ஆண்டு எழாதாள்"
(காட்சிப்படலம்—15)

"ஆண்டு நின்றும் அரக்கன் அகழ்ந்து கொண்டு
ஈண்டு வைத்தது இளவல் இயற்றிய
நீண்ட சாலையொடு நிலைநின்றது;
காண்டி ஐய, நின்மெய் உணர்கண்களால்"
(சூடாமணிப் படலம் 24)

இதனால் சீதையின் கற்பு உறுதி புலனாகும்.

23. சீதையின் கற்பு கெடவில்லை என்பதற்கு வேறொரு சான்றும் கூறப்பட்டுள்ளது. அனுமன் யாரும் அறியாமல் இராவணன் மாளிகையுள் புகுந்து இராவணன் நிலையைக் கண்டபோது, அவன் மிகுந்த காம உணர்வுடையவனாகக் காணப்பட்டான். அவன் சீதையோடு உடலுறவு கொண்டிருந்தால் இத்தகைய காமவெறி இருக்க முடியாது. இதுவே, சீதை கற்பு கெடாமல் நன்னிலையில் உள்ளாள் என்பதற்கு ஒரு சான்றாகும். பாடல்:

"இவன் நிலையும்,
புல்நிலைய காமத்தால் புலர்கின்ற நிலை; பூவை
நல்நிலையில் உளள் என்னும் நலன் எனக்கு
நல்குமால்"
(ஊர்தேடு படலம்—222.)

எனவே, சீதை கற்பு உறுதியினின்றும் பிறழாத பண்பினள் என்பது போதரும்.

## .8 அனுமனின் பண்பு விளக்கம்

சுந்தர காண்டத்தின் முதன்மை உறுப்பினனாகிய அனுமனின் சிறப்பு இயல்புகளை (Character) இப்பகுதியில் விளக்கலாம்:

### 1. ஆற்றல்

அனுமன் மயேந்திர மலையிலிருந்து இலங்கைக்குத் தாவித் தன்னந் தனியனாய் அரக்கர்களை அழித்தமை கொண்டு அவனது ஆற்றலைப் பொதுவாக அறியலாம். சிறப்பாக அனுமன் புரிந்த போர்கள் வருமாறு:—

(1) சுரசை என்பவள் நல்லவள்—தூயவள். ஒரு கெடு மொழியால் (சாபத்தால்) அரக்கியானாள். அனுமன் இலங்கைக்குத் தாவிக்கொண்டிருந்தபோது, அனுமனை உண்பேன் என்றாள். அதற்கு அனுமன், இராமர் இட்ட பணியை முடித்து யான் திரும்பும் போது நீ என்னை உண்ணலாம் என நையாண்டி செய்து சிரித்தான். அவள் உண்ணவாய் திறந்தாள். அவள் உண்ண முடியாத படி அனுமன் பெரிய உருவம் எடுத்தான். பின்பு அவள் பணிந்து தாய்போல் ஆனாள்.

(2) அங்கார தாரை என்னும் அரக்கி அனுமனை உண்ணவாய் திறந்தாள்-அனுமன் அவள் வாய்க்குள் புகுந்து உடலைக் கிழித்துக் கொன்று வெளியேறிச் சென்றான்.

3. அனுமன் முதல்முதல் இலங்கைக்குள் புகுந்த போது, இலங்கையின் காவல் தெய்வமாகிய இலங்கை மாதேவி அனுமனைத் தடுத்துப் பொருதாள்—அனுமனை அறைந்தாள். பின் அனுமன் அவளை வன்மையாய் அறைந்து தரையில் வீழத்தினான். பின்னர் அவள் நல்ல வடிவம் எடுத்து நான் முகன் தன்னைப் படைத்துக் காவலாய் வைத்ததாகவும் ஒரு குரங்கால் இது நேரும் என்று கூறியதாகவும் சொல்லி அகன்றாள்.

4. அனுமன் அசோகவனத்தை அழித்தான். ஆங்கிருந்த அனைவரும் அஞ்சி ஓடினர். எதிர்த்தவரை அனுமன் வென்றான்.

5. வலிமை மிக்க சிங்கரர்கள் அனுமனோடு பொருது புண் உண்டாக்கினர். அனுமன் ஒரு மரத்தைப் பிடுங்கி அதால் அடித்து அனைவரையும் கொன்றான்.

6 அரக்கர்களின் தானைத் தலைவனாகிய சம்பு மாலி என்பவன் அணிவகுத்து அனுமனுடன் போர் புரிந்தான். அவன் விட்ட படைகளையெல்லாம் அனுமன் இரும்புத் தடியால் தடுத்து அவனைக் கொன்றான்.

7. படைத் தலைவர்கள் ஐவர் இராவணனை வேண்டிப் போருக்குப் பெரும்படையுடன் வந்து அனுமனுடன் பொருதனர். அனுமன் பேருருவம் கொண்டான். அரக்க மறவர்களையெல்லாம் கொன்றான். படைத் தலைவர் ஐவருள் ஒருவனை இரும்புத் தடியால் அடித்துக் கொன்றான். இரண்டாமவன் அனுமனால் தேரோடு வானில் எறியப்பட்டுக் கீழே விழுந்து மிதிபட்டு இறந்தான். வேறு இருவரையும் தேரோடு விண்ணில் வீசினன் அனுமன். அவர்கள் மண்ணிலே விழுந்து மற்போர் புரிந்தனர். அனுமன் அவர்களை வாலால் இறுக்கிச்சுற்றிக் கொன்றான். இறுதியாக ஐந்தாமவனை அனுமன் தலையில் அடித்துக் கொன்றான்.

8. இராவணனின் இளைய மகன் அக்ககுமாரன் என்பவன் தந்தையை வேண்டிப் படையுடன் வந்தான். அனுமன் கண்டு வியந்தான். அக்ககுமாரன் எள்ளி நகையாடிச் சிரித்தான். அரக்க வீரர்களை அனுமன் வென்றான்; அக்ககுமாரனின் தேரையும் படைகளையும் அழித்தான். பின் அக்ககுமாரன் அனுமனோடு மற்போர் புரிந்து மடிந்தான். உயிர் தப்பியவர்கள் ஓட்டம் பிடித்தனர்.

9. இறுதியாக, இராவணனனின் முதல் மகனாகிய இந்திரசித்து பெரும்படையுடன் வந்து அனுமனுடன் பொருதான். அனுமன் அவனை எழுவால் அடித்து வலிமை இழக்கச் செய்தான். இந்திரசித்து வானில் திரிந்தான். பின் வேறு வழியின்றி, நான்முகன் நல்கிய பாம்புப் படையை (நாக பாசத்தை) விட்டான். அனுமன் அதற்கு மதிப்பு அளித்துக் கட்டுப்பட்டவனாய் இராவணனிடம் அழைத்துச் செல்லப்பட்டான்.

10. இறுதியில் அனுமன் இலங்கையின் பெரும் பகுதியை எரியூட்டி அழித்தான். பிடித்து வருமாறு இராவணன் அரக்கர் எழுவரை அனுப்பினான். அவர்கள் தலைமையில் அரக்கர்கள் பலர் வந்து பொருதனர். அனுமன் அனைவரையும் அழித்தான். பின் சீதையை வணங்கிக் கடல் தாவி மீண்டான்.

இந் நிகழ்ச்சிகளால் அனுமனின் பேராற்றல் பெரிது புலப்படுகின்றதன்றோ!

**2. இரக்க குணம்**

அனுமன் பேராண்மையோடு (வீரத்தோடு) ஊராண்மையும் (உதவி செய்யும் இரக்க குணமும்) உடையவனாகத் திகழ்ந்தான். திருவள்ளுவர், படை மறவர்கட்குப் பேராண்மை (வீரம்) இருக்க வேண்டும்; எதிரிக்கு ஒரு துன்பம் நேரின் உதவி செய்யும் உள்ளப்பாங்கு, அந்தப்

பேராண்மைக்குக் கூராக மதிக்கப் பெறும்— என்னும் கருத்தில்,

"பேராண்மை என்ப தறுகண்; ஒன்றுற்றக்கால்
ஊராண்மை மற்று அதன் எஃகு" (773)

என்று தம் திருக்குறளில் கூறியுள்ளார். படையிழந்து தனித்து நின்ற இராவணனை நோக்கி, இராமன், 'இன்று போய் நாளை வா' என்றது இதுவேதான். இத்தகைய ஊராண்மைப் பண்பு அனுமனிடமும் இருந்தது.

1. அனுமன் கடல் மேல் தாவியபோது குறுக்கிட்ட மைந்நாக மலையை அடக்கினான். பின் அது மக்கள் உருவில் வந்து, விருந்து உண்டு செல்லுமாறு அனுமனை வேண்டியது. அதற்கு அனுமன், 'யான் வந்த காரியத்தை முடிக்காமல் உணவு அருந்தேன்; உன் அன்புக்கு மகிழ்கிறேன்; யான் இலங்கை சென்று வென்று மீண்டால் உனது விருந்தை உண்பேன்'என அன்புரை வழங்கினான்.

(கடல் தாவு படலம்)

"வருந்தேன் அதுஎன் துணை வானவன் வைத்த காதல்
அருந்தேன் இனியாதும், என்ஆசை நிரப்பி அல்லால்;
பெருந்தேன் பிழிசாலும் நின்அன்பு பிணித்த போதே
இருந்தேன், நுகர்ந்தேன், இதன்மேல் இனி ஈவதென்னோ"— (49

"ஈண்டே கடிதேகி இலங்கை விலங்கல் எய்தி
ஆண்டான் அடிமைத் தொழில் ஆற்றி, என் ஆற்றல் கொண்டே
மீண்டால் நுகர்வென் நின் விருந்து என வேண்டி மெய்ம்மை
பூண்டான் அவன் கண்புலம் பின்பட முன்பு போனான்" (51)

2 அனுமன் தன்னை விழுங்க வந்த சுரசை என்பாளை வென்று அவளுக்கு வாழ்த்துக் கூறிச் சென்றானாம்:

' பொன் மேனியனும் நெடிது ஆசி புனைந்து
போனான்''— (60)

3. இலங்கை மாதேவி தன்னைத் தாக்கியபோது, அவள் பெண் என்று இரங்கி, அவளைக் கொல்லாமல் ஓர் அறை அறைந்து கீழே வீழ்த்தியதோடு விட்டு விட்டான்:

''அடியா முன்னம் அம்கை அனைத்தும் ஒரு கையால்
பிடியா, என்னே பெண் இவள், சொல்லின் பிழை
என்னா
ஒடியா நெஞ்சத்து ஓர் அடி கொண்டான்; உயிரோடும்
இடியே றுண்ட மால் வரைபோல் மண்ணிடை
வீழ்ந்தாள்.''
(ஊர்தேடு படலம்—89)

4. சம்புமாலி என்னும் படைத் தலைவன் பல்வகைப் படைகளுடன் வந்து அனுமனோடு பொருது எல்லாப் படைகளையும் இழந்து தனித்து நின்றான். அவன் நிலையைக் கண்ட அனுமன், அவனை நோக்கி, ''எளியவரின் உயிரைக் கொல்லுதல் நீதியன்று. உடன் வந்தவரைக் காக்கும் வலிமை உனக்கு இல்லை. எல்லாரையும் இழந்து தனித்து நிற்கின்றாய். இப்போது சாவதைத் தவிர உன்னால் வேறொன்றும் செய்ய இயலாது; எனவே, நீ போய் வா'' என்று கூறி அனுப்பினான்.

''ஏதி ஒன்றால், தேரும் அஃதால்; எளியோர் உயிர்
கோடல்
நீதி அன்றால்; உடன் வந்தாரைக் காக்கும் நிலை
இல்லாய்.

சாதி, அன்றேல் பிறிதென் செய்தி? அவர் பின்
தனி நின்றாய்
போதி என்றான் பூத்த மரம்போல புண்ணால்
பொலிகின்றான்''
(சம்பு மாலி வதைப் படலம்—43)

5. இராவணன் உறங்கிக் கொண்டிருந்த பொழுது தான் முதல் முதல் அனுமன் அவனைக் கண்டான்; அப்போது அவனைக் கொல்ல நினைத்தானாம். ஆனால், உறங்குபவனது உயிரைக் கொல்லல் குற்றம் என்று விட்டு விட்டானாம்.

''உறங்குகின்றபோது உயிருண்டல் குற்றம் என்று
ஒழிந்தேன்''
(பிணி வீட்டுப் படலம்—51)

6. இராமனும் சீதையும் படும் துயரை எண்ணி அனுமன் பெரிதும் வருந்தினான்.

3. பணிவு

1. இராமன் சீதை முதலியோரிடம் அனுமன் மிகவும் பணிவு கொண்டிருந்தான். சீதையைத் தான் எடுத்துக் கொண்டு செல்ல எண்ணியபோது, அது கூடாது எனச் சீதை மறுக்க, அனுமன் அதற்குப் பணிந்து செயல் பட்டான்.

2. அனுமனை நேருக்கு நேர் பொருது வெல்ல முடியாமல் போனதால், இந்திரசித்து நான்முகன் தந்த படையை அனுமன் மேல் அனுப்பினான். உடனே அனுமன் 'இது நான்முகன் படை; இதன் ஆணையை நாம் புறக் கணித்து அப்பால் அகலுதல் பொருத்தம் அன்று' என எண்ணிக் கண்ணை மூடிக்கொண்டு அதற்குக் கட்டுப்பட்டு இருந்தான். உடனே, அனுமன் இறந்து விட்டதாக அரக்கர்கள் தப்புக் கணக்கு போட்டனர்.

"சாய்ந்த மாருதி சதுர்முகன் படை எனும் தன்மை
ஆய்ந்து, மற்று இதன் ஆணையை அவமதித்து அகறல்
ஏய்ந்தது அன்று என எண்ணினன் கண் முகிழ்த்து
இருந்தான்.
ஓய்ந்ததாம் இவன்வலி என அரக்கன் வந்துற்றான்".
(பாசப்படலம்—58)

#### 4. கடமையுணர்வு

1. அனுமன் சீதையைக் காண முடியாமைக்கு மிகவும் வருந்தினான். தான் கடமை தவறிவிட்டதாக எண்ணித் தானும் இறக்க எண்ணினான். இராமனுக்கு அடிமை செய்வதாக நடித்து வாழ்வதா உண்மையான அடிமைப் பணியாகும்? என்று வருந்தினான்.

"நடித்து வாழ்தகைமையதோ அடிமைதான்"
(ஊர்தேடு படலம்—218)

"கண்ணியநாள் கழிந்துளவால்; கண்டிலமால்
கனங்குழையை
விண் அடைதும் என்றாரை ஆண்டு இருத்தி
விரைந்தயான்;
எண்ணியது முடிக்ககில்லேன்; யான்
முடியாது இருப்பேனா?
புண்ணியம் என்றொரு பொருள் என்னுழை
நின்றும் போயதால்" (226)

2. ஏற்றுக்கொண்டு வந்தபடி சீதையைத் தேடிக் கண்டுபிடித்து, இராமனிடம் சென்று கண்ட விவரமும் சீதையின் நிலைமையும் அறியச் செய்தல்.

#### 5. சொல் தவறாமை

1. சீதையைக் கண்டுபிடித்தே வருவேன் என்று அனைவரிடமும் சொன்ன சொல் தவறாமல் சீதையைக் கண்டுவருதல்.

2. திரும்பி வரும்போது உன்னிடம் வருவேன் என மைந்நாக மலைக்குச் சொல்லிச் சென்ற சொல் தவறாமல் இலங்கையிலிருந்து திரும்பியபோது மைந்நாக மலையையும் கண்டு விவரம் கூறிச் சென்றான் அனுமன் :

''மைந்நாகம் என்ன நின்ற குன்றையும் மரபின் எய்தி
கைந்நாகம் அனையோன் உற்றது உணர்த்தினன்?
(திருவடி தொழுத படலம்-2)

### 6. கூரிய மதிநுட்பம்

அனுமன் தன் கூரிய மதிநுட்பத்தால், குறிப்பாகப் பல செய்திகளை நுனித்துணர்ந்து தெரிந்து கொண்டான்.

1. அனுமன் முதல் முதலாக வீடணனைக் கண்டதும், அவனது நல் உணர்வைத் தனது உணர்வினால் உணர்ந்து கொண்டான்; இவன் குற்றம் இல்லாதவன்—நல்ல பண்பினன் என்பதையும் குறிப்பால் தெரிந்து கொண்டான்.

''உற்று நின்று அவன் உணர்வைத் தன் உணர்வினால்
உணர்ந்தான்;
குற்றம் இல்லதோர் குணத்தினன் இவன் எனக்
கொண்டான்''
(ஊர் தேடு படலம்—135)

2. அனுமன் இந்திரசித்தைக் கண்டதும், இவன் அரக்கனா? சிவன் மகனாகிய முருகனா? இராம இலக்குமணர்கள் இவனோடு பல நாள் போரிட நேரும்போல் நினைக்கச் செய்கிறது இவனது தோற்றம். சிவனைத் துணையாகக் கொண்ட இராவணன் இந்த மூன்று உலகங்களையும் வென்றது மிகவும் எளிய செயலே என்றெண்ணுகிறான்:

''வளையும் வாள்எயிற்று அரக்கனோ?
கணிச்சியான் மகனோ?
அளையில் வாளரி அனையவன் யாவனோ அறியேன்.
இளைய வீரனும் ஏந்தலும் இருவரும் பலநாள்
உளைய உள்ளபோர் இவனொடும் உளதென
உணர்ந்தான்'' (139)

''இவனை இன்துணை உடையபோர் இராவணன் என்னே
புவனம் மூன்றையும் வென்றதோர் பொருள் எனப்
புகறல்? (140)

(3) பின்னால் நிகழ இருப்பதைத் தன்மதி நுட்பத்தால் முன்னாலேயே அறிந்து உணர்ந்து அனுமன் கூறுகிறான். இராவணனது தோற்றத்தைக் கண்ட அனுமன், இவனை இராமரால் தவிர பிறரால் வெல்ல முடியுமோ?

இவனால் என்னையும் வெல்ல முடியாது; என்னால் இவனையும் வெல்ல முடியாது; எனவே, தாக்குவோமாயின், வீண் காலங்கள் கழிந்து போகுமே தவிரப் பயன் இராது; எனவே, இவனோடு நாம் போர் தொடங்குவது சரியா?— என்றெல்லாம் அனுமன் எண்ணுகிறான் :

''கொல்லலாம் வலத்தனும் அல்லன்; கொற்றமும்
சொல்லலாம் தரத்தனும் அல்லன்; தொல்லை நாள்
அல்லெலாம் திரண்டன நிறத்தன் ஆற்றலை
வெல்லலாம் இராமனால்; பிறரும் வெல்வரோ?''
(பிணி வீட்டுப் படலம்—56)

''என்னையும் வெலற்கு அரிது இவனுக்கு; ஈண்டு இவன்
தன்னையும் வெலற்கு அரிது எனக்கு; தாக்கினால்
அன்னவே காலங்கள் கழியும்; ஆதலான்
துன்னருஞ் செருத்தொழில் தொடங்கல் தூயதோ?(57)

(4) அனுமன், இராவணனது பொல்லாத—மிகுந்த காதல் நோயைக் கண்டதும், சீதை தூய்மையாய் உள்ளாள் என்று திடமாக உணர்ந்தான். அதாவது, இராவணன் இதற்கு முன்பு சீதையோடு உடல் உறவு கொண்டிருந்தால் இவ்வளவு காம நோய் இராதல்லவா? கெஞ்சவும் மாட்டான் அல்லவா? 'ஆறின சோறு பழங்கஞ்சி —'பழகப் பழகப் பாலும் புளிக்கும்' என்னும் பழமொழிகட்கேற்ப முன்பே தொடர்பு கொண்டிருந்தால் இப்போது வெறி கொண்டு அலைய மாட்டான் அன்றோ?

"அந்நிலையான் பெயர்த்துரைப்பான் ஆய்வளைக்கை
அணி இழையார்
இந்நிலையா னுடன் துயில்வார் உளர் அல்லர்
இவன் நிலையும்
புன்னிலைய காமத்தால் புலர்கின்றநிலை, பூவை
தன்னிலையில் உள்ள என்னும் நலன் எனக்கு
நல்குமால்" (222)

### 7. அறிவுடைமை—நீதி யுணர்வு

(1) கும்ப கருணனைக் கண்டதும், அவனைக் கொல்ல வேண்டும் என்று எழுந்த—வடவை முக நெருப்பைப் போன்ற சினத்தை, அனுமன், தன் அறிவு என்னும் கடல் நீரால் அவித்தான்?

"மறுகி ஏறிய முனிவு எனும் வடவை வெங்கனலை
அறிவெனும் பெரும் பாவையம் புனலினால் அவித்தான்"
(ஊர் தேடு படலம்—129.)

(2) முதல் முதல் மண்டோதரியை நோக்கிய அனுமன் அவளது பண்பான தோற்றத்தைக் கண்டு, இவள் சீதையா யிருப்பாளோ? சீதையாயின் இராவணன் மாளிகையில் இருக்கலாமோ எனச் சினந்தான். சீதை கற்பு நீங்கி இங்கு இருக்கிறாள் எனில், இராமன் புகழோடு யானும் இலங்கையும் அரக்கரும் அழிய வேண்டி வரும் —

இல்லையில்லை; இவள் சீதை அல்லள். சீதை இங்கு வாராள்; யான் எண்ணியது தவறு; இவளைப் பார்த்தால் ஏதோ கவலையோடு இருப்பதாகத் தெரிகிறது. இவள் மண்டோதரியே! இவள் கணவனும் இலங்கையும் அழியக் கூடும்—என்றெல்லாம் ஐயுற்று எண்ணிப் பின்னர்த் தன் அறிவுடைமையால் தெளிவு பெறுகின்றான்.

"அன்னள் ஆகிய சானகி இவள்என
அயிர்த்து அகத்தெழு வெந்தீ
துன்னும் ஆருயிர் உடலொடு சுடுவதோர்
துயர் உழந்து இவை சொன்னான்" (197)

"கற்பு நீங்கிய கனங்குழை இவள்எனின்
காகுத்தன் புகழோடும்
பொற்பும் யானும் இவ்விலங்கையரும் அரக்கரும்
பொன்றுதும் இனறு என்றான்" (198)

"கான் உயர்த்தார் இராமன்மேல் நோக்கிய
காதல் காரிகை யார்க்கு
மீன் உயர்த்தவன் மருங்குதான் மீளுமோ
நினைத்தது மிகை என்றான்" (198)

"மலர்க் கருங்குழல் சோர்ந்து வாய் வெரீஇ சில
மாற்றங்கள் பறைகின்றாள்;
உலக்கும் இங்கிவள் கணவனும்; அழிவும் இவ்
வியன் நகர்க்கு உளது என்றான்" (200)

(3) அனுமன் இராவணனைக் கண்டதும் அவனைக் கொல்ல வேண்டும் எனக் கொதித்து எழுந்தான். பின்னர், வாய் மடித்துக் கைகளைப் பிசைந்து கொண்டு தன் அறிவைப் பயன்படுத்திப் பின் வருமாறு எண்ணித் தணிவு பெற்றான். இராவணனைக் கொல்லும்படி இராமர் பணிக்க வில்லை, ஒன்றை விட்டு ஒன்று செய்தல் உணர்வுடைமைக்கு அழகாகாது. பின்பு எண்ணிப் பார்க்கின், பெரிய பிழையாக முடியும். நன்னெறியினர் சிவன் போன்ற ஆற்றல் உடையர் எனினும், ஆராயாது எதையும் விரைந்து (அவசரப்பட்டுச்) செய்யமாட்டார்கள் என்றெல்லாம் எண்ணி அமைதி பெற்றான். எப்பொழுதும் பொங்கி எழுந்து உலகை அழிக்கக் கூடிய இயல்புடைய தெனினும், உலகம் அழியக் கூடிய ஊழிக் காலத்தை எதிர்பார்த்திருக்கும் கடல்போல் அனுமன் அடங்கியிருந்ததாகக் கம்பர் புகழ்ந்துள்ளார்.

''என்றூக்கி எயிறு கடித்து இருகரனும்
பிசைத்து எழுந்து
நின்றூக்கி உணர்ந்துரைப்பான்: நேமியோன்
பணி அன்றால்;
ஒன்றூக்கி ஒன்றிழைத்தல் உணர்வு
உடைமைக்கு உரித்தன்றால்;
பின்தூக்கின் இது சாலப் பிழை பயக்கும்
எனப் பெயர்ந்தான்'' (219)

''ஆலம்பார்த் துண்டவன்போல் ஆற்றல்
அமைந்துளர் எனினும்
சீலம்பார்க்க உரியோர்கள் எண்ணாது
செய்பவோ?
மூலம் பார்க்குறின் உலகை முற்றுவிக்கும்
முறைத்தெனினும்
காலம் பார்த்து இறைவேலை கடவாத
கடல் ஒத்தான்'' (220)

4. இராவணன் அனுமனை நோக்கி, ''தூதாக வந்தநீ அசோகவனத்தையும் அரக்கரையும் அழித்தது ஏன்?'' என்று வினவினான். அதற்கு அனுமன், ''எனக்கு உன்னைக் காட்டுவார் இன்மையால் அசோக வனத்தை அழித்தேன்; என்னைக் கொல்ல வந்தவர்களைக் கொன்றேன். இப்போது மென்மையுடன்—அமைதியுடன் உன்னைக் காண ஈங்கு வந்துள்ளேன்''—என்றான்.

''காட்டுவார் இன்மையால் கடி காவினை
வாட்டினேன்; என்னைக் கொல்ல வந்தார்களை
வீட்டினேன்; பின்னும் மென்மையினால் உன்தன்
மாட்டு வந்தது காணும் மதியினால்''
(பிணி வீட்டுப் படலம்—104)

5. சீதை அசோக வனத்தில் முதல்முதல் அனுமனைக் கண்டபோது, இவன் அரக்கன் அல்லன்—நன்னெறி நிற்பவன்—ஐம்பொறிகளையும் வென்ற உயரியோன்—ஒரு

வேளை தேவனாக இருக்கலாம்—நல்ல உணர்வினன்! தூய்மையானவன்; குற்றம் இல்லாதவன்—என்று மதிப்பிட்டாள். இது அனுமனின் இயற்கைப் பண்பு என்பதை அவனது தோற்றமே உணர்த்திற்று:

"என்றவன் இறைஞ்ச நோக்கி, இரக்கமும்
முனிவும்எய்தி,
நின்றவன் நிருதன் அல்லன்; நெறிநின்று
பொறிகள் ஐந்தும்
வென்றவன்; அல்லனாகில் விண்ணவ னாகவேண்டும்;
நன்றுணர்வு உரையன்; தூயன்; நவை இலன்...."
(உருக்காட்டுப் படலம்—26)

6. அசோக வனத்தில் வருந்திக் கொண்டிருந்த சீதைக்கு இனிய—நயமான உரை கூறி ஆறுதல் செய்த திறமையன் அனுமன்

7. இராவணனுக்குத் தக்க அறிவுரை கூறிய உயரிய பேதைமை உடையவன் அனுமன்.

8. இலங்கையிலிருந்து மீண்டு, இராமனிடம் சென்று சீதை இலங்கையில் கற்பு நெறி வழுவாமல் இருக்கின்றாள் என்பதைக் குறிப்பால் உணர்த்திய வல்லவன் அனுமன்.

சுந்தர காண்டத்திலன்றி வேறு பகுதிகளிலிருந்தும் அனுமனின் பெருமையை அறிந்து கொள்ளலாம்.

# 9. அசோக வனத்தில் சீதையின் நிலைமை

**1. துயர நிலை :**

அசோகவனத்தில் இருந்தபோது சீதை மிகவும் மனம் நொந்து காணப்பட்டாள். அவளது துயரம் மிகவும் இரங்கத் தக்கதாயிருந்தது.

கற்கட்கு நடுவே மழைத்துளி காணாமல் வாடிய மருந்துச் செடி போலவும், வெயிலிடைத் தெரியா விளக்கு போலவும், அரக்கியர் நடுவே புலிக்குழாத்திடையே அகப் பட்ட மான்போலவும் காணப்பட்டாள்.

அழுதல் விழுதல் விம்முதல் அன்றி வேறு அறியாள். தொடர்ந்து அழுவதால் கண்ணிலிருந்து அருவி போல் நீர் பொழிய, 'மழைக்கண்' என்பது காரணப் பெயர் ஆயிற்று. (பெண்களின் கண்களை மழைக்கண் எனல் மரபு).

இராமனை நினைந்து நினைந்து அழுதலால் நனைந்த உடை உடல் வெப்பத்தால் காய்ந்து போகிறது. இவ்வாறு நனையவும் காயவுமாக இருந்தாள்.

கண்கள் நான்கு பக்கமும் அளந்தன—சடை முறுக்கிக் கொண்டது—உடையன்றி வேறு அணிகலன்கள் இல்லை. நீராடவில்லை.

அமிழ்தத்தால் மன்மதன் தீட்டிய அழகோவியம் புகையுண்டதைப்போல் பொலிவற்றிருந்தாள்.

2. சில நினைவுகள்

துயரத்தால் பலவாறு நினைக்கலானாள் : நம்மை இராவணன் எடுத்து வந்த பிறகு, இலக்குவன் போய் இராமரைக் காணவில்லையா?

இராவணன் தன்னை எடுத்து வந்தது இராமருக்குத் தெரியாதா? வழியில் நேரிட்ட சடாயுவும் மாண்டு போனதால் என்னைப் பற்றி யார் இராமனுக்குக் கூறக்கூடும்.

இராமர் யார் இட உணவு அருந்துவாறோ? என்னைத் தம்பி இலக்குமணன் சொன்னதைக் கேளாத கொடியவள் என்றெண்ணித் துறந்து விட்டாரோ?

என்னைச் சூழ்ந்து அரக்கர்கள் நின்றிருப்பர் என்றெண்ணி இராமர் வரவில்லையோ?

ஒருவேளை, தாயாரும் தம்பியரும் காட்டிற்கு வந்து அவரை அயோத்திக்கு அழைத்துக் கொண்டு போயிருப்பார்களோ?

பதினான்கு ஆண்டுகள் கழியாமல் அவர் அயோத்திக்குத் திரும்ப மாட்டாரே! அரக்கரோடு அவர்க்குப் பெரிய போர் உள்ளது.

அவரை இப்பிறப்பில் இனிக்காண முடியாதோ? என் பழைய ஊழ்வினை இவ்வாறு முடிந்ததோ?

3. பழைய நினைவுகள் சில

கைகேயி, உன் தம்பிக்கே அரசு என்று சொன்னபோது மும்மடங்கு பொலிந்த இராமனது முகத்தை நினைத்துப் பார்த்தாள். பட்டம் பெறுக என்றபோதும், பட்டத்தைத் துற என்றபோதும், சித்திரத்தில் அலர்ந்த செந்தாமரை

எப்போதும் ஒரே மாதிரியாயிருப்பது போல, ஒத்த நிலையில் ஒரே மாதிரியாய் இருந்த அமைதியான—சாந்தமான இராமனது நிலையை எண்ணிப் பார்த்தாள்.

சிவனது வில்லை இராமன் முறித்த ஆற்றலை எண்ணி வியந்தாள். தந்தைக்கு இறுதிக் கடன் செய்தது—பரதன் தவக்கோலம் கொண்டது ஆகியவற்றை நினைத்தாள்.

இராமன், வேடன் குகனிடம், என் தம்பி நின் தம்பி; நீ என் தோழன்; இவள் (சீதை) உன் கொழுந்தி என்றெல் லாம் கூறிய அன்புரை அவள் உள்ளத்தை வாட்டியது.

"ஆழநீர்க் கங்கை அம்பி கடாவிய
ஏழை வேடனுக்கு, எம்பி நின்தம்பி, நீ
தோழன், மங்கை கொழுந்தி எனச் சொன்ன
வாழி நண்பினை உன்னி மயங்குவாள்."
(காட்சிப் படலம்—23)

இராமன் பரசுராமனின் வில்லை முரித்ததையும், காகமாக வந்து தீச்செயல் புரிந்த சயந்தனது கண்ணைப் போக்கியதையும், வீராதன் என்னும் அரக்கனின் தீவினையைப் போக்கியதையும் சீதை எண்ணி ஏங்கினாள்.

அந்தணர்கட்கு இராமன் ஆனினம் (பசுக்கள்) பரி சளித்தபோது ஓர் அந்தணன் ஓர் ஆன் பெற்றது போதாமல் மேலும் பெற அவாக் கொண்டதைக் கண்டு இராமன் சிரித்ததை எண்ணிச் சீதை இப்போது அழுதாள்:

"பரித்த செல்வம் ஒழியப் படரும்நாள்
அருத்தி வேதியற்கு ஆன் குலம் ஈந்து அவன்
கருத்தின் ஆசைக் கரை இன்மை கண்டு இறை
சிரித்த செய்கை நினைந்து அழும் செய்கையாள்"—26

இப்பாடலில் சிரித்த செய்கையும் அழுத செய்கையும் அடுத் தடுத்துக் கூறப்பட்டிருப்பது ஒரு வகை முரண் தொடை யாகும்.

**4. சீதையின் புலம்பல்**

அசோகவனத்தில் இருந்த போது பலவாறு புலம் பலானாள்: இராமர் வந்து எனது உயிரை மீட்டுத் தருவாரா?

கல்லாத திங்களே (மதியே)! நிலவொளியே! இரவே! இருளே! என்னை மட்டும் வருத்துகிறீர்களே! இராமரையும் வருத்தமாட்டீர்களா? வாடைக்காற்றும் குளிருக்குப்பதில் நெருப்பை வீசுகிறதே! (உருக்காட்டுப் படலம்)

''கல்லா மதியே கதிர்வாள் நிலவே!
செல்லா இரவே சிறுகா இருளே!
எல்லாம் எனையே முனிவீர்; நினையா
வில்லாளனை யாதும் விளித்தி லீரோ'' (4)

''தழல் வீசி உலாவரு வாடை தழீஇ
அழல்வீர் எனதாவி அறிந்தி லீரோ!'— (5)

பிரிவுத்துயரால் சீதை வருந்துவதை இப்பாடல்கள் அறி விக்கின்றன. தன்னை வருத்துவதால் மதியைக் கல்லா மதி எனச் சீதை காய்கிறாள். இரவு செல்லாமல் அப்படியே நீண்டு கொண்டிருக்கிறதாம். இருளும் அப்படித்தானாம். குளிரால் நடுங்கச் செய்யக் கூடிய வாடைக் காற்று நெருப்பை வீசி உலா வருகிறதாம். இவை, காதலரைப் பிரிந்து வருந்துவோர் கூறும் மரபுக் கூற்றுகளாம்.

என் நாயகரே! காட்டுக்கு வராதே என்று அன்று கூறினீர்! ஏதோ வந்து விட்டேன். என்மேல் இரங்கி என்னை மீட்க இங்கே வாரீரோ?

போகாமல் இன்னும் நாணம் இன்றி இருக்கிற என் உணர்வே! உயிரே! இருந்ததே இருந்து விட்டீர்! யான் என் நாயகரைக் காணும் வரையும் போக வேண்டா! யான் பழியோடு போகக் கூடாதல்லவா?

''பேணும் உணர்வே உயிரே பெருநாள்
நாண் இன்று உழல்வீர்; தனி நாயகனைக்
காணும் துணையும் கழிவீர் அலீர்; நான்
பூணும் பழியோடு பொருந்துவதோ''

தசரதன் இறக்க, உலகம் துயர் கொள்ளும்படி காட்டிற்கு வந்த கொடியவர்களாகிய இராம இலக்குமணர் இனியும் இங்கு வாராரோ!

நாயகரைக் காணும் வேட்கையால் இந்நாள் வரை உயிர் காத்து இருக்கிறேன். அரக்கர் சிறையில் இருந்த என்னை அவர் இனித் தீண்டுவாரா?

யான் பிறர் மனம் புகுந்ததை உணர்ந்தும், அந்த இராவணன் சொல்கின்றவற்றையெல்லாம் காதில் வாங்கியும் உயிர் துறக்காமல் நெடுங்காலம் உயிரோடு இருக்கின்றேனே! என்னிலும் கொடிய அரக்கியர் யாண்டுள்ளனர்?

''உன்னினர் பிறர்என உணர்ந்தும், உய்ந்து அவர்
சொன்னன சொன்னன செவியில் தூங்கவும்
மன்னுயிர் காத்து இருங்காலம் வைகினேன்
என்னின் வேறு அரக்கியர் யாண்டையார் கொலோ''
(12)

கற்புடைப் பெண்டிர் பிறர் மனம் புகார் என்பதை உணர்ந்தும், உயிரோடு தான் இருக்கின்றாளாம்.

பழி சுமந்தும் இன்னும் உயிரோடிருக்கிறேன். என் குடிப்பிறப்பும் நாணமும் மிக நல்ல! உண்மையான கற்பு உடைய பெண்கள் உலக நடைமுறையில் இல்லை போலும்! கதைகளில் மட்டுமே கற்புடைய பெண்கள் இருந்ததாகச் சொல்லப்படுகின்றார்களோ! கணவரைப் பிரிந்தும் உயிர் வாழ்பவர் யார் உளர்?

''சொல் பிரியாப் பழி சுமந்து தூங்குவேன்
நற்பிறப்பு உடைமையும் நாணும் நன்றரோ
கற்புடை மடந்தையர் கதையில்தான் உளோர்
இல்பிரிந்து உய்ந்தவர் என்னின் யாவரோ?'' (13)

பிறர் மனை இருந்தவள் சீதை என்று எண்ணி என் கணவர் போய் விட்டாரோ? இனி என் செய்வேன்?

''பிறர் மனை எய்திய பெண்ணைப் பேணுதல்
திறன் அலது என்று உயிர்க்கு இறைவன்
தீர்ந்தனன்'' (14)

எப்போது யான் இப்பழி எய்தினேனோ—அப்போதே யான் உயிர் விட்டிருக்க வேண்டும். நான் இனித் துறக்கமா போகப் போகிறேன்?

ஆடவர் பழி சுமக்கினும் சுமக்கலாம்; ஆனால், நற்குடியில் பிறந்த நான் பழி சுமக்கலாமா?

மானின் பின் கணவரை அனுப்பிவிட்டு, நீயும் போய்ப் பார் என்று மைத்துனர் இலட்சுமணனை வைது விரட்டிப் பின் நஞ்சனைய இராவணன் அகம் புகுந்த யான் உயிருடன் இருப்பதை உலகம் ஏற்றுக் கொள்ளுமா?

மயிர் நீப்பின் வாழாக் கவரிமா போன்ற உயர்குணப் பெண்டிர்கள், இவள் கணவனைப் பிரிந்து கள்வன் ஊர் இருந்தவள் என ஏசும்படி வாழ்வேனோ?

''வருந்தல் இல்மானம் மாஅனைய மாட்சியர்
பெருந்தவ மடந்தையர் முன்பு பேதையேன்
கருந்தனி முகிலினைப் பிரிந்து கள்வன்ஊர்
இருந்தவள் இவள்என ஏச நிற்பெனோ? (19)

இராமர் அரக்கரை வென்று என்னைச் சிறை மீட்டும் போது, நீ என் மனைக்கு வரத் தகுதியுடையவள் அல்லள் எனக் கூறின், யான் என் கற்பை எவ்வாறு நிலைநிறுத்திக் காட்டுவேன்.

''அற்புதன் அரக்கர்தம் வருக்கம் ஆசார
விற்பணி கொண்டு அருஞ்சிறையின் மீட்ட நாள்
இற்புகத் தக்கலை என்னில் யானுடைக்
கற்பினை எப்பரிசு இழைத்துக் காட்டுகேன்!'' (20)

சீதை இவ்வாறெல்லாம் புலம்புவது, அயோத்தியில் முடி சூடிக் கொண்ட பின்பு, இராமன் சீதைமேல் ஐயம் கொண்டு காட்டுக்கு அனுப்பியதாகக் கூறப்படும் கதைக்கு ஒரு முன்னோட்டம் போல் தோன்றுகிறதன்றோ?

# 10. சீதை சொல்லியனுப்பியவை

**சூடாமணிப் படலம்**

அனுமன், இராமருக்குச் சொல்ல வேண்டிய செய்தி உண்டா எனக் கேட்ட போது, சீதை சொல்லச் சொன்ன செய்திகள் மிகச் சுவையாயுள்ளன. அவை யாவன?

இராமருக்காக யான் இன்னும் ஒரு திங்கள் காலமே இருப்பேன். இது அவர்மேல் ஆணை. பின்னர் யான் உயிர் துறப்பென். (29)

என்னை அவர் மனைவியாய் எண்ணாவிடினும், என் பால் அவருக்கு அருள் இல்லையாயினும், தம் வீரத்தைக் காத்தலுக்காவது இங்கே வந்து போர் செய்து என்னை மீட்க வேண்டும். (30)

இலக்குமணன் காட்டில் என்னைக் காத்திருந்தது போலவே இங்கு வந்து மீட்டுச் செல்லுதலும் கடமையாகும். (31)

இராமர் ஒரு திங்களுக்குள் வாராராயின் யான் இறந்து விடுவேன்; அவர் தன் தத்தைக்கு இறுதிக் கடன் செய்தது போல் எனக்கும் கங்கையில் கடன் செய்தல் வேண்டும். இவற்றையெல்லாம் கூற வேண்டும். (32)

மாமியார் மூவருக்கும் சீதை இறக்கிறாள்; உங்களைத் தொழுதாள்—எனக் கூறவேண்டும். (33)

என் கை பற்றி மணந்து கொண்ட நாளில், இந்த இப் பிறவியில் இரு மாதரை உள்ளத்தாலும் தீண்டேன் என்று சொல்லித் தந்த செம்மையான வரத்தை அவருக்குக் காதில் கூறி நினைவு செய்வாயாக!

''வந்தெனைக் கரம் பற்றிய வைகல்வாய்
இந்த இப்பிறவிக்கு இரு மாதரைச்
சிந்தையாலும் தொடேன் என்ற செவ்வரம்
தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய்'' (34)

இந்தப் பாடல், படிப்பவர்க்கு வேலை கொடுக்கும் பாடலாகும். இந்தப் பிறவி-இப்பிறவி-இந்த இப்பிறவி என்பதன் பொருள் காணல் வேண்டும் 'இந்த' என்பது திருமால் மண்ணுலகில் வந்து எடுத்த பிறவிகளைக் குறிக்கிறது 'இப் பிறவி' அந்த மண்ணுலகப் பிறவிகளுள் இராமனாக வந்த (இராமாவதாரம் எடுத்த) பிறவியைக் குறிக்கிறது. இராமன் சீதையிடம் இவ்வாறு கூறியிருப்பானோ-மாட்டானோ! சீதைக்கு இது புரியுமோ-புரியாதோ? நூலாசிரியர் கம்பர் திருமாலின் பிறவியே இராமன் என்றும், திருமகளின் பிறவியே சீதை என்றும் எண்ணுவதால் இவ்வாறு பாடியுள்ளார். திருமாலுக்கு இலக்குமி (திருமகள்), பூதேவி, நீளாதேவி என மனைவியர் மூவர். அவர்களுள் இலக்குமி மட்டுமே இராமப் பிறவியில் சீதையாக வந்துளாள். எனவே, இந்த இப்பிறவியில். இலக்குமியாகிய உன்னைத்தவிர, பூதேவி, நீளாதேவி என்னும் இரு மாதரையும் மனத்தாலும் தொடேன் என்று கூறியதாக இப்பகுதிக்குப் பலராலும் பொருள் கூறப்படுகிறது.

ஒரு மருத்துவர் ஒரு பிணியாளிக்கு மருந்து தந்து, குரங்கை மட்டும் நினைக்கக் கூடாது என்பதைப் பத்தியமாகக் கூறினாராம். இது எப்படி இருக்கிறது? இவ்வாறு கூறியதால் பத்தியம் என்பது நினைவு வரவே, கட்டாயம் குரங்கின் நினைவு வந்துதான் தீரும். இங்கேயும் அதே கதைதான்! பூதேவியையும் நீளாதேவியையும்

சிந்தையாலும் தொடேன் என்பதிலேயே, இராமன் அவ்விருவரையும் இபபோது சிந்தையால் தொட்டதல்லாமல் சொல்லாலும் குறிப்பிட்டுள்ளானே! எனவே, இப்பொருள் பொருந்துமா?

இரண்டாவது மாதரை என்று கூறாமல், இருமாதரை என்று கூறியிருப்பதே இங்கே குழப்பத்திற்குக் காரண மாகும். செய்யள்—யாப்பு அமைதி நோக்கி, 'இருமாதர்' என்னும் தொடரிலேயே இரண்டாவது மாதர் என்னும் பொருள் அமைந்திருப்பதாகக் கொள்ளலாம். இரு மாதரைத் தொடேன் என்றால், சீதையாகிய ஒரு மாதரைத் தவிர மேலும் ஒரு மாதரை விரும்பேன் என்று கூறியதாகப் பொருள் செய்யக் கூடாதா என்ன?

திருமாலின் கிருஷ்ணாவதாரத்தைப் பற்றி நூலாசிரியர் கட்குத் தெரியும்—கம்பருக்கும் தெரியும். கிருஷ்ணன் ஒருவர்க்கு மேற்பட்ட பல மாதர்களை மணந்து கொண் டான். திருமால், இராமாவதாரத்தைப் போல் சிக்கனமாக இல்லாமல், கிருஷ்ணாவதாரத்தில் சிறிது தாராளமாக நடந்து கொண்டார். அதன்படி, அப்பிறவியைப் போல் இன்றி இப்பிறவியில் இரு மாதரைத் தொடேன் என்று கூறியதாகக் கொள்ளக் கூடாதா என்ன? இவ்வாறு கூறின், பூதேவியையும் நீளாதேவையையும் இங்கே வம்புக்கு இழுக்கவேண்டியதில்லையல்லவா?

இராமாவதாரத்திற்குப் பின்பல்லவா திருமால் கிருஷ்ணாவதாரம் எடுத்தார்? கிருஷ்ணாவதாரத்தில் பல மனைவியர் இருப்பர் என்பது இப்போதே இராமனுக்கு எவ்வாறு தெரியும்?—என்று வினவலாம். திருமால்தான் இரு பிறவிகளையும் எடுத்தவர் ஆதலின், அவருக்குப் பின்னால் நடக்கப் போவதும் தெரியக்கூடும் அல்லவா? மற்றும், பிற்காலத்து நூலாசிரியர்கட்குக் கிருஷ்ணாவ தாரத்தைப் பற்றித் தெரியும். ஆதலின், அவர்கள் அதை மனத்தில் வைத்துக் கொண்டு இவ்வாறு எழுதியிருக்கலாம் அல்லவா?

சரி போகட்டும்! இதற்கு இன்னொரு விதமாகப் பொருள் கூறினால் என்ன? இராமனை 'ஏகபத்தினிவிரதன்' என்று கூறுகிறார்களே —இதன் உட்பொருள் என்ன? நாம் எல்லாம் மட்டும் பல பத்தினிவிரதர்களா என்ன? நாமும் ஏகபத்தினி விரதர்கள்தாமே?

ஆனால், இராமன் நம்மைப் போன்றவன் அல்லன்; அரச குலத்தினன் அவன். மூன்று பட்டத்தரசிகளை மணந்துகொண்டிருந்ததல்லாமல், மேலும் ஒரு நகராட்சியையே (முனிசிபாலிட்டியையே) அரண் மனைக்குள் நடத்திய — அதாவது — அறுபதினாயிரம் மனைவிகளை மணந்த தசரதனுக்கு மகன் இராமன்.

அரசர்களுக்குப் பல மனைவியர் உண்டு என்பது வரலாறு கூறும் உண்மை. இத்தகைய அரசகுலத்தில் பிறந்த—அரசனாகிய இராமன் பல மனைவியரை மணக்காமல் சீதை ஒருத்தியோடு அமைந்துவிட்டமை அவனுக்குச் சிறப்பாகும். உலகியலில் எளியோர் சிலர்கூட மனைவியர் இருவர்—மூவரைக் கொண்டிருப்பதைக் காண லாம். இந்த நிலையில், அரசனாகிய இராமன் ஒரு மனைவி யோடு நிறுத்திக் கொண்டமை பெருமைக்கு உரியதன்றோ?

இதைத்தான், 'இந்த இப்பிறவிக்கு இரு மாதரைச் சிந்தையாலும் தொடேன்' என்று இராமன் கூறியிருக் கிறான் இதன்படி இதற்குப் பொருள் என்னவாம்? 'இந்த' என்பது, பொதுவாக மனிதப் பிறவியைக் குறிக்கிறது. இப் பிறவி என்பது, மனிதர்களுக்குள் இந்த அரசப் பிறவி என்பதைக் குறிக்கின்றது. எனவே, அரசர்கள் பல மனைவி யரைக் கொள்வர்; யான் ஒரு மாதரைத் தவிர இரு மாதரைக் கொள்ளேன் என்னும் கருத்தில் இராமன் கூறியதாக இப் பகுதிக்குப் பொருள் செய்து பார்க்கலாமே!

மேலும் இப்பாடலில், திருமணம் என்பதற்குக் 'கரம் பற்றுதல்' என்னும் பெயர் தரப்பட்டுள்ளது. எனவே,

ஓர் ஆடவன் தன் மனைவியின் கையைத் தவிர, வேறு பெண்ணின் கையை எந்த வகையிலும் தொடாதிருக்கும் நமது நாகரிகத்தையும் ஈண்டு எண்ணிப் பார்க்க வேண்டும். வடமொழியில் இதைத்தான் 'பாணிக் கிரகணம்' என்கிறார்கள் பாணி=கை; கிரகணம்=பற்றுதல்—ஆகும். சிந்தையாலும் தொடேன் என்பதில் உள்ள உம்மை மிக உயர்ந்த பேராண்மையைக் குறிக்கிறது. 'பிறன் மனை நோக்காத பேராண்மை' என்பது வள்ளுவம். நோக்காதது மட்டுமன்று—நினைத்தலும் செய்யமாட்டானாம் இராமன், 'தொடேன்' என்பது தொடுதலுக்கும் உடலுறவு கொள்வதற்கும் உள்ள இடைவெளி மிகுதி என்பதை அறிவிக்கிறது.

இராமன் சீதைக்குத் தந்த இவ்வாக்கு செம்மையான வரமாக—செவ்வரமாகக் கருதப்பட்டுள்ளது. மற்றும், 'தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய்' என்பதில் உள்ள 'திருச் செவி' என்பது நோக்கத்தக்கது. இது இராமர் மேல் வைத்திருக்கும் உயர்வை அறிவிக்கின்றது. மற்றும் நீ போய் அவருடைய திருச்செவியிலே சொல்லு என நையாண்டி செய்வது போன்ற—அதாவது - தனது கசப்பையும் வருத்தத்தையும் அறிவிப்பதாக உள்ள குறிப்பையும் தருகிறது. மேலும் 'சாற்றுவாய்' என்பதும் கவனிக்கத் தக்கது. இது பரக்க உரக்க நன்கு தெரியும் வண்ணம் கூறுதல் ஆகும். 'பறைசாற்றுதல்' என்னும் வழக்காற்றால் இது புலனாகும். எனவே; 'சாற்றுவாய்' என்பது, இராமரிடம் அழுத்தம் திருத்தமாக எடுத்துச் சொல் என்ற குறிப்பையும் தருகிறது. மற்றும், 'வந்து எனைக் கரம் பற்றிய' என்பதில் உள்ள 'வந்து' என்பது, நாங்களாகப் போகவில்லை—அவர்களாக வந்தார்கள்—எனவே, என்னைக் கைவிடலாகாது என்னும் குறிப்பைத் தந்து படிப்பவர்க்கு மகிழ்ச்சி ஊட்டுகிறதன்றோ?

மேலும் சீதை அனுமனிடம் செய்தி சொல்கிறாள்: யான் இறந்து விடுவேனாயின், மீண்டும் வந்து பிறந்து—

அதாவது— அடுத்த பிறவியலும்— இராமரையே மணக்கும் வரம் வேண்டினாள் என்று கூறுக: (35)

அரசு ஆளவும், அவருடன் யானைமேல் உலா வரவும், பலவகைக் கோலங்களைக் காணவும் யான் கொடுத்து வைக்கவில்லை. இதற்காக, என் விதியை— ஊழ்வினையை எண்ணி நோகிறேன். (36)

தன்னை (இராமனை) மக்கள் எதிர்பார்த்திருப்ப தாலும், பரதனும் அரசை ஒப்படைக்கக் காத்திருப்ப தாலும், அன்னைமார்களைப் பார்க்க வேண்டும் என்னும் அவா இருப்பதாலும், அவர் (இராமர்) அயோத்தி செல்லா மல், என்னை மீட்க இலங்கைக்கா வருவார்?

"தன்னை நோக்கி உலகம் தளர்தற்தம்,
அன்னை நோய்க்கும், பரதன் அங்கு ஆற்றுறும்
இன்னல் நோய்க்கும், அங்கு ஏதவ நன்றியே
என்னை நோக்கி இங்கு எங்ஙனம் எய்துமோ?" (37)

மற்றும், என் தாய் தந்தையரையும் மற்றுமுள்ள சுற்றத்தாரையும் கண்டால், என் வணக்கத்தை அவர் கட்குக் கூறுவாயாக. இராமரைத் தொடர்ந்து சென்று காத்து அயோத்திக்கு அரசனாக்கும்படி சுக்கிரீவனிடம் சொல்வாயாக!

"எந்தை யாய் முதலிய கிளைஞர் யார்க்கும் என்
வந்தனை விளம்புதி; கவியின் மன்னனை,
சுந்தரத் தோளனைத் தொடர்ந்து காத்துப் போய்
அந்தமில் திருநகர்க்கு அரசன் ஆக்கு என்பாய்" (38)

என்று இவ்வாறெல்லாம் சீதை அநுமனிடம் சொல்லி அனுப்பினாள். அதாவது, இராமன், இலக்குமணன், மாமியார், தன் பெற்றோர் மற்றும் உள்ள உறவினர்கள், சுக்கிரீவன்— ஆகியோர்க்கெல்லாம் சொல்லும்படியாகப் பல செய்திகள் கூறினாள் சீதை.

மற்றும், இந்திரன் மகன் காகமாக வந்து முறையின்றி நடந்து கொண்டபோது படை செலுத்திக் காகத்தின் ஒரு கண்ணைப் போக்கியதை, யான் சொன்னதற்கு அடையாள மாக நினைவு செய்க.

யான் என் உயிர்போல் வளர்த்த கிளிக்கு என்ன பெயர் வைக்கலாம் என்று அவரிடம் கேட்டபோது, அவர், மிகவும் அன்போடு, என் மாசில்லாத தாயாகிய கைகேயி யின் பெயரை வை என்று கூறியதையும் யான் நினைவு செய்ததாகச் சொல்லுவாயாக என்றாள்:

''என்ஓர் இன்னுயிர் மென்கிளிக்கு
யார் பெயர் ஈகேன்?
மன்ன என்றலும், மாசறு கேகயன் மாது என்
அன்னை தன்பெயர் ஆக என அன்பினோடு
அந்நாள்
சொன்ன மெய்ம்மொழி சொல்லுதி மெய்ம்மை
தொடர்ந்தோய்'' (78)

இப்பாடலில் இராமனது உயர் பண்பு அறிவிக்கப் பட்டுள்ளது. பிறகு தன்னை முடி துறந்து காட்டுக்கு அனுப்ப இருக்கும் கொடியவளாகிய கைகேயியின் பெயரைக் கிளிக்கு வைக்கச் சொன்னதாக அறிவித் திருப்பது ஒருவகைக் காப்பியச் சுவையாகும்.

# 11. இராவணனுக்கு அறிவுரைகள்

கம்ப இராமாயண நூல்ல், பல்வேறு சூழ்நிலைகளில் பலர் இராவணனுக்கு அறிவுரை கூறியதாக அறிவிக்கப் பட்டுள்ளது. இங்கே, சுந்தர காண்டத்தில், சீதை, அனுமன், இந்திரசித்து, வீடணன் ஆகியோர் இராவணனுக்கு அறிவுரைகள் தந்ததாகக் கம்பர் பாடியுள்ளார். இனி அவற்றைக் காண்பாம்:—

### 1. சீதையின் அறிவுரை

தன் விருப்பத்திற்கு இணங்குமாறு வற்புறுத்திய இராவணனுக்குப் பின்வருமாறு சீதை அறிவுரைகள் வழங்கினாள். காட்சிப் படலம்:—

இராவணா! வீணாய் அரக்கர்களைச் சாக விடாதே. உன்னால் உலகம் அழியும். (121)

திருமால், நான்முகன், சிவன் ஆகிய தெய்வங்களைப் போல் இராமரையும் எண்ணி விடாதே. இராமர் மிக்க வலிமை உடையவர். (122)

இராமர் மனிதர்தானே என்று எளிமையாய் எண்ணி விடாதே. ஆயிரம் தோளுடைய கார்த்த வீரியனைக் கொன்ற பரசுராமன் மனிதனே.

"மானுடர் இவரென மனக்கொண் டாயெனின்
கானுயர் வரைநிகர் சார்த்த வீரியன்
தானொரு மனிதனால் தளர்ந்துளான் எனின்,
தேனுயர் தெரியலான் தன்மை தேர்தியால்" (123

இராம இலக்குமணர் இருவர்தானே என்று எளிதாய் எண்ணி விடாதே. உன்னை அழிக்க ஒருவரே போதும். போர் நேரின் யான் கூறுவதுஉண்மை என அறிவாய்) செல்வம் இழந்து வீணே அழியாதே. (124)

இரணியாட்சன், இரணிய கசிபு முதலிய அரக்கர்கள் அழிந்ததை எண்ணிப்பார். (124)

செல்வத்தையும் உறவினரையும் இழக்க நீ அறம் பிழைக்கின்றனை. அறத்தை விரும்ப மாட்டாயோ? (127).

மிக்க வலிமை உடையவராயிருந்தும், அறம் பிறழ்ந்தவர் அழிந்தே தீர்ந்தனர். (128)

அகத்தியர் முதலிய முனிவர்கள் உன்னைக் கொல்லும்படி இராமரிடம் கூறினர். யானே என் காதால் கேட்டேன். அதற்கு ஏற்றபடியே நீயும் அழியப் பார்க்கிறாய். (129)

உன் தங்கை சூர்ப்பணகையின் மூக்கையும் உன்னைச் சேர்ந்தவரின் தோளையும் தாளையும் சிதைத்தவரின் வலிமையை நீ எண்ணிப் பார்க்கமாட்டாயா? (130)

தன் ஆயிரம் கைகளால் உன் இருபது கைகளை முறித்து, உன் வாய் குருதி சிந்தச் செய்து உன்னைச் சிறையிட்ட கார்த்த வீரியனின் தோள்களை வெட்டிய பரசுராமன் இராமனால் வெல்லப்பட்டதை நீ அறியாயோ?

"ஆயிரம் தடக்கையால் நின் ஐந்நான்கு கரமும் பற்றி,
வாய்வழிக் குருதி சோரக் குத்தி வான் சிறையில் வைத்த
தூயவன் வயிரத் தோள்கள் துணித்தவன்
தொலைந்த மாற்றம்
நீ அறிந்திலையோ? நீதிநிலை அறிந்திலாத நீசா" (131)

பாம்பு மந்திரத்தால் கட்டுப்படுவதுண்டு. ஆனால் உனக்கு நல்லது—கெட்டது கூறித் திருத்துபவர் சிலர்; உன்னுடன் பேசி உன்னை முடிப்பவரே உளர்'' (132)

என்றெல்லாம் சீதை நயமாகவும் கூறி இராவணனைத் திருத்த முயன்றாள்.

**2. அனுமனின் அறிவுரை**

இராவணனைத் திருத்த அனுமன் பின்வருமாறு நயவுரை பகர்ந்தான்; பிணி வீட்டுப் படலம்:—

இராவணா? உன் வாழ்க்கையை வீணே கெடுத்துக் கொள்கிறாய், அறம் இன்றித் தீமையே புரிகிறாய். உனக்கு அழிவு நேர இருக்கிறது; ஆயினும், இன்னும் ஒரு நல்லுரை சொலவேன்; கேட்டு நடக்கின் உயிர் பிழைப்பாய்.

"வறிது வீழ்த்தனை வாழ்க்கையை; மன் அறம்
சிறிதும் நோக்கலை; தீமை திருத்தினாய்;
இறுதி உற்றுளது; ஆயினும் இன்னும் ஓர்
உறுதி கேட்டி, உயிர் நெடிது ஓம்புவாய்." (87)

சீதையை விரும்பியதால் உன் தவம் கெட்டது. என்றுமே தீமை நன்மையை அழிக்க முடியாது. காமத்தால் மயங்கியவர் கெட்டாரே யன்றித் தப்பவில்லை. அறம் நீங்கியவர் யார் உருப்பட்டார். காமம் பலரை அழித்துள்ளது.

உயர்ந்தவர் பொருளும் காமமும் விட்டு அருளும் ஈதலும் கொள்வர். பிறர் மனைவியை விரும்பும் கொச்சை-(இழிந்த) ஆண்மை புகழுக்கு உரியதா? வெறுப்பவளை விரும்பலாமா? அது ஒரு வாழ்வா? மூக்கு அறுபடின் அழகாகுமா?

ஆயிரம் தலை இருப்பினும் தீமை புரியின் சிறிதும் ஆக்கம் உண்டாகாது. சிவன் தந்த வரம் தவறினும்

இராமனது சரம் தவறாது. இராமனை மறந்தவர் எவனும் இலர்.

ஆதலின், உன் உயிரையும் செல்வத்தையும் சுற்றத்தார் களையும் அழியாமல் நிலையாய்ப்பெற்றிருக்க, நீ சீதையைச் சிறை விட்டு அனுப்பி விடு என்று சொல்லச் சொல்லி என் தலைவர் என்னை அனுப்பினார்:

"ஆதலால் தன் அரும்பெறல் செல்வமும்
ஓதுபல் கிளையும் உயிரும் பெறச்
சீதையைத் தருக என்றெனச் செப்பினான்
சோதியான் மகன் நிற்கெனச் சொல்லினான்" (101)

என்று அனுமன் இராவணனுக்கு நயமான முறையில் அறிவுரை வழங்கிப் பார்த்தான்.

### 3. இந்திரசித்தின் அறிவுரை

இராவணனின் இளையமகன் அக்ககுமாரன் இறந்ததும் பெரியமகன் இந்திரசித்து இராவணனை அடைய இருவரும் அழுது கலங்கினர். பின்னர் இந்திரசித்து தந்தை இராவண னுக்குச் சிறிது அறிவுரை பகரலானான்.

தந்தையே! நீ சிறிதும் உறுதி எதுவென ஆராயவில்லை. இப்போது வருந்துகிறாய். குரங்கின் ஆற்றலை அறிந்தும், நம்மவர் குழுவைப் போருக்கு அனுப்பினாய். அவர்கள் இறந்து பட்டனர். அவர்களைக் கொன்றது குரங்கு அன்று நீதான் கொன்றாய் என்றே கூறவேண்டும். பாசப் படலம்:-

"ஒன்றுநீ உறுதி ஓராய்; உற்றிருந்து உளைய கிற்றி
வன்திறல் குரங்கின் ஆற்றல் மரபுளி உணர்ந்தும்
அன்னோா
சென்றுநீர் பொருதிர் என்று திறத்திறம் செலுத்தித்
தேயக்
கொன்றனை நீயே யன்றோ? அரக்கர்தம் குழுவை
எல்லாம்" (9)

நீ அனுப்பிய சிங்கரர்கள், சம்புமாலி, ஐம்பெரும் படைத்தலைவர்கள், மற்றும் படைஞராகிய அரக்கர் ஆகிய அனைவரும் இறந்தாரே யன்றி ஒருவராவது மீண்டிலர். அப்படியிருந்தும் நீ மேலும் அக்ககுமாரனை அனுப்பி இறக்கச் செய்தாய். அந்தக் குரங்கு, சிவனோ—நான்முகனோ—திருமாலோ என்று ஐயுறும்படி உள்ளது.

நீ எண்திக்கு யானைகளையும் முப்புரம் எரித்த சிவனது கயிலைமலையையும் மூன்று உலகங்களையும் முன்பு வென்றாய். இப்போதோ, அக்ககுமாரனையே வென்ற குரங்கை வெல்லுதல் என்பது அழுகைக்கு உரியதேயன்றி அறிவுடைமையாகாது:

''திக்கய வலியும் மேல்நாள் திரிபுரம் தீயச்செற்ற
முக்கணன் கயிலையோடும் உலகொரு மூன்றும்
வென்றாய்
அக்கனைக் கொன்று நின்ற குரங்கினை ஆற்றல் காட்டி
புக்கினி வென்றும் என்றால், புலம்பன்றிப் புலமைத்
தாமோ?'' (11)

இவ்வாறெல்லாம் இந்திரசித்து தந்தை இராவணனுக்கு அறிவுரை கூறிப் பார்த்தான்.

**4. வீடணன் அறிவுரை**

வீடணன் முதலியோர், சீதையைச் சிறைப்படுத்தாது விட்டுவிட வேண்டும் என்று அறிவுரை கூறியது ஒருபுறம் இருக்க, சுந்தர காண்டத்தில், வீடணன் ஒருவித அறிவுரை அண்ணன் இராவணனுக்குக் கூறியிருப்பதைக் காணலாம், இந்திரசித்து அனுமனைக் கட்டி இராவணனிடம் கொண்டு வந்தான். சிறிது உரையாடிய பின்னர் அனுமனைக் கொல்லும்படி இராவணன் கட்டளையிட்டான். உடனே அரக்கர் அனுமனைக் கொல்லமுயன்றபோது, 'நில்லுங்கள்-நிறுத்துங்கள்' என்று நீதியனாகிய வீடணன் தடுத்து நிறுத்தினான். பின்எழுந்து நின்று கைகூப்பி வணங்கி,

இராவணனுக்குப் பைய அறிவுரை பகரலானான். பிணி வீட்டுப் படலம்:

நீதியை உடைய அண்ணா! இவ்வாறு சினத்தல் முறை அன்று. தக்கோய்! இறைவன் தந்த வரத்தைப் பெற்ற நீ அறநெறிப்படி ஆண்டு வருகிறாய், நீ மறைகளில் வல்லவன்: எனவே, தூது வந்தவனைக் கொல்லுதல் முறையோ?

இம் மண்ணுலகத்திலும் சரி—வேறு அண்டங்களிலும் மன்னர்கள் மாதரைக் கொன்றிருப்பினும், தூதரைக் கொன்றவர் எவரும் இலர்.

''பூதலப் பரப்பின் அண்டப் பொகுட்டினுள் புறத்துள் பொய்தீர்
வேதம் உற்று இயங்குவைப்பின் வேறு இடத்து வேந்தர்
மாதரைக் கொலை செய்தார்கள் உளரென வரினும் வந்த
தூதரைக் கொன்றுளார்கள் யாவரே தொல்லை நல்லோர்?''

தூதர்கள், பகைவர் நாடு அடைந்து, தம் தலைவர் சொல்லச் சொன்ன செய்தியை அடக்கத்துடன் கூறும் மெய் விரதம் பூண்டவர்கள். இத்தகைய தூதரைக் கொல்வதினினும், நல்லவரின் வேறு செயல் உண்டோ? நமது குலம் குற்றத்திற்கு உரியதாகுமே.

''பகைப்புலன் நணுகி, உய்த்தார் பகர்ந்தது பகர்ந்து, பற்றார்
மிகைப்புலன் அடக்கி, மெய்ம்மை விளம்புதல் விரதம் பூண்ட
தகைப்புலக் கருமத் தோரைக் கோறலின் தக்கார் யார்க்கும்
நகைப்புலன் பிறிதொன் றுண்டோ? நம்குலம் நவை இன்றாமோ?'' (109)

மற்றும், சிவன்—திருமால் முதலியோர்க்கும், நம்மைப் பொறுக்காத—மதிக்காத தேவர்கட்கும் இது நகைப்பை உண்டாக்கும். நீயோ எல்லா உலகங்களையும் காக்கும் மன்னன்! எனவே, பிறர் அனுப்ப வந்த தூதனைக் கொல்லுதல் பெரிய குற்றமாகும்:

"முத்தலை எஃகன் முராந்தகன் முனிவன் முன்னா
அத்தலை நம்மை நோனா அமரர்க்கும்
நகையிற்றாமால்
எத்தலை உலகம் காக்கும் வேந்தன் நீ, வேற்றோர்ஏவ
இத்தலை எய்தினானைக் கொல்லுதல் இழுக்கம்
இன்னும்" (110)

மற்றும், இராம இலக்குமணர், நம் தங்கை சூர்ப்பண கையைக் கொல்லாமல், சதையும் மூக்கையும் சிதைத்து, போய் நடந்ததைக் கூறுக என்று உயிரோடு அனுப்பி விட்டனர். அவர்கள் உண்மையான வீரர்கள் ஆவர்? நீ அனுமனைக் கொல்வாயேல் நம்மிடம் வந்து அவன் கண்ட நமது சிறப்புகளையெல்லாம் அவன் போய் இராம இலக்குமணருக்குச் சொல்லாதபடி செய்து விட்டாயா வாய்—என்று பொருந்த அறிவுரை பகர்ந்தான்:

"இளையவள் தன்னைக் கொல்லாது இருசெவி
மூக்கொடு ஈர்ந்து
விளைவுஉரை என்று விட்டார், வீரராய்
மெய்ம்மை ஓர்வார்
களைதியேல் ஆவி, நம்பால் இவன்வந்து
கண்ணின் கண்ட
அளவுரை யாமல் செய்தி யாதி என்று
அமையச் சொன்னான்" (111)

இவ்வாறு வீடணன் அறிவுரை வழங்கினான். நீதியாய், தக்கோய், மறை வல்லோய்—என்றெல்லாம் அண்ணனைத் தூக்கி வைத்துப் பேசி, 'வேண்டும் மெய்யுரையை விளம்பி னான்' (106) என்பதாகப் பாடிய கம்பரின் நயமான பாடல் பகுதிகள் மிகவும் சுவைக்கத் தக்கன.

# 12. உரையாடல்கள்

சுந்தர காண்டத்தில் மூவகையான சுவையான உரையாடல்கள் உள்ளன. அவை : இராவணனும் சீதையும் உரையாடல், இராவணனும் அனுமனும் உரையாடல்— என்பனவாம். இனி முறையே அவற்றைக் காண்பாம்.

## 1. இராவணன்—சீதை உரையாடல்

### (காட்சிப் படலம்)

**இராவணன் :**

இராவணன் அசோகவனம் அடைந்து, சீதையைத் தன் விருப்பத்திற்கு இணங்குமாறு கெஞ்சுகிறான் :

சீதாய்! எனக்கு அருள் செய்வது எப்போது? என்று, தன்னைக் கொல்ல இருக்கும் நஞ்சை அழித்து எனத் தப்புக் கணக்கு போட்டுக் கேட்கிறான் (97)

இன்று—நாளை என நாள்கள் வீணே கழிகின்றன. என்னைக் கொன்று இறந்த பின் கூடுவாயோ? (99)

யான் உலகம் மூன்றின் தலைவன். எனக்கு எந்தத் துன்பமும் இல்லை. ஆனால், உன் காரணமாகக் காமன் என்னைத் துன்புறுத்துகிறான். இத் துன்பம் ஒன்றே உளது :

"உலகம் மூன்றும் ஒருங்குடன் ஓம்பும் என்
அலகில் செல்வத்து அரசியல் ஆணையில்,
திலகமே உன் திறத்து அனங்கன் தரு
கலகம் அல்லது எளிமையும் காண்டியோ?" (100)

என்னால் கிடைக்கவிருக்கும் பெரிய செல்வத்தை இழக்கின்றாய். நீ இராமனுடன் வாழ்வது வெற்று மானுட வாழ்வு தானே? (101)

நோக்கின்றார் முதலியோர், என் சொல் ஏற்கின்றாருடன் உறையும் இன்பமே பயன் எனக் கொள்வர். (102)

உன்னைப் படைத்த நான்முகன் உன்னிடம் இரண்டு இல்லாதவாறு உன்னைப் படைத்து விட்டான். அதாவது, இருப்பும், உன் மனத்தில் அருளும் இல்லாதவாறு உன்னைப் படைத்து விட்டான். அதனால் தான் என்மேல் அருள் செலுத்தவில்லை.

"தெருளும் நான்முகன் செய்ததுன் சிந்தையின்
அருளும் மென் மருங்கும் அரிது ஆக்கியே" (103)

(பெண்டிர்க்கு இடுப்பு சிறுத்திருக்கும் என்ற மாதிரியில் இடுப்பே இல்லை எனக் கூறுவது ஒருவகை இலக்கிய மரபு)

மேலும் கூறுகிறான்: நாளும் இளமையும் நிலை நிற்காதவை—மாளக்கூடியவை. எனவே, இப்போது நாளை வீணாக்கி விடின், பின் இன்ப வாழ்வேது? (104)

உன்னால் எனக்கு அழிவு நேரினும் நேருக. உன்னை விட்டால் வேறு அழகுக்கு யார் உளர்? (105)

சனகர் வீட்டில் பிறந்தவர்க்குப் (சீதைக்கு) பெண்மையும் திண்மையும் இருப்பினும், (எனக்கு அருள் புரியும்) வண்மை—வள்ளன்மை மட்டும் இல்லாது போனதேன்?

''பெண்மையும் அழகும் பிறழாமானத்
திண்மையும் முதல்யாவையும் செய்யவாய்
கண்மையும் பொருந்திக் கருணைப்படா
வண்மை என்சொல் சனகர்இல் மாண்டவர்?'' (106)

நல்லறத்தின் பயன் ஊட்டும் வாய்ப்பான காலத்தை நழுவ விட்டு இகழலாமா? (107)

என் உயிரைப் போக்கி வீணே பழிகொள்ளப் போகிறாயா? (108)

தேவர் தேவியர் எல்லாம் காலில் விழுந்து கை தொழக் கூடிய மூவுலகத் தலைமையாட்சி உன்னை அடைய இருக்கிறது. நீ அதை மறுக்கிறாய். உன்னிலும் ஏழையாரோ?

''தேவர் தேவியர் சேவடி கைதொழும்
தூவில் மூவுலகின் தனி நாயகம்
மேவு கின்றது நுன்கண், விலக்கினை
ஏவர் ஏழையர் நின்னின் இலங்கிழாய்'' (109)

மூன்றுலகையும் ஆட்சி செய்யும் தனது வீரப் பெருமையை அடிமையாக்கிக் கொண்டு எனக்கு அருளுக என்று கெஞ்சித் தன் கைகளைத் தலைகளின் மேல் வைத்துக் கும்பிட்டுச் சீதையின் காலடியில்—கீழே விழுந்து பழி பாராத இராவணன வணங்கினான்.

''குடிமை மூன்றுலகும் செயும் கொற்றத்தென்
அடிமை கோடி; அருளுதியால்; எனா
முடியின்மீது முகிழ்த்து உயர்கையினன்
படியின்மேல் விழுநதான் பழிபார்க்கலான்'' (110)

இவ்வாறு கெஞ்சிய இராவணனை நோக்கிச் சீதை வெய்ய மாற்றங்கள் விடுத்தாள்:

**சீதை :**

கற்புடைய குலமாதரிடம் நீ இவ்வாறு நடந்து கொள்வது தக்கதன்று. (112)

மேரு மலை என்றென்ன—பதினான்கு உலகையும் இராமன் அம்பு அழிக்கவல்லது. அறிவிலியே! பொருந்தாதன பேசி உன் தலை பத்தும் இழந்திடாதே. (113)

நீ இராம இலக்குமணர்க்கு அஞ்சியதால், வஞ்சனையாய் மாயமான் விட்டு, நீ மாறுகோலம் பூண்டு வந்தாய். நீ உய்ய வேண்டுமெனில் என்னை விட்டுவிடு. (114)

உன் பத்துத் தலைகளையும் இருபது தோள்களையும் அம்பு விட்டு அழித்தல் இராமருக்கு ஒரு திருவிளையாட்டு போலாம். (115)

நீ அன்று பறவை சடாயுவுக்குத் தோற்றாய். தலையில் கங்கை தாங்கிய சிவன் தந்த வாள் உன்னிடம் இருந்ததால் பின்பு வென்றாய் இல்லையேல் இறந்திருப்பாய் உன் நோன்பு, வாழ்நாள் உறுதி, பெற்ற வரம் எல்லாம் எமனுக்குத்தான் விதிவிலக்காய் அழிக்க முடியாதிருக்கலாம். ஆனால், இராமரின் அம்பின் முன் இவை நிற்க மாட்டா.

"தோற்றனை பறவைக்கு அன்று;
துள்ளுநீர் வெள்ளம் சென்னி
ஏற்றவன் வாளால் வென்றாய்;
அன்றெனின் இறத்தி யன்றே?
நோற்ற நோன்பு உடைய வாழ்நாள்
வரமிவை நுனித்த எல்லாம்
கூற்றினுக்கு அன்றே? வீரன்
சரத்திற்கும் குறித்த துண்டோ?" (116)

உன் வாளும் வாணாளும் வலிமையும் வரமும் மற்ற ஏவையும் இராமன் அம்பால் விலக்கப்பட்டுவிடும். நீ அழிதல் உறுதி. விளக்கின் முன் இருள் இருக்க முடியுமோ? (117)

நீ கயிலையை எடுத்தபோது உன்னை அமுத்தி வென்ற சிவனிடமிருந்து வந்த வில்லை இராமர் ஒடித்த ஒலியை நீ கேட்கவில்லை போலும் (118)

கயிலை மலையை எடுத்தேன்—எட்டுத் திக்குகளையும் வென்றேன்—என்றெல்லாம் மறம் பேசும் நீ, இளைய இலக்குமணன் வில் எடுத்தால் எதிர் நிற்க முடியாது. அத்தகைய நீ ஒரு பெண்ணிடம் தாழ்ந்து கெஞ்சுகிறாய். (119)

ஏழை இராவணா! எம் தலைவன் இராமன் இங்குப் படை எடுத்துவரின் உன் உயிரும் இலங்கையும் இன்ன பிறவும் அழியும். (120)

என்றெல்லாம் சீதை இராவணனிடம் கடுஞ்சொல் கூறித் தாழ்த்தினாள். பின்னர் நயவுரை பகர்ந்தும் திருத்த முயன்றாள்.

சீதை இணங்காமையால் இராவணனுக்கு மூண்ட சினமாகிய ஊழித் தீ, பின் அவள் மேல் உள்ள காமமாகிய வெள்ள நீரால் அவிய, அவன் மேலும் கூறுவான்: (137)

உன்னைக் கொல்ல எண்ணினேன்—ஆனால் கொல்ல வில்லை. என்னால் முடிவது—முடியாதது என எதுவும் உலகில் இல்லை. வெற்றி—தோல்வி எல்லாம் எனக்கு ஒரு விளையாட்டாகும்.

> "ஒவ்வது ஈது ஒல்லாதது ஈது என்று எனக்கும்
> ஒன்று உலகத் துண்டோ?
> வெல்வதும் தோற்றல் தானும் விளையாட்டின்
> விளைந்த மேனாள்" (138)

என்னோடு போர் புரிய வருபவர் யார்? உன்னை அடைய இராமனைக் கொல்லின் நீ உயிர்விடுவாய்; நீ உயிர் விடின் உன் மேல் காதல் கொண்ட யான் உயிர்விடுவேன். அதனால்தான், யான் இராம இலக்குமணரைக்

கொல்லாமல், வஞ்சகமாக மாய மானை அனுப்பி அவர்களை அப்புறப்படுத்தி உன்னைக் கொண்டு வந்தேன்.

''ஒன்றுகேள் உரைக்க: நிற்கோர்
உயிர்என உரியோன் தன்னைக்
கொன்றுகோள் இழைத்தால், நீ நின்
உயிர்விடின் கூற்றம் கூடும்;
என்றன் ஆருயிரும் நீங்கும்
என்பதை இயைய எண்ணி
அன்றுநான் வஞ்சம் செய்தது;
ஆர்எனக்கு அமரில் நேர்வார்? (139)

மான் எனப் போந்த அம்மானிடர், வந்தவன் யான் எனத் தெரிந்தால் திரும்பி வாரார்; தேவராயினும்— யாருமே என்னிடம் வாரார். (140)

இந்திரனே எனக்கு ஏவல் செய்கிறான் எனில், எனது பெருமைக்கு இது போதாதா? (141)

உன் காரணமாக அம்மனிதர் இருவரையும் கொல்லாமல் இருக்கிறேன். யான் விரும்பின் அவர்களை அழைத்து வந்து எனக்கு ஏவல் செய்ய வைப்பேன். (142)

ஒருவேளை அம்மனிதருடன் என் வீரம் செல்லாதெனினும், யான் அவர்களைக் கொல்ல முடியாதெனினும், யான் விரும்பின், அவர்களைப் பிடித்து இங்கு இழுத்து வரச் செய்வேன். (143)

வீணாய் நீ அவர்கட்குத் தீங்கு நேர விடாதே. (144)

யான் எண்ணினால், அயோத்தி சென்று பரதன் முதலானவரை அழித்தும், மிதிலை சென்று உன் பெற்றோர் முதலியோரையும் பூண்டோடு அழித்தும் உனது உயிரையும் போகச் செய்வேன். குறை வயது உடையவளே! என்னை நீ இன்னும் நன்றாகப் புரிந்து கொள்ளவில்லை;

"பள்ளநீர் அயோத்தி நண்ணிப்
பரதனே முதலினோர் ஆண்டு
உள்ளவர் தம்மை யெல்லாம்
உயிர்குடித்து, ஊழித் தீயின்
வெள்ளநீர் மிதிலை யோரை
வேரறுத்து எளிதின் எய்திக்
கொள்வென் நின்உயிரும் என்னை
அறிந்திலை குறைந்த நாளோய்" (145)

என்றெல்லாம் இராவணன் கூறிச் சீதையை அச்சுறுத்தினான். ஆனால் பயன் ஒன்றும் இல்லை.

## 2. அனுமன் சீதை உரையாடல்

அனுமனும் சீதையும் உரையாடிக் கொண்டதை இவண் காண்பாம்: —உருக்காட்டுப் படலம்:—

**அனுமன் கூற்று**

சீதை வருந்தித் தற்கொலை செய்து கொள்ள மாதவிப் பொதும்பரை அடைந்தபோது, அனுமன் அவள் முன் தோன்றித் தொழுது, "இராமரின் தூதன் யான்; இராமர் அனுப்ப இங்கு வந்தேன். இங்கே நீ இருப்பதை இராமர் அறியார். நீ என்னை ஐயுறல் வேண்டா. அடையாளம் கொண்டு வந்துள்ளேன். இராமர் சொல்லியனுப்பிய உரையும் உள்ளது. எல்லாம் உள்ளங்கை நெல்லிக் கனி போல் தெரியக் காணலாம் என்னை வேறாக நினைக்க வேண்டா" இதன் பாடல் இது:

"ஐயுறல்! உள்து அடையாளம்; ஆரியன்
மெய்யுற உணர்த்திய உரையும் வேறுள;
கையுறு நெல்லியங் கனியின் காண்டியால்;
நெய்யுறு விளக்கனாய், நினையல்வேறு என்றான்"
(25)

**சீதையின் வினா :**

கேட்ட சீதை, இவன் அரக்கனாகவோ— அல்லது குரங்காகவோ இருப்பினும், இராமன் பெயர் கூறி எனக்கு உயிர் தந்தான்; இவன் நல்லனாகத் தெரிகிறான்; எனவே, இவன் வினவுவதற்கு உரியவனே என்று எண்ணி, "வீரனே! நீ யார்?" என்று வினவினாள்.

**அனுமன் விடை**

அன்னையே! இராமர் நின்னைப் பிரிந்தபின் நடந்தது கூறுவேன். எம் தலைவன் சுக்கிரீவன்; அவன் தமையன், இராவணனை வாலில் சுற்றித் தேய்த்த வாலி. அந்த வாலியை இராமர் கொன்று சுக்கிரீவனுக்கு முடி சூட்டினார். என் பெயர் அனுமன். வானர சேனைகள் எழுபது வெள்ளம் உள்ளன. நான்கு திக்குகட்கும் உன்னைத் தேடப் பிரிந்து சென்றுள்ளன. அங்கதன் தலைமையில் இரண்டு வெள்ளம் சேனைகள் தெற்கு வந்துள்ளன. யான் அப்படையைச் சேர்ந்தவன்.

இராமர் உன்னைப் பிரிந்ததால் மிகவும் வருத்த முற்றுள்ளார். நீ வழியில் கழற்றிப் போட்ட அணிகலன் களை நாங்கள் எடுத்து வைத்திருந்து அவரிடம் காட்டினோம். அதனால் அவர் உயிர் நிலை பெற்றது. அதனால் உன் மங்கல நாண் (தாலி) காப்பாற்றப்பட்டது. அந்தப் பெருமை உன் அணிகலன்கட்கே உரியது:

"கொற்றவற்கு ஆண்டு காட்டிக்
  கொடுத்தபோது அருத்த தன்மை
பெற்றியின் உணர்தற் பாற்றோ?
  உயிர்நிலை பிறிதும் உண்டோ?
இற்றைநாள் அளவும், அன்னாய்!
  அன்றுநீ இழித்து நீத்த
மற்றைநல் அணிகள் காண்உன்
  மங்கலம் காத்த மன்னோ" (35)

**சீதையின் வினா :**

கேட்ட சீதை, நம்பிக்கைக் கோடு படர, இராமரின் வடிவழகு எத்தகையது என்று வினவினாள்.

**அனுமன் விடை :**

பின்னர், அனுமன், இராமனது அடிமுதல் முடி வரை உள்ள வடிவழகைப் பற்றி (பாதாதி கேசமாகக்) கூறலானான்:

இராமரின் திருவடி தாமரையாகும். விரல் ஞாயிற்றின் ஒளி— கணைக் காலுக்கு ஒப்பே இல்லை. அவர் துடைக்கு யானைத் துதிக்கை நாணும். கொப்பூழ் பொய்கைபோல் ஆழ்ந்தது— மார்பு திருமகள் நோற்றுப் பெற்றது. கைகள் எண் திக்கு யானைக் கைகள்— தோள் மலை— கழுத்து சங்கு— முகமும் தாமரை— புன்முறுவல் நளினமானது— வாய் பூக்காத பவளம்— பல் முத்தோ நிலவொளியோ— மூக்கு இந்திர நீலம்— புருவம் வில்— நெற்றிக்குப் பிறை ஒவ்வாது— தலை மயிர் சடையாயிற்று — நடை சீயநடை— இவை வடிவடையாளங்கள்.

இனி, இராமர் சொல்லி அனுப்பிய அடையாள மொழி களைக் கூறுவேன்: சீதாய்! உன்னால் காட்டில் நடக்க வியலாது; என்னோடு வர வேண்டா; அன்னையர்க்கு உதவியாக இங்கேயே இரு! நாள்கள் விரைவில் ஓடி விடும்— என்று யான் கூறியபோது, உடுத்த துகிலோடும் உயிர் பிரியும் உடலோடும் முனிவோடும் சீதை அயல் அகன்று நின்றாள்—இதை அவளிடம் நினைவு செய்.

முடிதுறந்து சீதையோடு காடுநோக்கி நகரின் கடை வாயிலைக் கடக்கும் முன்பே, காடு எங்கே உள்ளது— எவ்வளவு தொலைவில் உள்ளது—என்று கேட்ட அவளது பெண்மைத் தன்மையையும் நினைவு செய்.

சுமந்திரனை நோக்கி, கிளியும் பூவைப்பறவையும் சொன்னதைச் சொல் என்று எல்லாக் கவலைகளையும் மறந்த கேட்ட அவளது சிறு பிள்ளைமைத் தன்மையையும் நினைவு செய். இதோ அந்தப் பாடல்கள்:

"நடத்தல் அரிதாகும் நெறி; நாள்கள் சில; தாயர்க்கு
அடுத்தபணி செய்திவண் இருத்தி என, அச் சொற்கு
உடுத்த துகிலோடும் உயிர் உக்க உடலோடும்
எடுத்த முனிவோடும் அயல் நின்றதும் இசைப்பாய்" (60)

"நீண்ட முடி வேந்தன் அருளேந்தி நிறை செல்வம்
பூண்டதனை நீங்கி நெறி போதலுறு நாளின்,
ஆண்டநகர் ஆரையொடு வாயில் அகலாமுன்
யாண்டையது கானென இசைத்ததும் இசைப்பாய்"
(61)

"எள்ளரிய தேர்தரு சுமந்திரன்! இசைப்பாய்
வள்ளல் மொழி வாசகம், மனத்துயர் மறந்தாள்;
கிள்ளையொடு பூவைகள் கிளத்தல்கிள என்னும்
பிள்ளை உரையின் திறம் உணர்த்துதி பெயர்த்தும்"
(62)

என்று இராமர் கூறியனுப்பினார் என அனுமன் கூறினான். இங்கே, சிலப்பதிகாரச் செய்திஒன்று ஒப்பு நோக்கத்தக்கது.

கோவலன் கண்ணகியுடன் மதுரைக்குச் சென்று கொண்டிருந்த போது, சிறிது தொலைவு சென்றதுமே, கண்ணகி, இடையும் அடியும் நோக வருந்திப் பெருமூச்சு விட்டு, முற்றாத மழலைச்சொல்லால், இன்னும் மதுரை எவ்வளவு தொலைவில் உள்ளது எனச் சிரித்தபடி கேட்க, கோவலன சிரித்தபடி, இன்னும் மதுரை வெகுதொலைவில் இல்லை—இன்னும் ஆறு ஐங்காதத் தொலைவிலேயே உள்ளது—மிகவும் அண்மையில் உள்ளது—என்று ஆறுதல் கூறினானாம்: (சிலம்பு நாடு காண்காதை)

"இறுங்கொடி நுசுப்போடு இனைந்தடி வருந்தி
நறும்பல் கூந்தல் குறும்பல உயிர்த்து
முதிராக் கிளவியின் முள்ளெயிறு இலங்க
மதுரை மூதூர் யாதெனவினவ
ஆறைங் காதம் அகல் நாட் டும்பர்
நாறைங் கூந்தல் நணித்தென நக்கு" (38—43)

என்பது பாடல் பகுதி. முப்பது காதம் எனப் பெரிய எண்ணால் சொல்லாமல், ஆறைங் காதம் எனச் சிறிய எண்களையே கோவலன் பயன்படுத்தினான். ஆறு ஐந்து முப்பது எனப் பெருக்கலாகப் பொருள் கொள்ளாமல், மதுரை இன்னும் ஆறு அல்லது ஐந்து காதத்தொலைவே உள்ளது என்பதாகவும் பொருள்கொள்ளலாம். "சும்மா ஐந்தாறு (ஐந்து அல்லது ஆறு) கொடு" என்னும் உலக வழக்கு ஈண்டு நோக்கத்தக்கது வழியில் உள்ள சில ஊர் களைக் கடக்கும்போது, இதுவா மதுரை—இதுவா மதுரை என்று கேட்பது போல் 'மதுரை மூதூர் யாது' என்று கேட்டதாகப் பொருள் கொண்டு மகிழலாம்.

கண்ணகியைப் போலவே, சீதையும் காடு பற்றி வினவியிருப்பது சுவையாயுள்ளது.

**சீதையின் நிலை:**

அனுமன் அடையாளங்கள் எல்லாம் கூறிப் பின்னர் இராமன் கொடுத்தனுப்பிய கணையாழியை (மோதிரத்தைச்) சீதையிடம் தந்தான். அதைப் பெற்ற அவள் மகிழ்ச்சியால் பல மொழிகள் பகர்ந்தாள்: யான் என்னென்று கூறுவேன்:

இறந்தவர்கள் பிறந்த பயனை எய்தினர் என்பேனோ—மறந்தவர் மீண்டும் உணர்ந்தனர் என்பேனோ—போன உயிர் மீண்டும் வந்து தொடர்ந்தது என்பேனோ—என்று வியக்கிறாள். இழந்த மணியை அரவு பெற்றது போலவும், இழந்த செல்வத்தை மீண்டும் பெற்றது போலவும், மலடி குழந்தை பெற்றது போலவும் மகிழ்கின்றாள்:

''இறந்தவர் பிறந்த பயன் எய்தினர்கொல் என்கோ!
மறந்தவர் அறிந்துணர்வு வந்தனர்கொல் என்கோ!
துறந்துயிர் வந்திடை தொடர்ந்தது கொல் என்கோ!
திறந்தெரிவ தென்னைகொல்! இந் நன்னுதலி
செய்கை'' (64)

''இழந்த மணி புற்றரவு எதிர்த்த தெனல் ஆனாள்;
பழந்தனம் இழந்தன படைத்தவரை ஒத்தாள்;
குழந்தையை உயிர்த்த மலடிக்கு உவமை
கொண்டாள்;
உழந்து விழிபெற்றதோர் உயிர்ப் பொறையும்
ஒத்தாள்'' (65)

சீதை கணையாழியைத் தலையிலும் முலையிலும் கண்ணிலும் வைத்து ஒத்திக் கொண்டாள். அளவற்ற மகிழ்ச்சியால் மோந்தும் உயிர்த்தும் பேசமுடியாதவளா னாள். பின்னர் ஒருவாறு தன்னிலையடைந்து பேசலா னாள்.

இந்த மோதிரம் தன்னை அடுத்த பொருள்களையெல் லாம் தன்னிறம் ஆக்கி விட்டதே. தான் தொட்ட பொருள் களையெல்லாம் பொன்னாக மாற்றும் தெய்வ வேதிகைக் (இரசக்) குளிகையோ இவ்வாழி?

''ஆண்தகை தன்மோதிரம் அடுத்த பொருள்
எல்லாம்
தீண்டளவில் வேதிகைசெய் தெய்வமணி கொல்லோ''
(68)

பசித்தவர்க்கு அமுதமாகவும், அறவோர்க்கு நல்விருந் தாகவும், இறந்த உயிரை மீட்கும் மருந்தாகவும் இம் மணி யாழி உள்ளதே! இது வாழ்க!

''இருந்து பசியால் இடர் உழந்தவர்கள் எய்தும்
அருந்தும் அமுதாகியது; அறத்த ரை அண்மும்
விருந்தெனல் ஆகியது; வீயும் உயிர்மீளும்
மருந்தும் எனலாகியது; வாழி மணி ஆழி'' (69)

என்று கூறி, மேலும் அனுமனுக்கு நன்றி கூறுகிறாள்; அனுமனே! அம்மையாகவும் அப்பனாகவும் உள்ளவனே! இராமர் தூதராய் வந்து எனக்கு உயிர்தந்து, இம்மைப் பயனையும், மறுமைப் பயனும் யான் பெறச் செய்தாய்.

என் துன்பம் போக்கிய வள்ளலே! யான் களங்கம் இல்லாதவள் எனின் என் வாழ்த்து பலிக்கும். நீண்ட ஊழிக் காலத்தை ஒரு பகலாகக் கணக்கிட்டுக் கொள்ளும் பல ஆண்டு காலம்—பதினான்கு உலகங்கள் அழியினும்-நீ அழியாமல் இன்று போல என்றும் இருந்து வாழ்வாயாக! இதனினும் நன்றி பாராட்ட யான் செய்யும் கைம்மாறு யாது உளது?

"பாழிய பணைத்தோள் வீர! துணை இலேன்
பரிவு தீர்த்த
வாழிய வள்ளலே! யான் மறு இலா
மனத்தேன் என்னின்,
ஊழி ஓர் பகலாய் ஓதும் யாண்டெலம்
உலகம் ஏழும்
ஏழும் வீவுற்ற ஞான்றும் இன்றென
இருத்தி என்றாள்'' (72)

'இன்று போல் என்றும் வாழ்க' என இக்காலத்தில் வாழ்த்துவது கம்பரிடமிருந்து பெற்ற கடனோ!

**சீதையின் வினா :**

உயர்குண அனுமனே! இராமர் தம்பியுடன் எங்கே உள்ளார்? உன்னை எவ்வாறு அன்பானகப் பெற்றார்? யான் இங்கே இருப்பதை யார் சொல்ல அறிந்தீர்கள்? என்று சீதை வினவினாள்.

**அனுமன் விடை :**

மாயமானைத் தொடர்ந்து இராமர் செல்ல, மாய மானாகிய மாரீசனின் குரல் கேட்டு இலக்குமணன் அங்கு

வர, இராவணன் சாலைக்கு வந்து எடுத்துச் சென்றபின், இராமர் உன்னைக் காணாமல், உயிர் இல்லாத பொறிப் (எந்திரப்) பாவை போல் (பொய் உயிரோடு) திரிந்து உன்னைத் தேடினார்.

அவரது உயிர் நீயே யாதலின், நீ இங்கு இருத்தலால் அவரது உயிர் போனதாகக் கருதப்படவில்லை. எவ்வாறு அவர் உயிர் போக முடியும்?

''தேண்டி நேர்கண்டேன் வாழி
தீதிலன் எம்கோன் ஆகம்
பூண்டமெய் உயிரேபோகப்
பொய் உயிர் போலநின்ற
ஆண்டகை நெஞ்சினின்றும்
அகன்றிலை அழிவு உண்டாமோ?
ஈண்டுநீ இருந்தாய் ஆண்டங்கு
எவ்வுயிர் விடும் இராமன்?'' (77)

உயிராக நீ இருக்கும்போது, வேறு எந்த உயிரை இராமன் விடமுடியும்? வழியில் சடாயுவைக் கண்டான். சடாயு இராவணனைப் பற்றிச் செய்தி கூறி இறந்ததும் இராமன் ஈமக் கடன் செய்தான். மாயமானால் துயர் நேர்ந்ததால், மானினத்தையே இராமன் வெறுத்தான். இறுதியாகச் சுக்கிரீவனையும் எங்களையும் கண்டான். சுக்கிரீவனின் வேண்டுகோளின்படி வாலியைக் கொன்று சுக்கிரீவனுக்குப் பட்டம் ஈந்தான். நான்கு திங்கள் காலம் கடந்ததும் உன்னைத் தேட வானரங்கள் அனுப்பப் பட்டனர். தென் திசை நோக்கிய யான் இங்கு வந்தேன். இதுதான் நடந்த வரலாறு என்று அனுமன் அறிவித்தான்.

**சீதையின் வினா:**

இவ்வளவு பெரிய கடலை நீ எங்ஙனம் கடந்து வந்தாய்?

**அனுமன் விடை:**

இராமன் அருள் பெற்றவர் மாயையாம் கடல் கடப்பது போல், யான் இராமன் அருளால் காலால் கடந்தேன்.

**சீதையின் வினா**

இவ்வளவு சிறிய உருவுடன் எவ்வாறு கடந்தாய்? ஏதேனும் செய்த தவத்தால் இயன்றதோ? அல்லது சித்தி விளையாட்டோ? என்று வினவினாள்.

பின்னர், அனுமன், வானளாவப் பேருருவம் (விசுவ ரூபம்) எடுத்துக் காட்டினான். சீதை அஞ்சி, முன்போலவே சிற்றுரு கொள்க எனச் சிற்றுருக் கொண்டான்.

**சீதையின் பாராட்டு:**

அனுமனின் ஆற்றல் அறிந்த சீதை அவனைப் பாராட்டலானாள்:

அனும! நீ உலகை மலையோடும் பெயர்ப்பினும், வானத்தையே எடுப்பினும், ஆதிசேடனை ஒரு கையால் பற்றினும், அச்செயல்கள் உன் பெருமைக்கும் ஆற்றலுக்கும் போதமாட்டா. எனவே, நீ இந்தக் கடலைக் கடந்ததில் வியப்பு இல்லை. (109)

இராமன் பெருமை நிலைக்க நீ ஒருவன் போதும்.... உன் ஆற்றலை நோக்க, இலங்கை ஏழு கடலுக்கும் அப்பால் இல்லாதது உனக்குக் குறைவே. ஏழு கடலையும் தாண்டுவாய் நீ.

''ஆழி நெடுங்கை ஆண்டகைதன் அருளும் புகழும்
அழிவு இன்றி
ஊழி பலவும் நிலைநிறுத்தற்கு ஒருவன் நீயே உளை
ஆனாய்
பாழி நெடுந்தோள் வீரா நின் பெருமைக் கேற்பப் பகை
இலங்கை
ஏழு கடற்கும் அப்புறத் தாகா திருந்தது இழிவு
அன்றே?'' (110)

உனது ஆற்றல் இத்தகைய தென்றால், உன்னை நோக்க நான்முகன் முதலியோர் மிக எளியர்—வெற்றர்
(111)

இராமனுக்கு இலக்குமணன் ஒருவனே துணை என மயங்கினேன். இப்போது நீ இருப்பதால் போதும்; இனிக் கவலையில்லை. (112)

இனி யான் மாண்டாலும் சரியே! சிறை மீண்டேன் பகைவரை வேர் அறுத்தேன்; இராமன் திருவடியடைந் தேன்; புகழ் அன்றிப் பழி தீண்டேன். (113)

என்றெல்லாம் சீதை பாராட்டினாள்.

**அனுமன் மொழி:**

அன்னையே நீ அஞ்ச வேண்டா. வானர மறவர்கள் கடல் மணல்போல் பலராவர். இராமன் அடியவர் பலர் அவர்தம் பண்ணையில் யானும் ஒருவன்; ஏவல்—கூவல் பணி செய்வேன். (114)

எழுபது வெள்ளம் சேனை உள்ளது. ஒவ்வொருவரும் ஒரு கை அள்ளிக் குடிக்கவும் இந்தக் கடல் போதாது இராமருக்கு இலங்கை இருக்கு மிடம் தெரியாமையால் இலங்கை இன்னும் உள்ளது. தெரிந்தால் உடனே அழியும்.

''வெள்ளம் எழுபது உளதன்றோ வீரன் சேனை
இவ்வேலைப்
பள்ளம் ஒருகை நீர் அள்ளிக் குடிக்கச்சாலும்
பான்மையதோ?
கள்ள அரக்கர் கடியிலங்கை காணாது ஒழிந்ததால்
அன்றோ
உள்ளதுணையும் உளதாவது? அறிந்த பின்னும்
உளதாமோ?' '(115)

வானரப் படைத்தலைவர்கள் எண்ணற்றவர்கள்; அவர் களை நோக்க இந்த அரக்கர்கள் உறையிடவும் போதார் அவர்தம் எண்ணிக்கைக்கு அளவேயில்லை. (117)

யான் சென்று அறிவித்ததும், வானரர் வருவர்; அன்றே இலங்கை அழியும். குரங்கு கை மாலை போல

ஊரும் அரக்கரும் அழிவது உறுதி (குரங்குகளால் இராவணன் அழிவான் என்பதற்கு ஏற்ற உவமை இது) என்று அனுமன் கூறி, இராமனை அடையத் தன்னுடன் வருமாறு சீதையை வேண்டலானான் :

### (சூடாமணிப் படலம்)

அன்னையே! என் தோள்மேல் ஏறி என்னுடன் வருக. நொடிப் பொழுதில் போய் இராமனிடம் உன்னைச் சேர்ப் பேன் (3)

இடையில் அரக்கர் வரின் அழிப்பேன்; யான் ஒருவ ராலும் அழியேன்; வெறுங்கையோடு பெயரேன். (4)

இலங்கையோடு செல்லவேண்டு மெனினும் இலங்கையைப் பெயர்த்து ஒரு கையில் ஏந்திக் கொண்டு, தடுக்கும் அரக்கர்களையும் வென்று உன்னை இராமனிடம் சேர்ப்பேன். (5)

இராமனிடம் சென்று, சீதை அங்கு இருக்கிறாள்—சிறை வைக்கப்பட்டிருக்கிறாள்—என்று சொன்னால் என் அடிமை என்னாம். (6)

புண்படாத தோள்களோடு போய் இராமனிடம் பகைவர் பெருமையைச் சொல்லவா? என் உயிர் காக்க எண்ணிக் கண்டு வரவில்லை என்றோ—உடன் அழைத் துக் கொண்டு வரவில்லை என்றோ—கூறுவேனோ?

"புண்தொடர் வகற்றிய புயத்தினொடு புக்கேன்,
விண்டவர் வலத்தையும் விரித்துரை செய்கேனோ?
கொண்டு வருகிற்றிலென்; உயிர்க்கு உறுதி
கொண்டேன்;
கண்டு வருகிற்றிலென் எனக் கழறுகேனோ?" (7)

இலங்கையை உருக்கி, அரக்கனை முருக்கி, அரக்கர் குலம் முழுவதையும் அழித்துப் பின்னர் அழைத்துப்போ என்றாலும் அங்ஙனமே செய்வேன். (8)

நீ இராமனை அடைந்தபின், அவன் உன்னோடு இலங்கைக்கு வந்து அரக்கர் குலம் அழிப்பது நன்று. (9)

எனவே, இனிக்கூற வேறொன்றும் இல்லை. யான் இந்த நற்பேறு பெறச்செய். மீண்டு சென்று துயர் ஆறலாம்; என் தோள்மேல் ஏறி அருளுக''—என்று அனுமன் வேண்டிச் சீதையின் அடி பணிந்தான். (10)

**சீதையின் மறுப்புரை :**

தன்னுடன் வரச்சொன்ன அனுமனுக்குச் சீதை மறுப்புக் கூறலானாள்: (சூடாமணிப் படலம்):—

என்னை எடுத்துக்கொண்டு செல்வது உனக்கு அரிய செயலன்று; உன் வலிமைக்கு ஏற்றதே. ஆயினும், இது உரியதன்று என என் பெண்மதி கூறுகிறது. (12)

கடல் நடுவே அரக்கர் வந்து மறிக்கின்ற நீ அவர்களைக் கவனிப்பாயா? என்னைக் காப்பாயா? (13)

மற்றும், உன்னுடன்வரின் இராமரின் வில் வலி குறை பாடுடையதாகும். என்னை வஞ்சித்த அரக்க நாய்களைப் போல நீயும் என்னை எடுத்துச் செல்லலாமா?

''அன்றியும் பிறிதுள தொன்று ஆரியன்
வென்றி வெஞ்சிலை மாசுணும்; வேறினி
நன்றி என்பதென்? வஞ்சித்த நாய்களின்
நின்ற வஞ்சனை நீயும் நினைத்தியோ?'' (14)

போரில் இராமர் வில்லைத் தேவர் மெச்ச, என்னை விரும்பிய அரக்கனின் கண்களைக் காகம் உண்பதைக் கண்டு யான் ஆறுதல் பெற வேண்டும். (15)

இராமர் வில்லால் அரக்கியரின் மூக்கும் நாண் கயிறும் (தாலியும்) அறுபட்டாலேயே நான் நாணம் உடையவள் ஆவேன். (16)

இலங்கை எலும்பு மலையாகாவிடின், என் இல் பிறப்பும் ஒழுக்கமும் கற்பும் பிறர்க்கு எங்ஙனம் காட்டுவேன். (17)

இலங்கையை மட்டுமா? உலகம் முழுவதையுமே என் சொல் வன்மையால் சுடுவேன். அது இராமரின் வில் வன்மைக்கு மாசு என்று விட்டுள்ளேன். (1 8

மற்றும் ஒன்று கேள்! இராமரின் திருமேனியைத் தவிர, நீ ஐம்பொறி அடக்கியவன் எனினும், ஆணாகிய உன் உடலை யான் தீண்டலாமா?

"வேறும் உண்டுரை கேளது மெய்ம்மையோய்
ஏறு சேவகன் மேனியல்லால் இடை
ஆறும் ஐம்பொறி நின்னையும் ஆண்எனக்
கூறும் இவ்வுருத் தீண்டுதல் கூடுமோ? (19)

என்னைத் தீண்டினால் மாள்வான் ஆலிதன் என்னைத் தொடாமல் குடிலோடு தோண்டிக் கொண்டு வந்தான் இராவணன். (20)

விருப்பம் இல்லாத பெண்டிரின் உடலைத் தீய எண்ணத்துடன் தீண்டினால் இராவணன் தலைவெடித்து விடும் என நான்முகன் இட்ட கெடுமொழி (சாபம்) உள்ளதால் யான் உயிர் பிழைத்திருக்க முடிகிறது. (21)

இப்படியொரு சாபம் உண்டு என்பதை, வீடணன் மகளாகிய திரிசடை எனக்குக் கூறியதால், யான் அச்சமும் நடுக்கமும் இன்றி உள்ளேன். (22)

அச்சாபம் இன்றெனில் யான் செத்திருப்பேன் அல்லவா? அறம் வழுவாதாதலின் இந்நிலை உள்ளது. மற்றும் என் கணவனின் வலிமையை நம்பியும், எனது கற்பின் தூய்மையைக் காட்டவும் இவ்வளவு நாளாய் உயிருடன் இருந்து வருகிறேன்.

"ஆய துண்மையின், நானும், அது இன்றெனின்
மாய் வென் மன்ற; அறம் வழுவாதென்றும்;
நாய கன்வலி எண்ணியும் நானுடைத்
தூய்மை காட்டவும் இத்துணை தூங்கினேன்" (23)

('நானுடை' என்னும் கம்பர் ஆட்சி கவனிக்கத்தக்கது.)

இலக்குமணன் கட்டியதும் இராவணன் பெயர்த்து எடுத்துக்கொண்டு வந்ததுமாகிய குடில் இதோ அப்படியே உள்ளதை உன் கண்களால் காண்க. (24)

இந்தக் குடிலை விட்டு ஒரு போதும் நீங்கமாட்டேன். உயிர் இருப்பதற்காக நீர் உண்ணவேண்டும் அல்லவா? அதற்காக, இராமரின் நிறம் போன்ற இந்தப் பொய்கைக்கு மட்டும் போய் வருவேன். (25)

ஆதலால் உன்னுடன் வருதல் முறையன்று. நீ இராமரிடம் மீண்டும் சென்று நிலைமையைக் கூறுவாயாக! என்று சீதை உடன்வர மறுத்துக் கூறிவிட்டாள். (26)

அனுமனுக்கும் சீதைக்கும் இடையே நடைபெற்ற உரையாடல்கள் இவையாகும்.

## 3. இராவணன்—அனுமன் உரையாடல்

இந்திரசித்து அனுமனைக் கட்டி இழுத்துச் சென்று இராவணன் முன் விட்டதும், இராவணன் அனுமனை வினவுகிறான்: (பிணி வீட்டுப் படலம்)

**இராவணன் வினா:**

நீ யார்? ஏன் வந்தாய்? நீ திருமாலா— இந்திரனா— சிவனா— ஆதிசேடனா? பெயரையும் உருவத்தையும் மறைத்து வந்திருக்கும் நீ யார்?

காலனா— முருகனா— தென் திசைக் கிழவனா— எண் திக்கு ஆட்சியாளருள் நீயார்?

**இராவணன் வினா:**

கேட்ட இராவணன், யான் செய்வதற்குப் பதிலாக இராமன் அம்பு வாலியைக் கொன்றது சரி. அந்த இராமன் இப்போது யாண்டுளான். அவன் மனைவியை அங்கதன் தேட வேண்டிய பொறுப்பை ஏற்றதன் காரணம் என்ன? என்று கேட்டான். அதற்கு அனுமன் கூறும் பதிலாவது:

**அனுமன் விடை :**

மனைவியைத் தேடி வந்த இராமனோடு, எங்கள் தலைவனாகிய சுக்கிரீவன், ஈருடல்—ஓர் உயிராக நட்பு பூண்டு, வாலியால் தனக்கு நேர்ந்த துன்பத்தைத் துடைக்க வேண்டினான். உடனே இராமன், வாலியைக் கொல்லும் முன்பே, சுக்கிரீவனுக்கு வாலி கவர்ந்து வைத்திருந்த அவன் (சுக்கிரீவன்) மனைவியாகிய உருமை என்பாளோடு அரசைத் தந்து விட்டதாகக் கூறிப் பின்னர் வாலியைக் கொன்றான்.

"தேவியை நாடி வந்த
செங்கணாற்கு எங்கள் கோமான்
ஆவி ஒன்றாக நாட்டான்,
அருந்துயர் துடைத்தி என்ன,
ஓவியர்க்கு எழுத ஒண்ணா
உருவத்தன் உருமை யோடும்
கோஇயல் செல்வம் முன்னே
கொடுத்து வாலியையும் கொன்றான்" (81)

பின்னர் நான்கு திங்கள் காலம் கழிய, போய்ச் சீதையைத் தேடி வருக என எம் தலைவன் கட்டளை யிட்டான்; அதன்படி வந்துளேன்; நடந்தது இது என்று அனுமன் சொன்னான். மீண்டும் இராவணன் கூறுகிறான்:

**இராவணன் கூற்று:**

உங்கள் குலத் தலைவனாகிய வாலியைக் கொன்றவனுடன் நீங்கள் நட்பு கொண்டு அவனுக்கு ஏவல் செய்வதா?

உமது புகழ் என்னாவது? இது தக்கதென்றால், இவ்வுலகம் மடமை உடையது என்றே கூற வேண்டும்.

அண்ணனைக் கொல்லச் செய்து அவனோடு நட்புக் கொண்டவன் அனுப்பிய நீ எங்கட்குச் சொல்வது யாது? ஏன் இங்குப் போர் புரிந்தாய்? உன்னைக் கொல்ல மாட்டோம்—அஞ்சாது கூறுக-என்று இராவணன் வினவினான்.

"உங்குலத் தலைவன் தன்னோடு
ஒப்பிலா உணர்ச்சி யோனை
வெங்கொலை அம்பின் கொன்றாற்கு
ஆள்தொழில் மேற்கொண்டீரேல்
எங்கு உலப்புறும் நும்சீர்த்தி;
நும்மொடும் இயைந்த தென்றால்
மங்குலின் பொலிந்த ஞாலம்
மாதுமை உடைத்து மாதோ!" (83)

"தம்முனைக் கொல்வித்து அன்னாற் கொன்றவற்கு
அன்பு சான்ற
உம்மினத் தலைவன் ஏவ,யாது எமக்கு
உரைக்க லுற்றது?
எம்முனைத் தூது வந்தாய்! இகல்புரி
தன்மை என்னை?
நும்மினைக் கொல்லாம்; நெஞ்சம் அஞ்சலை
நுவல்தி என்றான்" (84)

இவ்வாறு கூறிய இராவணனுக்கு, அனுமன், சீதையை விட்டு விடுமாறு நயமாகப் பல அறிவுரைகள் கூறித் திருத்த முயன்றான்.

**இராவணன் வினா :**

கேட்ட இராவணன், அனுமனை நோக்கி, ஒரு குரங்கா எனக்கு அறிவுரை வழங்குவது? சரி, எல்லாம்

இருக்கட்டும். தூது வந்த நீ அரக்கரைக் கொன்றது ஏன்? என்று வினவினான். அதற்கு அனுமன் பதிலாவது:-

**அனுமன் விடை :**

உன்னைக் காட்டுபவர் இன்மையால், முதலில் அசோக வனத்தை அழித்துப் பார்த்தேன். போருக்கு வந்தவர்களைக்கொன்றேன், பின்னரே உன்னிடம் எளிதில் வரமுடிந்தது—என்று அனுமன் கூறினான்.

இறுதியில் இராவணன் அனுமன் வாலில் தீ மூட்டச் செய்ய, அந்தத் தீயினாலேயே அனுமன் இலங்கையை எரியூட்டினான்.

# 13. நிமித்தம்—கனா

மக்களிடையே நிமித்தம் (சகுனம்) பார்க்கும் பழக்கம் உண்டு. காணும் நிமித்தத்தைக் கொண்டு பின்னால் இன்னது நிகழக்கூடும் என்று மக்கள் உய்த்துணர்வர். நிமித்தத்தின்படி நடந்தாலும் நடக்கலாம்—நடக்கா விடினும் விடலாம். நிமித்த நூல் இருந்ததாகச் சொல்லப் படுகிறது. கண்ட நிமித்தம் நல்ல தாயின், மக்கள் செயலைத் தொடங்கித் தொடர்ந்து செய்தலும், தீயதாயின் செயல் தொடங்காமல்—செய்யாமல் விடுதலும் உண்டு.

நிமித்தம் போலவே, உறக்கத்தில் காணும் கனவுகட்கும் என்னென்னவோ பொருள் கொண்டு மக்கள் துன்புணர்வு கொள்வதோ—இன்புணர்வு கொள்வதோ உண்டு கனா நூல் என்னும் நூலும் உண்டு. கண்ட கனாக்களின் அடிப் படையில் வீணான எணணங்களைக் கொள்பவர் பலர்.

நாடகங்களிலும் காப்பிய நூல்களிலும் சுவைக்காக நிமித்தமும் கனாவும் இடம் பெறச் செய்வதுண்டு. இலக்கிய ஒப்பு நோக்கு என்னும் பொருளில், கோவலன்—கண்ணகி வரலாற்றைக் காண்பாம். கோவலன் நாடகங் களில், கோவலன் சிலம்பு விற்கச் சென்ற பிறகு,

> ''தேங்காய் உடைந்துவிடும் திருவிளக்கு நின்றுவிடும்
> மாங்காய் அழுகி விடும்......''

என்பது போன்ற பாடல்கள் பாடப்படும். சிலப்பதிகாரத் தில் கூறப்பட்டுள்ள நிமித்தத்தைக் காண்பாம் : கோவலன்

சிலம்பு விற்கப் புறப்பட்ட பின்பு, அடைக்கலம் தந்த மாதரி என்பாள் தம் மகள் ஐயையிடம் காணும் நிமித்தங்களைக் கூறினாளாம்:

குடத்தில் உள்ள பால் புரை குத்தியும் உறைந்து கட்டியான தயிராகத் தோயவில்லை; எருதின் கண்களில் நீர் வடிகிறது; ஏதோ நடக்க இருக்கிறது. உறி வெண்ணெய் உருகவில்லை; ஆடுகள் துள்ளியாடவில்லை; ஏதோ நிகழ உள்ளது. ஆன் (பசு) நிரை நடுங்கி வருந்தும்; கழுத்தில் கட்டியுள்ள மணிகள் அறுந்து விழுகின்றது; ஏதோ தீயது விளையப் போகிறது என்று கூறினாளாம். பாடல்பகுதி வருமாறு :-

சிலப்பதிகாரம் — ஆய்ச்சியர் குரவை
—உரைப் பாட்டு மடை—

1. ''குடப்பால் உறையா குவிசிமில் ஏற்றின்
மடக்கணீர் சோரும் வருவதொன் றுண்டு.

2. உறிநறு வெண்ணெய் உருகா உருகும்
மறிதெறித் தாடா வருவதொன் றுண்டு.

3. நான்முலை ஆயம் நடுங்குபு நின்றிரங்கும்
மான்மணி வீழும் வருவதொன் றுண்டு.''

என்பது பாடல் கோவலன் புறப்பட்ட போதுகூட, அவனை முட்டுகிறாற்போல் ஒரு காளை எதிரேறி வந்ததாம்; இதன் பயனை அறியும் ஆயர் குலத்தினன் அல்லன் அவன்—வணிகர் குலத்தினன் ஆதலின் இதைப் பொருட் படுத்தாமல் சென்றானாம். கொலைக் களக்காதை:-

''பல்லான் கோவலர் இல்லம் நீங்கி
வல்லா நடையின் மறுகிற் செல்வோன்
இமிலேறு எதிர்ந்தது இழுக்கென அறியான்
தன்குலம் அறியும் தகுதியன் றாதலின்''.

(98—101)

இலக்கிய ஒப்புமை காண்டல் என்னும் பெயரில் சிலப்பதிகாரப் பகுதி ஈண்டு தரப்பட்டது. இனி இதிலிருந்து கம்பராமாயணத்திற்கு வருவோம்:

கம்பர் தம் இராமாயண நூலில், பல இடங்களில், வலப்பக்க உறுப்புகள் துடித்ததாகவும் கூறியுள்ளார். ஆண்களுக்கு வலப்பக்கம் துடிப்பது நல்ல சகுனமாம்—இடப்பக்கம் துடிப்பது தீய சகுனமாம். பெண்கட்கு இடப்பக்கம் துடிப்பது நல்ல நிமித்தமாம்—வலப்பக்கம் துடிப்பது தீய நிமித்தமாம்.

அனுமன் இராவணன் மனையில் புகுந்தபோது சில தீய நிமித்தங்கள் தோன்றினவாம்;

நிலமும் நெடுமலையும் துடித்தன. பெண்கட்குக் கண்களும் புருவங்களும் தோள்களும் வலப்பக்கம் துடித்தன. திசைகள் துடித்தன. வானம் மின்னல் இன்றியே இடி இடித்தது. மங்கல முழுக் குடங்கள் (நிறை கும்பங்கள்) வெடித்தன.

நிலைமையை உற்று நோக்கிய அனுமன், இந்த நகர்க்குத் திருகெட்டுத் தீமை நிகழப்போகிறது என்று இரங்கினான். யாராயிருப்பினும் ஊழின் வலிமைக்கு ஆட்பட்டே யாகவேண்டும் என்று உணர்ந்தான்; ஊர்தேடு படலம்:—

"நிலம் துடித்தன; நெடுவரை துடித்தன;
நிருதம் குலமாதர்
பொலந் துடிக்கு அமை மருங்குபோல் கண்களும்
புருவமும் பொன்தோளும்
வலம் துடித்தன; மாதிரம் துடித்தன;
தடித்து இன்றி நெடுவானம்
கலந்து இடித்தன; வெடித்தன பூரண
மங்கல கலசங்கள்" (202)

''புக்குநின்று தன் புலன்கொள நோக்கினன்;
பொருவரு அருந்திரு உள்ளம்
நெக்கு நின்றனன்; தீங்கும் அந்தோ இந்த
நெடுநகர்த் திரு என்னா,
எக்குலங்களின் யாவரே யாயினும்
இருவினை எல்லோர்க்கும்
ஒக்கும்; ஊழ்முறையல்லது வலியதொன்று
இல்லென உணர்வுற்றான்'' (203)

காப்பியச் சுவைகளுள் இந்த மாதிரியான செய்திகள் அமைப்பது சிறந்த ஒன்றாகும்.

இராமன் வந்து தன்னைக் காணுதற்கு முன்பு, சீதை தன் உற்ற தோழியாக உள்ள திரிசடையிடம் தனக்கு உற்ற நிமித்தங்களைத் தெரிவிக்கின்றாள்.

தூய திரிசடையே ஒன்று கேள்! எனக்கு ஏதேனும் இப்போது நன்மை வருமோ? என் புருவம், கண், தோள் முதலியன வலம் துடிக்காமல் இடப் பக்கம் துடிக்கின்றன. வரக்கூடிய நன்மை என்னவோ! காட்சிப்படலம் :—

''நலம் துடிக்கின்றதோ நான்செய் தீவினைச்
சலம் துடித்து இன்னமும் தருவது உண்மையோ?
பொலந் தொடி மருங்குலாய் புருவம் கண் முதல்
வலம் துடிக்கின்றில; வருவது ஓர்கிறேன்'' (32)

முனிவரோடு இராமர் முதல்முதல் மிதிலைக்கு வந்த போது, என் புருவமும் தோளும் கண்ணும் இப்பொழுது போலவே இடம் துடித்தன. அதன்படி அப்போது எனக்கு இராமர் கிடைத்தார்.

இன்னொன்றும் கேள்! இராமர் தம்பிக்கு அரசை ஈந்து கானகம் புகுந்த போது எனக்கு வலம் துடித்தது. அதன்படி யான் இராவணனால் சிறைவைக்கப்பட்டேன்.

''முனியொடு மிதிலையில் முதல்வன் முந்துநாள்
துனியறு புருவமும் தோளும் நாட்டமும்
இனியன துடித்தன; ஈண்டும் ஆண்டு என
நனி துடிக்கின்றனர்; ஆய்ந்து நல்குவாய்'' (33)

''மறந்தனன் இதுவும் ஓர் மாற்றம் கேட்டியால்
அறந்தரு சிந்தை என் ஆவி நாயகன்
பிறந்தபார் முழுவதும் தம்பியே பெறத்
துறந்து கான் புகுந்தநாள் வலம் துடித்ததே'' (34)

நஞ்சனைய இராவணன் காட்டில் எனக்கு வஞ்சனை செய்தபோதும் வலம் துடித்தது; ஆனால் இப்போதோ இடம் துடிக்கிறது; எனவே, நீ அஞ்சாதே என்று எனக்கு ஆறுதல் கூறி உதவி புரிய ஏதோ ஓர் ஆற்றல் நிகழ இருப்பதாக உணர்கிறேன்—என்றெல்லாம் சீதை திரிசடையிடம் கூறினாள் :

''நஞ்சனையான் வனத்து இழைக்க நண்ணிய
வஞ்சனை நாள் வலந்துடித்த; வாய்மையால்
எஞ்சல ஈண்டு தாம் இடம் துடிக்குமால்;
அஞ்சலென்று இரங்குதற்கு அடுப்பது யாதென்றாள்''
(35)

இதற்கேற்ப அனுமன் வந்து சீதைக்கு ஆறுதல் கூறி நலம் செய்தான் அல்லவா? பின்னர்த் திரிசடை தான் அறிந்த நிமித்தம் ஒன்றைச் சீதைக்குக் கூறுகிறாள்:

சீதையே! நீ ஒளி பெறவும் உயிர் செழிக்கவும் நல்லது நடக்க உள்ளது. எனது காது ஓரமாக மெல்லென்று ஒரு பொன்னிற வண்டு இன்னிசை எழுப்பிக்கொண்டு போயிற்று. எனவே, உன் நாயகரிடமிருந்து தூது வரப் போகிறது; தீயவர் அழிவது திண்ணம். நான் சொல்வது உண்மை—என்று கூறினாள்:

"உன்னிறம் பசப்பற உயிர் உயிர்ப்புற
இன்னிறத் தேன் இசை இனிய நண்பினால்
மின்னிற மருங்குலாய் செவியில் மெல்லென
பொன்னிறத் தும்பி வந்து ஊதிப்போயதால்" (37)

"ஆயது தேரின் உன் ஆவி நாயகன்
ஏயது தூது வந்து எதிர்தல் உண்மையால்;
தீயது தீயவர்க்கு எய்தல் திண்ணம் என்
வாயது கேள் என மறித்தும் கூறுவாள்" (38)

இன்னும் கேள் எனத் திரிசடை சீதையிடம் கூறுகி றாள்: உனக்குத் தூக்கம் இன்மையால் கனவு தோன்ற வில்லை. ஆனால் யான் கண்ட கெட்ட கனாவைக் கூறு வேன்:

இராவணன், தலையில் எண்ணெய் பிசுபிசுக்க, கழுதை —பேய் பூட்டிய தேரின்மேல் சிவப்பு உடை உடுத்து எமன் இருக்கும் தென் புலம் அடைந்தான். இராவணனின் மக்களும் சுற்றமும் மற்றவர்களும் தென்புலம் சென்றனர்— திரும்பவில்லை.

இராவணன் வளர்த்த வேள்வித் தீ அணைந்து விட்டது. அவ்விடத்தில் கறையான் கூட்டம் மிக்கிருந்தது. தூண்டா மணி விளக்கு திடீரெனப்பேரொளி வீசிற்று. இராவணன் அரண்மனை, காலையில் இடித்த இடியால் பிளவுண்டது.

"எண்ணெய் பொன்முடி தொறும் இழுகி ஈறிலாத்
திண் நெடுங் கழுதை பேய் பூண்ட தேரின் மேல்
அண்ணல் அவ்விராவணன் அரத்த ஆடையன்
நண்ணினன் தென்புலம் நவையில் கற்பினாய்" (40)

"மக்களும் சுற்றமும் மற்றுளோர்களும்
புக்கனர் அப்புலம் போந்ததில்லையால்" (41)

"ஆண்டகை இராவணன் வளர்க்கும் அவ்வனல்
ஈண்டில்; பிறந்தவால் இனங்கொள் செஞ்சிதல்;
தூண்டரு மணி விளக்கு அழலும்; தொன் மனை
கீண்டதால் வானேறு எறியக் கீழை நாள்" (42

இன்னும் கேள்! ஆண்யானைகளே யன்றிப் பெண் யானைகளும் மதம் கொண்டன. அடிக்கப்படாமலேயே முரசு தானாக முழங்கிற்று. முகில்கூட்டம் இல்லாமலேயே வானம் வெடிபட இடித்தது. விண்மீன்கள் உதிர்ந்தன.

பகல் இல்லாத இரவு நேரத்தில், இருள் போக, ஞாயிறு ஒளி வீசுவது போல் தோன்றியது. ஆடவர் சூடிய கற்பக மாலைகள் புலால் நாற்றம் வீசின:

''பிடிமதம் பிறந்தன; பிறங்கு பேரியும்
இடிஎன முழங்குமால் இரட்டல் இன்றியே;
தடியுடை முகில்குலம் இன்றித் தாஇல் வான்
வெடிபட அதிருமால்; உதிரும் மீன்எலாம்'' (43)

''விற்பகல் இன்றியே இரவு விண்டற
எற்பகல் எறித்துளது உன்னத் தோன்றுமால்;
மற்பக மலர்ந்தநோள் மைந்தர் சூடிய
கற்பக மாலையும் புலவு காலுமால்.'' (44)

தோரணங்கள் அறுந்தன; யானைகளின் மருப்புகள் (தந்தங்கள்) ஒடிந்தன. (பூரண) நிறை குடத்து நீர் கள்ளைப் போல் பொங்கிற்று. திங்களைப் பிளந்து கொண்டு விண்மீன்கள் எழுந்தன. வானம் குருதிமழை பொழிந்தது. தண்டம், ஆழி (சக்கரம்)—வாள்—வில் என்னும் படைக் கலங்கள் ஒன்றேடொன்று போர் புரிந்து கொண்டன:

''தோரணம் முறியுமால் துளங்கி, சூழிமால்
வாரணம் முறியுமால் வலத்த வாள்மருப்பு;
ஆரண மந்திரத் தறிஞர் நாட்டிய
பூரண குடத்துநீர் நறவின் பொங்குமால்'' (46)

''விண்தொடர் மதியினைப் பிளந்து மீன்எழும்;
புண்தொடர் குருதியின் பொழியுமால் மழை;
தண்டொடு திகிரி வாள் தனு என்றின்னை
மண்டமர் புரியுமால் ஆழி மாறுற'' (47)

மங்கையரின் தாலிகள் கையில் வாங்குபவர் இல்லாமலேயே தாமாக அறுந்து மார்பகத்தில் வீழ்ந்தன. மயன் மகளாகிய இராவணன் மனைவி மண்டோதரியின் கூந்தல் சரிந்தது........

''மங்கையர் மங்கலத்தாலி மற்றையோர்
அங்கையின் வாங்குநர் எவரும் இன்றியே
கொங்கையின் வீழ்ந்தன; குறித்த ஆற்றினால்
இங்கிதின் அற்புதம் இன்னும் கேட்டியால்'' (48)

('தாலி வாங்குதல்' என்னும் உலகவழக்காறு ஈண்டுள்ளமை காண்க.)

''மன்னவன் தேவியம் மயன் மடந்தைதன்
பின் அவிழ் ஓதியும் பிறங்கி வீழ்ந்தன;
துன்னருஞ் சுடர்சுடச் சுறுக்கொண் டேறிற்றால்
இன்னல் உண்டு எனுமிதற்கு ஏது என்பதே'' (49)

இன்னும் ஒரு கனவு கேள்! இரண்டு சீயங்கள்! (சிங்கங்கள்) மலையிலிருந்து புலிக்கூட்டத்தை உடன் அழைத்துக் கொண்டு வந்து யானைகள் வாழும் காட்டிற்குள் புகுந்து யானைகளை வளைத்து நெருக்கிப் பிணமாகும்படி கொன்றன. வனத்தில் இருந்த மயில் ஒன்று வனம்விட்டு அப்பால் போயிற்று.

''என்றனள் இயம்பி வேறின்னும் கேட்டியால்!
இன்றிவண் இப்பொழு தியைந்த தோர்கனா!
வன்றுணைக் கோள்அரி இரண்டு மாறிலாக்
குன்றிடை உழுவையம் குழுக்கொண்டு ஈண்டியே'' (50)

''உரம்பொரு மதகரி உறையும் அவ்வனம்
நிரம்புற வளைந்தன நெருக்கி நேர்ந்தன;
வரம்பறு பிணம்படக் கொன்ற; மாறிலாப்
புரம்புக இருந்ததோர் மயிலும் போயதால்'' (51)

இரண்டு சீயங்கள் என்பது இராம இலக்குமணரையும், காட்டுப்புலி என்னாமல் மலைப்புலிகள் என்றது கிட்கிந்தை மலைப் பகுதியில் வாழ்ந்த குரங்குப் படையையும், யானைகள் என்பது அரக்கர்களையும், மயில் என்பது சீதையையும் குறிக்கும்படி கம்பர் பாடியுள்ள திறன் மிகவும் சுவையானது.

மேலும் திரிசடை கூறுகிறாள், ஆயிரம் விளக்குகளின் ஒளியையுடைய ஒரு திருவிளக்கினைத் திருமகள் (இலக்குமி) ஏந்திக் கொண்டு இராவணன் வீட்டிலிருந்து வீடணன் வீட்டிற்குச் சென்றாள்— என்று கண்ட கனவைக் கூறினாள்:

''ஆயிரம் திருவிளக்கு அமைய மாட்டிய
சேயொளி விளக்கம் ஒன்றேந்திச் செய்யவள்
நாயகன் திருமனை நின்று நண்ணுதல்
மேயினள் வீடணன் கோயில்; மென்சொலாய்''. (52

இராவணன் அழிய வீடணன் ஆட்சிக்கு வருவான் என்ற குறிப்பு இதில் உள்ளதல்லவா?

இவ்விதமாக நான் கனா கண்டுகொண்டிருந்தபோது நீ (சீதை) என்னை எழுப்பி விட்டாய்; இன்னும், கண்ட கனவு முடிவு பெறவில்லை என்று திரிசடை கூறினாள். உடனே சீதை, திரிசடையை நோக்கி, அன்னையே! அந்த நல்ல கனவின் குறையை இன்னமும் கண்டு முடிக்க, நீ இன்னமும் தூங்குவாயாக—என்று கைகூப்பி வேண்டினாள்:

''பொன்மனை புக்க அப்பொருவில் போதினில்
என்னை நீ உணர்த்தினை, முடிந்தது இல் என,
அன்னையே அதன்குறை காண் என்று ஆயிழை
இன்னமும் துயில்கென இருகை கூப்பினாள்'' (53)

இந்தப் பாடல் மிகவும் சுவையானது. திரிசடை மீண்டும் தூங்கப் போவதில்லை; தூங்கினாலும் இதே

மாதிரியான கனவைத் தொடர்ந்து காண்பாள் என்பது உறுதியில்லை. இருப்பினும், நல்ல கனவாயிருப்பதால், இன்னும் தூங்கி இன்னும் கனவு காண்—என்று சீதை கை கூப்பி வேண்டிக் கொண்டதாகக் கம்பர் பாடியிருப்பது மிகவும் சுவை பயக்கின்றதன்றோ?

உலகியலில் நிமித்தத்திற்கும் கனாவுக்கும் ஏதாவது ஒரு பொருள் வடிவம் தருவது மக்கள் இயல்பு, அதைக் காப்பியங்களிலும் அமைத்துக்காட்டுவது ஒரு வகைக் காப்பியச் சுவையாகும். சிலப்பதிகாரத்தில் 'கனாத்திறம் உரைத்த காதை' என ஒரு காதையே உள்ளது.

தீக்குறி பற்றிக் கம்பர் இன்னும் ஒரு பாடலில் கூறியுள்ளார். அக்ககுமாரன் அனுமனுடன் போர் புரிய வந்த போது, குதிரைகள் கீழே வீழ்ந்தனவாம்; அரக்கர்களின் இடத்தோளும் இடக்கண்ணும் துடித்தனவாம்; முகில் குருதிமழை பொழிந்ததாம்; இரவிலே காகங்கள் கரைந்தனவாம்; முகில் இல்லாமலேயே வானம் இடி இடித்ததாம். இவையாவும் அரக்கர்கட்குத் தீய நிமித்தங்களாகும்:—

"ஓங்கிருந் தடந்தேர் பூண்ட உளைவயப் புரவி ஓங்கித்
தூங்கின வீழ, தோளும் கண்களும் இடத்துத்துள்ள,
வீங்கின மேகம் எங்கும் குருதி நீர்த் துள்ளி வீழ்ப்ப,
ஏங்கின காகம் ஆர்பப, இருளில் விண் இடிப்ப மாதோ!"
(அக்ககுமாரன் வதைப் படலம்—16)

இத்தகைய நிமித்தங்களிலும் கனாக்களிலும் அந்தக் காலத்தில் மக்களுக்கு மிகுந்த நம்பிக்கை இருந்தது.

# 14. அழுகைச்(அவலச்)சுவை

சுவைகள் வடமொழியில் நவரசம் என ஒன்பதாகக் கூறப்படுகின்றன. இவற்றுள் சாந்தம் அல்லது நடுநிலை என்பதும் ஒன்று. இது எல்லோராலும் பின்பற்றப் படாதாத லானும் அவ்வளவாகச் சுவைத்தல் நிகழாதாதலானும், தொல்காப்பியர் இதனை நீக்கிச் சுவைகள் எட்டு என்றார். தொல்காப்பியத்தில் சுவைகள் மெய்ப்பாடுகள் என்னும் பெயரால் குறிப்பிடப்பட்டுள்ளன தொல்காப்பியர் கூறியுள்ள எட்டு மெய்ப்பாட்டுச் சுவைகளாவன.

> "நகையே, அழுகை, இளிவரல், மருட்கை,
> அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்று
> அப்பால் எட்டே மெய்ப்பாடு என்ப"

(தொல்காப்பியம்— பொருளதிகாரம் —மெய்ப்பாட்டியல்—3) என்பது தொல்காப்பிய நூற்பா. இவற்றுள் அழுகை என்பதும் ஒன்று. அழுகையை அவலம் என்னும் சொல்லாலும் குறிப்பிடுவதுண்டு.

நகையாகிய சிரிப்பை நகைச்சுவை என ஒரு சுவையாகக் கூறல் பொருத்தம். ஆனால், அழுகையையும் சுவையாகக் கூறுதல் யாங்ஙனம் பொருந்தும் என்ற வினா எழலாம். சிரிப்பு உண்டாக்குபவரின் சொல் அல்லது செயலைக் கண்டு பிறர் சிரிக்கின்றனர். இது நகைச்சுவை எனப்படுகிறது. இங்கே சுவை என்பது ஒரு விதமான மன உணர்வு—மனக் குறிப்பு இதே போல, அழுகைக்குக் காரணமானவர்களைக் கண்ட போது தொடர்புடையவர் அழுகின்றனர். இதுவும் ஒரு வகையான மன உணர்வே—மனக் குறிப்பேயாகும்.

நாடகத்தில் சிரிப்பு உண்டாக்குபவரைப் பார்த்துச் சிரிப்பது போலவே, அழக்கூடிய நிகழ்ச்சி நடக்கும்போது நடிப்பவரும் அழுகின்றார்—நாடகம் பார்ப்பவரும் அழுவது உண்டு. எனவே, அழுகையும் ஒரு வகைச் சுவையாகும். நகைச்சுவையைப் போலவே அழுகை முதலியனவும் சுவைக்கப்படுதலின், 'சுவை என்பது ஒப்பினான் ஆய பெயர்' என்று தொல்காப்பிய உரையாசிரியராகிய பேராசிரியர் தமது உரையில் குறிப்பிட்டுள்ளார்.

சுவையை மெய்ப்பாடு என்னும் பெயரால் தொல் காப்பியர் குறிப்பிட்டுள்ளார். சுவைப்பவரின் உள்ளக் குறிப்பு, வெளியே அவரது மெய்யில் (உடம்பில்) வெளிப் படுதலின் மெய்ப்பாடு எனப்பட்டது. நகைப்பவரின் முகத்தில் மலர்ச்சியும் சிரிப்பும் சிரிப்பொலியும் தெரிதல், கை கால்களை அசைத்துக் குதித்தல் முதலியன வெளியில் தெரியும் மெய்ப்பாடாம், அழுபவரின் உள்ளக் குறிப்பு, கண்ணீர் விடுதல், சளி சிந்துதல், அழுகையொலி

எழுப்புதல், முகமும் உடலும் வாடுதல் முதலியனவற்றால் வெளிப்படுதல் மெய்ப்பாடாம்.

இங்கே அவலம் என்னும் அழுகைச் சுவையை மட்டும் எடுத்துக் கொள்ளலாம். இளிவு இழவு, அசைவு, வறுமை என்னும் நான்கின் காரணமாக அழுகை பிறக்கும் எனத் தொல்காப்பியர் கூறியுள்ளார்.

''இளிவே, இழவே, அசைவே வறுமையென
விளிம்பில் கொள்கை அழுகை நான்கே''— (5)

என்பது தொல்காப்பிய நூற்பா. இங்கே 'இழவு' என்பதை மட்டும் எடுத்துக் கொள்ளலாம். உற்றாரை இழத்தல், பெறுதற்கரிய பொருளை இழத்தல் முதலியன இழவு எனப் படும்.

கம்பரின் சுந்தர காண்டத்தில் உற்றாரை இழந்து வருந்தும் இழவுச் சுவை நிரம்ப உள்ளது. இனி, இழவுச் சுவை உண்டாவதற்குக் காரணமான நிகழ்ச்சிகள் சில வற்றைக் காண்போம் :

அனுமனால் கொல்லப்பட்ட அரக்கர்களைச் சேர்ந்த அரக்கியர் பலவாறு அழுது அரற்றினர்: அரக்கியர் முழங் காலின் கீழே படியும்படி கூந்தலைத் தொங்கப்போட்டுக் கொண்டு தம் குமுதம் போன்ற வாய் திறந்து அழுத பேரொலி விண்ணை முட்டியதாம்.

''குண்டலக் குழைமுகக் குங்குமக் கொங்கையார்
வண்டு அலைத்தெழு குழல்கற்றை கால்வருடவே
விண்டு அலத்தக விரைக் குமுதவாய் விரிதலால்
அண்டம் உற்றுளது அவ்வூர் அழுதபேர் அமலையே.''
(அக்ககுமாரன் வதைப் படலம்—42)

பெண்கள் சிலர் இறந்து கிடக்கும் தம் கணவன்மாரின் எதிர் சென்று அடியில் விழுந்து வணங்கி அழுதனர்.

''கதிர் எழுந்தனைய செந்திருமுகக் கணவன்மார்
எதிர் எழுந்து அடிவிழுந்து அழுது சோர் இளநலார்''
(43)

மடந்தையர் சிலர் இறந்து கிடக்கும் கணவன் மேல் விழுந்தனர்; அவ்வளவு தான்! மீண்டும் கண் இமைத்திலர்; உடல் இரண்டாயிருக்க உயிர் ஒன்றாயினர். அதாவது, கணவன் உயிர்போன இடத்திற்கே இவர் தம் உயிரும் போனதாகக் கம்பர் கூறுகிறார் :

''தாஇல் வெஞ்செரு நிலத்திடை உலந்தவர் தம்மேல்
ஓவியம் புரைநலார் விழுதொறும் சிலர் உயிர்த்து
ஏவு கண்களும் இமைத்திலர்களாம்; இதுஎலாம்
ஆவி ஒன்று உடல் இரண்டு ஆயதே கொலாம்!

வேறு பெண்டிர் சிலர், கணவர் சென்றுள்ள துறக்க (சொர்க்க) உலகிற்குத் தாமும் சென்று கணவரோடு கூடுவதும் ஊடுவதும் செய்தனராம் :

''ஓடினார் உயிர்கள் நாடு உடல்கள்போல்:
உறுதியால்
வீடினார்; வீடினார் மிடைஉடல் குவைகள்வாய்
நாடினார் படநலார்: நவைஇலா நண்பரைக்
கூடினார் ஊடினார் உம்பர்வாழ் கொம்புஅனார்.''
(45

இந்தப் பாடலில் கம்பர் செய்துள்ள கற்பனை நன்றா யுள்ளது. கணவர் உடல் கிடக்கும் இடத்திற்கு . உயிரைத் தேடும் உடல் போல ஓடினராம். அப்படியென்றால் உயிர் அற்ற கணவர் உயிராகவும், உயிருள்ள மனைவியர் உயிர் அற்ற உடலாகவும் கற்பனை செய்யப்பட்டுள்ளது அன்றோ? பிணக் குவியலில் கணவரைத் தேடிக் கண்டு பிடித்தனராம். இங்கே கணவர் நண்பராகக் கூறப் பட்டிருப்பது ஒரு புதுமை. இந்த அமைப்பு நட்பின் ஒரு வகை இலக்கணமாகும்.

ஓர் அரக்கனின் தலையற்ற முண்டம் ஒன்று நின்றபடி ஆடிக்கொண்டிருந்தது. அதைக் கண்ட பெண் ஒருத்தி அக் குறையுடலை நோக்கி, உன் நண்பரும் என் கணவரும் ஆகியவர் எங்கு உள்ளார் என்று எனக்குக் காட்டுவாயா என்று கைகூப்பி வணங்கி அழுதபடியே வினவினாளாம்:

''தீட்டு வாள் அனைய கண்தெரிவை
ஓர்திரு அனாள்
ஆட்டில் நின்று அயர்வதோர் அறுதலைக்
குறையினைக்
கூட்டி, நின் ஆருயிர்த் துணைவன்
எம்கோனை நீ
காட்டுவா யாதி என்று அழுது கை கூம்பினாள்'' (46)

ஆடும் குறையுடல் அயரும் நிலையில் இருந்ததாம். அந்த உடலோடு தலையைக் கூட்டிச் சேர்த்து வைத்துத் தம் கணவரைக் காட்டும்படி வினவினாளாம். இங்கே நண்பன் 'ஆருயிர் துணைவன்' என்பதும் நட்புக்கோர் இலக்கணம்.

மற்றொருத்தி கணவரது வெட்டுண்ட தலையைக் கையில் ஏந்தியபடி ஆடிக் கொண்டிருக்கும் குறையுடலை நோக்கி, என் அரசே! நீ நடனம் ஆடி ஆடி அலுத்துப் போய் விட்டாய்; இன்னும் ஆடினால் உடல் நோகும், நடனம் ஆடுவதை நிறுத்திக் கொள்வாயாக என்று வேண்டி,

தன் தளிரனைய கைகளால் அந்த உடலைத் தழுவிக் கொண்டாளாம்:

''ஏந்தினாள் தலையை ஓர் எழுத அருங்
கொம்பனாள்
காந்தன் நின்றாடுவான் உயர் கவந்தத்தினை,
வேந்த! நீ அலசினாய்; விடுதியால் நடம்எனாப்
பூந்தளிர்க் கைகளால் மெய்யுறப் புல்லினாள்'' (47)

மயன் மகளாகிய மண்டோதரி அக்ககுமாரன் என்னும் தன் மகன் மடிந்ததைப் பொறுக்க முடியாமல், கண்களி னின்றும் வெள்ளம் பெருக, கூந்தல் புழுதி படிய, வயிற்றில் அடித்துக் கொண்டு கணவனாகிய இராவணனின் கால்களில் விழுந்து கட்டிக் கொண்டு அழுது புலம்பினாள். அவளைப் போலவே மற்ற மடந்தையரும் அழுது புரண்டனர்:

'கயல்மகிழ் கண் இணை கலுழி கான்றுக
புயல்மகிழ் புரிகுழல் பொடி அளாவுற
அயன் மகன்மகன் மகன் அடியின் வீழ்ந்தனள்
மயன்மகள் வயிறுஅலைத்து அலறி மாழ்கினாள்''
(48)

''தா அருந் திருநகர்த் தையலார் முதல்
ஏவரும் இடை விழுந்து இரங்கி ஏங்கினார்'' (49)

இங்கே இராவணன், நான்முகனுடைய மகனுக்கு மகனுக்கு மகன் எனக் கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது.

தம் தம்பி அக்ககுமாரன் இறந்ததை அறிந்த அண்ணன் இந்திரசித்து, தம்பி இறந்தான் என்ற சொல் நெஞ்சைச் சுட்டதால் வெப்பப் பெருமூச் செறிந்து வருந்தி னான்.

''அரம் சுடர் வேல் தனது அனுகன் இறந்த சொல்
உரம் சுட எரி உயிர்த்து ஒருவன் ஓங்கினான்...''
(பாசப் படலம்—2)

தன் தம்பியை நினைக்குந் தோறும் தாரை தாரையாகக் கண்களில் நீர் சொரிய இந்திரசித்து புலம்புகின்றான். குரங்கினால் குரங்கா (தாழாத) ஆற்றல் உடைய என் தம்பி இறந்து விட்டான் என்பது மட்டுமா? இதனால் என் தந்தையின் புகழும் அல்லவா தேய்ந்து விட்டது என்று கூறி ஏங்குகின்றான்;

''தம்பியை உன்னுந் தோறும் தாரை நீர்
ததும்பும் கண்ணான்
வம்பியல் சிலையை நோக்கி வாய்மடித்து
உருத்து நக்கான்;
கொம்பியல் மாய வாழ்க்கைக் குரங்கினால்
குரங்கா ஆற்றல்
எம்பியோ தேய்ந்தான்? எந்தை புகழ் அன்றோ
தேய்ந்தது என்றான்'' (5)

என்பது பாடல். இந்திரசித்து தன் வில்லை நோக்கி வாய் மடித்துச் சினந்து சிரித்தானாம். மகிழ்ச்சியால் விடும் கண்ணீரை 'ஆனந்தக் கண்ணீர்' எனல் மரபு. இங்கே இந்திரசித்து கண்ணீர் சொரிந்தபடியே சிரித்தான். எனவே, இதைக் 'கண்ணீர்ச் சிரிப்பு—அழுகைச் சிரிப்பு' என்று கூறலாமா?

இந்திரசித்து பின்பு தந்தை இராவணனை அடைந்து தம்பிக்காக வருந்தியபடி அவன் கால்களில் விழுந்து கட்டிக் கொண்டு அழுதான். இராவணனும் இந்திரசித்தின் தோளைத் தழுவிக் கட்டிக்கொண்டு அழுது சோர்ந்து போனான். பெண்டிர் எல்லாரும் வயிற்றில் அடித்துக் கொண்டு அலறி மயக்க முற்றனர்:

''தாள் இணை வீழ்ந்தான்; தம்பிக்கு
இரங்குவான்; தறுகணானும்
தோள் இணை பற்றி ஏந்தித் தழு வினன்
அழுது சோர்ந்தான்

வாள் இணை நெடுங்கண் மாதர்
வயிறு அலைத்து அலறி மாழ்க,
மீளிபோல் மொய்ம்பி னானும்
விலக்கினன் விளம்பலுற்றான்'' (8)

தன் கண் அனைய—உயிர் ஒத்த அரக்க மறவர்கள் எண்ணற்றவர் இறந்து கிடத்தலைக் கண்ட இந்திரசித்து, வாய் மடித்துச் சினந்து, புண்ணிலே கோல் பாய்ச்சினாற் போன்ற துன்பத்துடனும் மானத்துடனும் மனம் புழுங்கினான்:

''கண் அனார் உயிரே ஒப்பார் கைப்படைக்
கலத்தின் காப்பார்
எண்ணலாம் தகையர் அல்லர் இறந்து எதிர்
கிடந்தார் தம்மை
மண்ணுளே நோக்கி நின்று வாய் மடித்து
உருத்து மாயாப்
புண்ணுளே கோல்இட் டன்ன மானத்தால்
புழுங்குகின்றான்'' (17)

குருதி கடல் எனப் பெருகி ஓடப் பிணக் குவியல்களை இடறிக் கொண்டு போன இந்திரசித்து தம்பியின் உடலைத் தேடிக் கண்டான். அப்போது இந்திரசித்தின் கண்கள் நெருப்பிலே காய்ச்சிய செம்பைப் போலச் சிவந்து காணப் பட்டன.

''தீப்புண்ட உதிரவாரி நெடுந்திரைப்
புணரி தோன்ற
ஈர்ப்புண்டற் கரிய வாய பிணக்குவடு
இடறிச்செல்லானை
தேய்ப்புண்ட தம்பி யாக்கை, சிவப்புண்ட
கண்கள் தீயில்
காய்ப்புண்ட செம்பின் தோன்றக் கறுப்புண்ட
மனத்தன் கண்டான்'' (19)

இங்கே இந்திரசித்தைக் கம்பர் 'கறுப்புண்ட மனத்தன்' எனக் குறிப்பிட்டுள்ளார். அதாவது சினம் கொண்ட உள்ளத்தனாம் அவன். சினத்தை—வெகுளியைக் கறுப்பாகக் கூறுவது மரபு. தொல்காப்பியம்—சொல்லதிகாரம்—உரியியலில் உள்ள,

''கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள்'' (76)

என்னும் நூற்பா காண்க. இந்திரசித்து, கையில் இருந்த வில் கீழே நழுவி விழ, கண்களிலிருந்து நீரும் குருதியும் சொரிந்து, அதாவது இரத்தக் கண்ணீர் சிந்தி, மூக்கிலிருந்து மூச்சு என்னும் பெயரில் நெருப்பைக் கக்கினானாம்:

''தேர் உகக் கையின் வீரச்சிலை உக
வயிரச் செங்கண்
நீர் உகக் குருதி சிந்த, நெருப்பு உக
உயிர்த்து நின்றான்'' (20)

என்பது பாடல். 'செங்கண் நீர் உகக் குருதி சிந்த' என்பது, இரத்தக் கண்ணீர் என்னும் கற்பனையைக் காட்டுகிறது,

மேலும் இந்திரசித்து, தம்பியை எண்ணிக் கூறுகிறான்! உன் (நம்) தந்தைக்கு அஞ்சி எமனும் உயிர் பறிக்க வாரான்; எவ்வுலகத்து உள்ளவரும் அஞ்சுவர்; அங்ஙனம் இருக்க, இவ்வளவு எளிதில் எங்களை யெல்லாம் விட்டு நீங்கி நீ எவ்வுலகத்தை அடைந்தாய் என்று வினவுகிறான்.

''வெவ்விலை அயில்வேல் உந்தை
வெம்மையைக் கருதி ஆவி
வவ்வுதல் கூற்றும் ஆற்றான்; மாறு மாறு
உலகின் வாழ்வார்
அவ்வுலகத்து உளாரும் அஞ்சுவர் ஒளிக்க ஐயா!
எவ்வுல கத்தை உற்றாய் எம்மை நீத்து
எளிதின் எந்தாய்?'' (21)

இவ்வாறாக இந்திரசித்து பொறுக்க முடியாதவனாய், தம்பிமேல் உள்ள அன்பால் அறிவு அழிந்து சோர்ந்த போது, அனுமன் மேல் தோன்றிய சினம் அவனது ஆற்றொணாத்துயரத்தை உள்ளே அடங்கியிருக்கச் செய்தது. இது நீட்டிக் கொண்டிருக்கும் ஓர் ஆணியை உள்ளே செலுத்த வேறு ஓர் ஆணியால் அடித்தல் போன்றிருந்தது:

''ஆற்றலனாகி, அன்பால் அறிவு அழிந்து
அயரும் வேலை
சீற்றம் என்றொன்று தானே மேல் நிமிர்
செலவிற் றாகித்
தோற்றிய துன்ப நோயை உள்ளுறத்
துரந்தது அம்மா!
ஏற்றம் சால் ஆணிக்கு ஆணி எதிர் செலக்
கடாயது என்ன'' (22)

முள்ளை முள்ளால் எடுத்தல் என்பார்கள், இது வெளியாக்கும் முயற்சி; ஆணியை ஆணியால் அடித்தல் என்பதோ, அதற்கு எதிர்மாறானது; அதாவது அடித்து உள்ளே அடங்கச் செய்தலாகும்.

அனுமன் இலங்கையை எரியூட்டிய போது, அரக்கரும் அரக்கியரும், பறவைகள்— விலங்குகள் முதலிய மற்ற உயிரினங்களும் பட்டபாடு சொல்லுந் தரத்தன்று. உயிரில்லாத அஃறிணைப் பொருள்களும் வெந்து கருக அனைவர் துயரத்திற்கும் அளவேயில்லை.

பஞ்சரத்தோடு கிளிகள் வெந்து மடிய, மகளிர் தம் கண்களினின்றும் பெருகும் நீர் அருவி முலைப் பகுதியை அலைகழிக்கத் தம் கணவரைக் கட்டித் தழுவிக் கொண்டு, முகிலுக்குள் புகும் மின்னலைப் போல் புகைக்குள் மறைந்தனர். புகைக்குள் மறைந்த சில பெண்டிரின் தோற்றம், திரையால் மறைக்கப்பட்ட சித்திரப் பாவையின் தோற்றம் போல் இருந்தது:

"பஞ்ச ரத்தொரு பசு நிறக் கிளீ வெந்து பதைப்ப,
அஞ்சனக் கண்ணின் அருவிநீர் முலை முன்றில்
அலைப்ப
குஞ்சரத் தனகொழுநரைத் தழுவுறும் கொதிப்பால்
மஞ்சிடைப் புகும் மின்னனப் புகையிடை
மறைந்தார்—"
(இலங்கை எரியூட்டுப் படலம்-21)

"கரையில் நுண்புகைப் படலையில் கரந்தனர் கலிங்கத்
திரையினுள் பொலி சித்திரப் பாவையின் செயலார்"
(22)

அரக்கியர் சிலர், ஒரு குழந்தையை இடுப்பில் சுமந்து கொண்டும் மற்றொரு குழந்தையைக் கையில் பிடித்துக் கொண்டும், வேறொரு குழந்தை பின்னே அழுது கொண்டு வரவும், கூந்தல் சிதற, நெருப்புக்கு அஞ்சிக் கடலில் வீழ்ந்தனராம்,

"மருங்கின்மேல் ஒருமகவு கொண்டு, ஒருதனி மகவை
அருங்கையால் பற்றி, மற்றொரு மகவு பின் அரற்ற,
நெருங்கிநீண்டிடு நெறிகுழல் கறுக்கொள நீங்கிக்
கருங்கடல் தலை வீழ்ந்தனர், அரக்கியர் கதறி" (28)

இவ்வாறாக அழுகைச் சுவை உள்ளத்தை உருக்கும் அளவில் சுந்தர காண்டப் பகுதியில் அமைந்துள்ளது. உற்றாரை இழந்தவர்கள் செய்த செயல்களெல்லாம் மெய்ப்பாடாகும். குறிப்பாக, மெய்ப்பாட்டின் கூறாகிய இத்தகு செயல்களைத் தமிழில் 'விறல்' எனவும், வடமொழியில் 'சத்துவம்' எனவும் கூறுவர்.

# 15. உவமை-உருவகங்கள்

**ஒப்புமைக்கலை**

நன்கு தெரியாத ஒன்றை விளக்குவதற்கு நன்கு தெரிந்த ஒன்றை 'அதுபோல் இது' என்று எடுத்துக் காட்டுவது உவமை— ஒப்புமை எனப்படும். இந்த ஒப்புமை ஓர் இயற்கைக் கலையாகும். புலவர்கள் மட்டுமா—கல்வி யறிவில்லாத பொது மக்களும்— எளிய மக்களும் பேசும் போது ஒப்புமை கூறுவது வழக்கம். எனவே இது மக்கள் கலையுமாகும். ஓர் ஒப்புமையும் சொல்ல வராவிடினும், 'என்னமோ சொல்லுவாங்களே அதுபோல' —என்றாவது இனம் தெரியாத ஒப்புமை கூறப்படும். இவ்வாறு ஒப்புமை காட்டுவது 'தெரிந்ததிலிருந்து தெரியாததற்குச் செல்லுதல்' என்னும் உளவியல் முறையுமாகும்.

ஒருவரின் முகமலர்ச்சியை விளக்குவதற்குத் தாமரை போல் அவர் முகம் மலர்ந்திருந்தது என்று கூறுவது உவமை— ஒப்புமையாகும். இதையே சுருக்கித் தாமரை முகம் எனலாம். தாமரை முகம் என்பதையே திருப்பிப் போட்டு முகத் தாமரை என்று கூறுவது உருவகமாகும். தாமரை முகம் என்பதில் தாமரை— முகம் என இரு பொருள்கள் சுட்டப்படுகின்றன. முகத்தாமரை என்பதில் இரு பொருள்கள் இல்லை; முகமாகிய தாமரை—முகமே தாமரை என முகத்தையே தாமரையாக்கிக் காட்டுவது உருவகம் எனப்படும். உவமை ஆங்கிலத்தில் 'Sumile. என்றும், உருவகம் 'Metaphor' என்றும் வழங்கப் பெறும்'

படிக்காத மக்களே— எழுதத் தெரியாத மக்களே உவமையைக் கையாளும்போது படித்த பாவலர்கள்— எழுத்தாளர்கள் உவமையைக் கையாளாமல் விடுவார்களா என்ன? எழுத்துப் படைப்பின் இன்றியமையாத ஓர் உறுப்பு உவமையாகும். கவிஞர்கள் உவமையைக் கையாளுவதில் தங்கள் கைவரிசைகளையெல்லாம் காட்டுவார்கள். எவ்வளவுக்கெவ்வளவு மிகுதியாக உவமையை ஒருவர் கையாளுகிறாரோ— அவ்வளவுக்கவ்வளவு அவரை உயர்ந்த கவிஞராக எடை போடுவோரும் உளர். 'உவமைக் கவிஞர்' என்ற பட்டம் சூட்டுவதும் உண்டு.

இந்தக் கலையில் கம்பரும் இளைத்தவரோ—சளைத்தவரோ— அல்லர். எங்கெங்கே எவ்வளவு உவமை— உருவகங்களைக் கையாள முடியுமோ அவ்வளவையும் கையாண்டு தள்ளி விட்டார் இந்த அடிப்படையுடன் கம்பர் சுந்தர காண்டத்தில் படைத்துக் காட்டியுள்ள உவமை— உருவகங்கட்குள் புகுவோமாக:—

அனுமன் அங்கதாரை என்னும் அரக்கியின் வயிற்றைக் கிழித்து அவளது குடலோடு விண்ணில் சென்ற காட்சி, பாம்பைப் பிடித்துக் கொண்டு பறக்கும் கருடன் போலவும், காகித வாலோடு பறக்கும் காற்றாடியைப் போலவும் இருந்ததாம். பாடல் பகுதிகள்:

**(கடல் தாவு படலம்)**

"உள்வாழ் அரக் கொடு எழு திண்
கலுழன் ஒத்தான்" (71)
"வாலோடு ஆகாயம் உற்ற கதலிக்கு
உவமை! ஆனான்" (72)

(அர = பாம்பு; கலுழன் = கருடன்; கதலி = காற்றாடி)

ஊர் தேடு படலத்தில், நிலவின் தோற்றத்திற்குச் சில உவமைகள் தந்துள்ளார் கம்பர்.

அறம் தோன்றியது போலவும், சுந்தரி முகம் போலவும், இந்திரனது வெண் கொற்றக் குடை போலவும் திங்கள் தோன்றியதாம்.

வானம் திங்களாகிய வெள்ளைக் குடத்தினால் பாற் கடல் நீரை முகந்து கொட்டினாற்போலத் திங்களின் ஒளி பரந்து தோன்றியதாம். பாடல்:

"தெரிந்து ஒளிர் திங்கள் வெண் குடத்தினால் திரை
முரிந்து உயர் பாற்கடல் முகந்து மூரி வான்
சொரிந்ததே ஆம் எனத் துள்ளும் மீனொடும்
விரிந்தது வெண்ணிலா மேலும் கீழுமே" (53)

இது பாடல். மேலும், திங்களாகிய ஆவின் பால் மடியி லிருந்து பால் சொரிவது போலவும் நிலவு ஒளி வீசிற்றாம். மற்றும் இலங்கை முழுவதும் வீசிய நிலவின் ஒளி, அந் நகர்க்கு வெள்ளைத் துணி உறை போர்த்தது போலவும் காணப்பட்டதாம்.

புகழை வெண்ணிறமானது என்று கூறும் மரபு உண்டு என்னும் கருத்து, இக்கட்டுரை நூலில் வேறோர் இடத்திலும் கூறப்பட்டுள்ளது. இங்கே நிலவின் வெள் ஒளி இராமனது புகழ் புகுந்து உலாவியது போல் இருந்ததாம்.

"அன்னவன் புகழ் புகுந்து உலாயது ஓர் பொலிவும்
போன்றதே" (65)

அனுமன் மேல் தேவர் பொழிந்த மலர்கள், மண்ணில் வீழாமல், அரக்கனுக்கு அஞ்சி விண்ணிலேயே இருந்தாற் போல் விண்மீன்கள் தோன்றின. பாடல்:

"எண்ணுடை அனுமன்மேல் இழிந்த பூமழை
மண்ணிடை வீழ்கில மறித்தும் போகில
அண்ணல் வாள் அரக்கனை அஞ்சி ஆய்கதிர்
விண்ணிடைத் தொத்தின போன்ற மீன் எலாம்" (55)

அனுமன் இலங்கைக்குள் ஒவ்வோர் இடத்தையும் கடந்து செல்லுதலுக்கு, பூக்கள் தோறும்வண்டு தாவிச் செல்லுதலை ஒப்புமையாக்கியுள்ளார் கம்பர். இது பாடல்.

"ஆத்துறு சாலை தோறும்
 ஆணையின் கூடம் தோறும்
மாத்துறு மாடம் தோறும்
 வாசியின் பந்தி தோறும்
காத்துறு சோலை தோறும்,
 கருங்கடல் கடந்ததாளான்
பூத்தொறும் வாவிச் செல்லும்
 பொறிவரி வண்டின் போனான்" (99)

கும்பகருணன் மந்திரத்தால் கட்டுண்ட நாகம் போல இடையீடின்றித் தொடர்ந்து தூங்கினான்; உலகம் அழியும் ஊழிக்காலம் வரும் வரையும் பொங்காமல் நீண்ட காலமாய்க் கடல் காத்திருத்தல் போல் நீண்ட நாளாய்த் தொடர்ந்து தூங்கினான் அவன்.

"தடைபுகு மந்திரம் தகைந்த நாகம் போல்
இடைபுகல் அரியதோர் உறக்கம் எய்தினான்;
கடையுக முடிவெனும் காலம் பார்த்து அயல்
புடை பெயரா நெடுங் கடலும் போலவே" (127)

மிகச் சிறிய அணுவிலும் மிகப் பெரிய மேருமலையிலும் ஒளி வீசிச் செல்லும் ஞாயிறு போல, அனுமன் மிகச் சிறிய பொருள்களையும் மிகப் பெரிய பொருள்களையும் கடந்து சென்றான்.

"நுணுகும் விங்கும், மற்று அவன் நிலை
 யாவரே நுவல்வார்
அணுவில் மேருவில் ஆழியான் எனச்
 செலும் அனுமன்" (132)

அரக்கியர்கள் அந்தி வானம் போன்றிருந்தனராம். மேனி வானம் — மணி மாலை விண்மீன்கள் — இடுப்பு

மின்னல்—செந்நிற ஒளிக்கற்றை கூந்தல்—கருமேகம் கண்—பிறைநிலா நெற்றி—இவ்வாறாகக் கம்பர் உருவகம் செய்து, அரக்கியர் அந்திவானம் போன்றனர் என்கிறார்;

''சவிபடு தகைசால் வானம் தான் ஒரு மேனி ஆக,
குவியும்மீன் ஆரமாக, மின்கொடி மருங்குல் ஆக,
கவிர்ஒளிச் செக்கர் கற்றை ஓதியா, மழை உண்
கண்ணா,
அவிர் மதி நெற்றி ஆக, அந்திவான் ஒக்கின்றாரும்''
(180)

என்பது பாடல். அசோகவனத்தில் சீதை மெலிந்து வருந்தியிருந்ததற்குச் சில ஒப்புமைகள் காட்சிப் படலத்தில் கம்பரால் தரப்பட்டுள்ளன.

மலைக்கற்களுக்கு நடுவே ஒரு துளி நீரும் காணாது மெலியும் மருந்துச் செடிபோல் சீதை மெலிந்திருந்தாள். அவளது இடையைப் போலவே மற்ற உறுப்புகளும் மெலிந்து விட்டன:

''வன்மருங்குல் வாள்அரக்கியர் நெருக்க அங்கிருந்தாள்
கல்மருங்கு எழுந்து என்றும் ஓர் துளிவரக் காணா
நன்மருந்து போல்நலன் அற உணங்கிய நங்கை
மென்மருங்குல் போல் வேறுள அங்கமும் மெலிந்தாள்''
(3)

அரக்கியர் நடுவண் அகப்பட்டுக் கொண்ட சீதை தூக்கம் இன்றி வெயிலுக்கு முன் ஒளி தெரியாத விளக்கு போல உடலில் விளக்கம் இன்றி, புலிக் கூட்டத்திடையே அகப்பட்ட இளைய பெடை மான் போன்றவளானாள் :

''துயிலெனக் கண்கள் இமைத்தலும்
முகிழ்த்தலும் துறந்தாள்;
வெயிலிடைத் தந்த விளக்கென
ஒளி இலா மெய்யாள்;

மயில் இயல் குயில் மழலையாள்
மான் இளம் பேடை
அயில் எயிற்று வெம்புலிக் குழாத்து
அகப்பட்ட தன்னாள்'' (4)

அமிழ்தத்தைக் கொண்டு மன்மதன் தீட்டிய ஓவியம் புகை படிந்து பொலிவிழந்தாற்போல் சீதை தெளிவு இன்றிக் காணப்பட்டாள்.

''தேவு தெண்கடல் அமிழ்து கொண்டு
அனங்க வேள் செய்த

ஓவியம் புகை யுண்டதே ஒக்கின்ற உருவாள்'' (11)

முகில் (மேகக்) கூட்டத்திடையே தோன்றும் மின்னல் போல, அரக்கியர் நடுவே உள்ள சீதையை அனுமன் கண்டான்.

''விரி மழைக் குலம் கிழித்து ஒளிரும் மின் என
கரு நிறத்து அரக்கியர் குழுவில் கண்டனன்'' (59)

சீதையை இழந்த இராமன், உயிர் இன்றி இயங்கும் இயந்திர வடிவம் போன்று இருப்பதாக அனுமன் சீதையிடம் தெரிவித்தான்.

''இன் உயிர் இன்றி ஏகும்
இயந்திரப் படிவம் ஒப்பான்'' (78)

அனுமன் சீதைக்குப் பேருருவம் (விசுவரூபம்) காட்டிய போது, மேரு மலையில் உள்ள மரங்களில் மின்மினிக் கூட்டம் தொத்திக் கொண்டிப்பதைப்போல, அனுமனது உடலில் உள்ள மயிர்களில் விண்மீன்கள் தொத்திக் கொண்டது போல் காணப்பட்டனவாம்.

''ஒத்துயர் கனகவான் கிரியின் ஓங்கிய
மெய்த்துறு மரம்தொறும் மின்மினிக் குலம்.
மொய்த்து உளவாம் என, முன்னும் பின்னரும்
தொத்தின தாரகை மயிரின் சுற்று எலாம்'' (101)

கம்பர் ஒரு பம்பர விளையாட்டுக் காட்டியுள்ளார். பம்பரத்தைக் கயிற்றால் சுற்றி வீசினால் 'கர கர' எனச் சுழலும். இங்கே, அனுமன் தன் வாலாகிய கயிற்றினால் கிங்கரராகிய பம்பரத்தைச் சுற்றி எறிய அவர்கள் கீழே விழுந்து சுழன்றனராம்:

"கொற்ற வாலிடைக் கொடுந்தொழில்
அரக்கரை அடங்கச்
சுற்றி வீசலின் பம்பரம் ஆமெனச் சுழன்றார்"
(கிங்கரர் வதைப் படலம்—30)

அனுமன் மேல் அரக்கர்கள் விட்ட படைக்கலங்கள், அனுமனை ஒன்றும் வருத்தாமல், சுட்ட இரும்பால் பட்டடைக் கல்லை அடிக்கும்போது பட்டடைக்கல் சுடப்படாமல் பொறிகள் பறத்தல் போல் சிதறிப் போயினவாம். பாசப்படலம்:-

"வட்ட வெஞ்சிலை ஓட்டிய வாளியும் வயவர்
விட்டவிட்ட வெம்படைகளும் வீரன்மேல் வீழ்ந்த,
சுட்ட வல்லிரும்பு அடைகலைச் சுடுகலாதது போல்
பட்டபட்டன திசையொடும் பொறியொடும் பரந்த."
(32)

இந்திரசித்து அனுமனைப் பாசக் கயிற்றால் கட்டி இழுக்கிறான். இதைக் கொண்டு தேவர்கள் மந்தர மலையில் வாசுகி என்னும் பாம்பைச் சுற்றிக் கடல் கடைந்த நிலையைக் கம்பர் உருவகித்துக் காட்டுகிறார். இலங்கை நகரம் கடலாம். அனுமன் மந்தர மலையாம், அனுமன் மேல் சுற்றச் செய்த பாம்பு வாசுகியாம். அரக்கர்கள் தேவர்களாம். இது கம்பரின் கற்பனை பாடல்:

"குரக்கு நல்வலம் குறைந்தது என்று
ஆவலம் கொட்டி
இரைக்கு மாநகர் எறிகடல் ஒத்தது;
எம் மருங்கும்

திரைக்கும் மாசுணம் வாசுகி ஒத்தது; தேவர்
அரக்கர் ஒத்தனர்; மந்தரம் ஒத்தனன்
அனுமன்'' (60)

உலகம் அழியும் ஊழிக்காலத்தில் ஆதிசேடன் சுற்றிக் கொள்ளும் பெருமலையைப் போல் தோன்றினான் அனுமன்.

''மறத்து மாருதம் பொருத நாள்வாள் அரா அரசு
புறத்துச் சுற்றிய மேருமால் வரையையும்
போன்றான்'' (61)

வேடன் கையில் குஞ்சு அகப்படத் தாய் அன்னம் வருந்துதல் போல, அரக்கரிடம் அனுமன் அகப்பட்டுக் கொண்டதற்குச் சீதை வருந்தினாள்:

''பாவி வேடன்கைப் பார்ப்புஉறப் பேதுறும்
தூவி அன்னம் அன்னாள் இவை சொல்லினாள்''
(பிணிவீட்டுப் படலம்—30)

மற்றும்; கன்று பிறர் கையில் அகப்படத் தாய் விலங்கு வருந்துதல் போலவும் சீதை வருந்தினாள்:

''தேய கன்று பிடியுறத் தீங்குஉறும்
தாயைப் போலத் தளர்ந்து மயங்கினாள்'' (35)

இராவணன் அரசவையில் வீற்றிருந்த போது, அவன் முடிக்கு மேல் இருந்த வெண் கொற்றக் கொடை, ஒரு புதுத் திங்கள் தோன்றியிருப்பது போல் காணப்பட்டதாம்:

''தலங்கள் மூன்றிற்கும் பிறிதொருமதி
தழைத்தென்ன
அலங்கல் வெண்குடைத் தண்ணிழல் அவிர்
ஒளி பரப்ப'' (37)

கடல் பொன்னிறமான மேரு மலையை முடியாகச் சூடிக்கொண்டால் எப்படியோ—அப்படி கரிய இராவணன் பன்மணி பதித்த முடியொடு விளங்கினான்.

"குவித்த பல்மணிக் குப்பைகள் கலையொடும்
கொழிப்பச்
சவிச் சுடர்க்கலன் அணிந்த பொன்தோளொடு
தயங்கப்
புவித்தடம் படர்மேருவைப் பொன் முடி என்னக்
கவித்து மால் இருங்கடல் இருந்தது கடுப்ப" (41)

இருண்ட இரவு என்பவள், முத்தால் ஆன அணிகலன் களாகிய நிலாவொடும் விண்மீன்களாகிய பன்மணிக ளொடும் பொருந்தி அந்தி வானமாகிய உடையை உடுத்துக்கொண்டிருப்பது போல் கரிய இராவணன் காணப் பட்டானாம்! இங்கே இரவு ஒரு பெண்ணாக உருவகிக்கப் பட்டுள்ளது.

"சிந்து ராகத்தின் செறிதுகில் கச்சொடு செறியப்
பந்தி வெண்முத்தின் அணிகலன் முழுநிலாபரப்ப
இந்து வெண்குடை நீழலில் தாரகை இனம்பூண்டு
அந்திவான் உடுத்து அல்லுவீற் றிருந்ததாம் என்ன"
(42)

சோலையில் தேன் அருந்தத் துடிக்கும் வண்டுபோல, இராவணன் சீதையை அடைய மனங்கொண்டானாம்.

"பொதும்பர் வைகுதேன் புக்கு அருந்துதற்கு
அகம்புலரும்
மதம்பெய் வண்டெனச் சனகிமேல் மனம்செல" (47)

இராவணன் தன்னை வணங்கும் மகளிரின் முகங் களாகிய மலரும் தாமரை மலர்கட்கு ஞாயிறாகவும், தன்னை வணங்கும் வானவர்—தானவர்களின் கைகளாகிய தாமரை மலர்கள் குவிவதற்குத்திங்களாகவும் இருந்தானாம். இஃது ஒரு வகை உருவகமாகும்.

"திங்கள் வாள்நுதல் மடந்தையர் சேயரி கிடந்த
அங்கயத் தடந் தாமரைக்கு அலரியோன் ஆகி,
வெங்கண் வானவர் தானவர் என்றிவர் விரியாய்
பொங்கு கைகளாம் தாமரைக்கு இந்துவே போன்று."

(49)

இராவணனைக் கண்ட அனுமன் கருநாகத்தைக் கண்ட கருடன் போலப் பாய எண்ணினாம்.

"இருந்த எண்திசைக் கிழவனை மாருதி எதிர்ந்தான்
கருந்திண் நாகத்தை நோக்கிய கலுழனின்
கனன்றான்" (50)

வயலில் உள்ள பயிர்க்கு நீர் பாய்ச்சல் போல், அரக்கியர், காமப் பயிர்க்கு நீராக மது அருந்துகின்றனர்:

"வருந்திய கொழுநர் தம்பால் வரம்பின்றி
வளர்ந்தகாம
அருந்திய பயிர்க்கு நீர்போல் அருநறவு
அருந்துவாரை"

(ஊர் தேடு படலம்—105)

இதில், காமம் பயிராக உருவகிக்கப்பட்டுள்ளது.

கணவரைப் பிரிந்த அரக்கியர், பூமேல் பூ வைத்தது போல், தம் காந்தள் மலர் போன்ற கையால் தாமரை மலர் போன்ற முகத்தை ஊன்றிப் பிடித்து வருந்துகின்றனராம்:

"நலன்உறு கணவர் தம்மை
நவைஉறப் பிரிந்து, விம்மும்
முலைஉறு கலவை தீய,
முள்இலா முளரிச் செங்கேழ்
மலர்மிசை மலர்பூத் தென்ன,
மலர்க்கையால் வதனம் தாங்கி
அலமரும் உயிரி னோடும்
நெடி துயிர்த்து அயர்கின்றாரை" (111)

'மலர் மிசை மலர் பூத்தென்ன' என உவமை கூறியிருப்பதால், கையைக் காந்தள் மலராகக் கொண்டு, தாமரை

என்பதை 'உரையில் கோடல்' என்னும் விதிப்படி வருவித்துத் தாமரை போன்ற வதனம் (முகம்) எனக் கொள்ள வேண்டும்.

இந்தப் பாடலில் 'மலர்க்கை' எனக் கைமலராக உருவகிக்கப்பட்டுள்ளது. கையைக் காந்தள் மலராகச் சொல்வது மரபு. கையை (காந்தள்) மலராக உருவகித்தாற்போல், வதனத்தை (தாமரை) மலராக உருவகித்துக் காட்டவில்லை. கை ஒன்றை மட்டும் உருவகித்திருப்பதால் இதனை 'ஓர் இட உருவக அணி' (ஏக தேச உருவக அணி) என்று கூறுவர் புலவர்கள்.

இராவணன், வெய்துயிர்ப்பு (பெருமூச்செறிதல்) என்னும் அம்மியின் மேல், தன் உயிராகிய அரைபொருளை இட்டு, சீதை மேல் உள்ள காதலாகிய தண்ணீரை ஊற்றி அரைக்கின்றானாம். இது முற்றிலும் உருவகம். பாடல்:

"காவியம் கண்ணிதன்பால் கண்ணிய காதல்நீரின்
ஆவியை உயிர்ப்பு என்றோதும் அம்மி இட்டு
அரைக்கின்றானை" (211)

கருங்கடல்லே புறப்படு மலையில் (உதயகிரியில்) ஞாயிறு தோன்றியிருப்பது போல், கரிய இராவணனது மலை போன்ற மார்பில் பன்மணி மாலைகள் ஒளி வீசுகின்றனவாம்.

"தழுவா நின்ற கருங்கடல்மீது உதயகிரியில்
சுடர் தயங்க
எழுவான் என்ன, மின்இமைக்கும் ஆரம்புரளும்
இயல்பிற்றாய்...மார்பானை" (214)

முகிலைக் கிழித்துத் துவளும் மின்னல் போல, இராவணனின் மார்பில் பூணூல் விளங்கிற்றாம்:

"சூல்நிறக் கொண்மூக் கிழித்து இடைதுடிக்கும்
மின்என மார்பில் நூல்துளங்க"
(காட்சிப் படலம்—78)

இராவணன் வரும்போது வெண்சாமரை வீசப்பட்டது; மேலே வெண்கொற்றக் குடை பிடிக்கப்பட்டது. இவற்றிற்குக் கம்பர் உவமை கூறுகிறார்: வெள்ளைப்பால் கடலின் அலை, கரிய மலை மேல் மோதி மோதித் திரும்புவது போல், கரிய இராவணன் முன்பு வெண் சாமரை வீசப் பட்டதாம்; கருங்கடலினின்றும் மேல் எழும் கறையற்ற வெள்ளைத் திங்கள் போல் வெண்கொற்றக்குடை விளங்கிற்றாம்:

''பாலின் வெண்பரவைத் திரை கருங்கிரிமேல்
பரந்தெனச் சாமரை பதைப்ப,
வேலைநின் றுயரும் முயல்இல் வெண்மதியின்
வெண்குடை மீதுற விளங்க'' (89)

திங்களின் நடுவில் முயல் (கறை) இருக்கும். இங்கே முயல் இல்லாத வெண்மதி என்று கூறியிருப்பது 'இல்பொருள் உவமை'யாகும்.

இராவணன் சீதையை நெருங்கிய போது, அவள், புலி தன்னைத் தின்ன வந்தபோது கலைமான் நடுங்குவது போல் நடுங்கினாள்:

''காய்சின உழுவை தின்னிய வந்த
கலையிளம் பிணை எனக்கரைந்தாள்'' (94)

சீதையை அடைய விரும்பி வந்த இராவணன் அவளைப் பெற முடியாமல் திரும்பிப் போய் விட்டான். அப்போது சீதை, பாம்பு விழுங்கி உமிழ்ந்த (கிரகண காலத்) தூய மதியம் போன்றிருந்தாள்!

''போயினன் அரக்கன் பின்னை
பொங்கு அரா நுங்கிக் கான்ற
தூயவெண் மதியம் ஒத்த தோகை.'' (147)

என்பது பாடல் பகுதி. 'யானைக்கும் அடி சறுக்கும்' என்பதற்கேற்ப கம்பர் இங்கே தவறி விட்டார்.

இராவணன் சீதையைத் தீண்டவே இல்லை. அங்ஙனம் இருக்க, 'அரா நுங்கிக் கான்ற தூய வெண் மதியம் ஒத்த தோகை' என்று கூறியிருக்கக் கூடாது. விழுங்கி உமிழ்தல் எனில், தொட்டு அணைத்திருப்பதாகப் பொருள் படுமே! ஆனால், கம்பர் 'தூய வெண் மதியம்' என்று கூறியிருப்ப தால் ஓரளவு தப்பித்துக் கொண்டார் என்று கூறலாம். கிரகண காலத்தில், அறிவியல் முறைப்படி, திங்களை எதுவும் தீண்டவில்லையன்றோ? அதுபோல், இராவணன் சீதையைத் திண்டவில்லை என நாம் ஆறுதல் பெறுவதைத் தவிர வேறு வழியில்லை.

இராவணன் சீதையை விடுவிக்கவில்லையேல் அவனது இலங்கை எதிர்காலத்தில் உருகிவிடும் என்பதை விளக்கக் கம்பர் உருவக அணி அமைத்துள்ளார். அரக்கர்கள் ஊதும் உலையில் போடும் கரியாம்; சீதை நெருப்பாம்; இராமன் அம்பு, துருத்தியால் ஊதும் ஊதைக் காற்றாம்; இலங்கை பொன்னாம். அதாவது இலங்கை எரிந்து உருகி விடுமாம். பாடல் இது:

"வினையுடை அருக்கராம் இருந்தை வெந்துகச்
சனகி என்றொரு தழல் நடுவண் தங்கலான்,
அனகன் கை அம்பெனும் அளவில் ஊதையால்
கனகம் நீடு இலங்கை நின் றுருகக் காண்டியால்"
(சூடாமணிப் படலம்—59)

ஒன்று உறுதி என்பதை விளக்க 'உள்ளங்கை நெல்லிக் கனிபோல' என்னும் உவமையைப் பலரும் பயன் படுத்துவதுண்டு. கம்பருக்கும் இது விலக்கு அன்று. அனுமன் சீதையிடம், இராமர் இலங்கையை அழித்துச் சீதையை மீட்டல் உறுதி என்பதை விளக்கும்போது, இதனை உள்ளங்கை, நெல்லிக்கனி போல உண்மை யாவதைக் காட்டுவேன் எனக் கூறுகிறேன்:

"உன் கைந் நிலை நெல்லியங்கனியின் காட்டுகேன்"
(70)

என்பது பாடல் பகுதி. கருடன் மேல் திருமால் அமர்ந்திருப்பது போன்று, அனுமன் தோள் மேல் இராமர் அமர்ந்திருப்பாராம்:

''விண்ணுறு கலுழன்மேல் விளங்கும் விண்டுவின்
கண்ணனை என் நெடும் புயத்தில் காண்டியால்'' (72)

அரக்கர்கள் அனுமனால் நெருக்கப்பட்டு, அரைக்கும் பொறி (இயந்திரம்) யிடை அகப்பட்ட கரும்பு போல் நசுங்க, அவர்தம் குருதி கருப்பஞ்சாறு போல் கடலில் கலந்தது.

''நிருதர் எந்திரத் திரு கரும்பாம் என நெரிவார்
குருதி சாறெனப் பாய்வது குரைகடல் கூனில்'' (40)

கம்பர் புண்கள் நிறைந்த அனுமனுக்கு ஒரு புது உவமை தருகின்றார்:

''பூத்த மரம் போல் புண்ணால் பொலிகின்றான்'' (43)
புண்கள் பூக்களாம்; அனுமன் பூத்த மரமாம்.

அரக்கர்கள் தன்மேல் எய்த அம்புகளை எல்லாம், காற்றால் கலைந்து ஓடும் முகில்கள் போல் சிதறும்படி, இரும்புத் தடியால் விலகச் செய்தான் அனுமான்:

''ஐயன், அங்கும் இங்கும் காலால் அழியும்
மழை என்ன,
எய்த எய்த பகழி எல்லாம் எழுவால்
அகல் வித்தான்'' (45)

துதிக்கையைத் தூக்கிக் கொண்டு வந்த யானைகளை அனுமன் வீழ்த்தியது, பாய் மரக்கப்பல்கள் கடலில் கவிழ்ந்தாற்போல் தோன்றிற்று:

''தீதுறு பொறியுடைச் செங்கண் வெங்கைமா
மீயுறத் தடக்கையால் வீரன் வீசுதோறு
ஆய்பெருங் கொடியன கடலின் ஆழ்வன
பாயுடை நெடுங்கலம் படுவ போனறவே'' (38)

தாழியில் அகப்பட்ட தயிர் போன்ற அரக்கர்களை அனுமன் மத்து போல் கடைந்து கலங்கச் செய்தான்:

''ஆழிப் பொருபடை நிருதப் பெரு வலி
அடலோர், ஆய்மகள் அடு பேழ் வாய்த்
தாழிப் படு தயிர் ஒத்தார், மாருதி
தனி மத்து என்பதொர் தகை ஆனான்''
(அக்ககுமாரன் வதைப் படலம்—30)

அனுமன் இலங்கையை எரியூட்டியபோது, பறவைகள் கடலில் போய் விழுந்தன; அவற்றைப் பெரிய மீன்கள் விழுங்கின. மனத்தில் அருள் இல்லாத வஞ்சகரை அடைக்கலமாக அடைந்தவர். அழிவது போல் பறவைகளின் நிலைமை ஆயிற்று:

''வெருளும் வெம்புகைப் படலையின்
மேற்செல வெருவி
இருளும் வெங்கடல் விழுந்தன
எழுந்தில பறவை;
மருளின் மீன்கணம் விழுங்கிட
உலந்தன; மனத்து ஓர்
அருள்இல் வஞ்சரைத் நஞ்சம் என்று
அடைந்தவர் மான''
(இலங்கை எரியூட்டுப் படலம்—31.)

இலங்கையினின்றும் அனுமன் புறப்பட்டு வானரரை அடைந்தபோது, தாய் வரக் கண்ட பறவைக் குஞ்சுகள் போல் வானரர்கள் மகிழ்ந்தனர்:

''பாய்வரு நீளத் தாங்கண் இருந்தன
பறவைப் பார்ப்புத்
தாய்வரக் கண்ட தன்ன உவகையின்
தளிர்த்தார் அம்மா''
(திருவடி தொழுத படலம்—3)

அனுமனின் உடல் முழுதும்— உடல் உறுப்புகள் எல்லாவற்றிலும் இருந்த புண்கட்கு அளவே இல்லையாம். உலகம் தோன்றியதிலிருந்து எத்தனை நாள்கள் சென்றிருக்கும் என எண்ணிக்கை தர முடியாதது போன்று அளவற்று இருந்த புண்களை நோக்கி வானரர் வருந்தினர்.

''தாள்களில் மார்பில் தோளில்
 தலைகளில் தடக்கை தம்மில்
வாள்களின் வேலின் வாளி
 மழையினின் வகிர்ந்த புண்கள்
நாள்கள்மேல் உலகில் சென்ற
 எண்என நம்பி நண்ண
ஊழ்கொள நோக்கி நோக்கி
 உயிர் உக உளைந் துயிர்த்தார்'' (6)

அளவே இல்லை என்று கூறுதற்கு, ஆற்று மணலினும் பல— கடல் மணலினும் பல என்றெல்லாம் புலவர்கள் புகல்வது மரபு. ''வள்ளுவரோ, துறவிகளின் பெருமையின் அளவுக்கு, உலகில் இதுவரை இறந்தவர் எண்ணிக் கொண்டால் எவ்வளவோ அவ்வளவு என எல்லை கூறினார்:

''துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
 இறந்தாரை எண்ணிக்கொண் டற்று'' (22)

என்பது திருக்குறள் பாடல். கம்பரோ, ஈண்டு, உயர் அளவை அறிவிக்க, உலகம் தோன்றியதிலிருந்து கழிந்துள்ள நாள்களை எண்ண முடியாதது போன்றது என்று மொழிந்துள்ளார். இவ்வாறே, கம்பரின் உவமை— உருவகக் கற்பனையின் பெருமைக்கு எல்லை ஏது? இன்னும் சில உவமைகள், இந்நூலில் வேறிடங்களில்—ஆங்காங்கே எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

# 16. சில அணி நயங்கள்

கம்பர் சுந்தர காண்டத்தில் நயமான சில அணிகளைப் பாடல்களில் அமைத்துக் காப்பியத்தைச் சுவைப்படுத்தியுள்ளார். ஆங்கிலத்தில் அணியை Figure of Speech என்று கூறுவர்.

உவமை—உருவக அணிகள் முன்பு தனித்தலைப்பில் இடம் பெற்றுள்ளன. இந்தப் பகுதியிலே 'வேற்றுப் பொருள் வைப்பு அணி', 'தற்குறிப்பு ஏற்ற அணி' முதலிய சில அணிகளையும் சிறிது விதந்து காண்பாம் முதலில் வேற்றுப் பொருள் வைப்பு அணி வருமாறு :—

### வேற்றுப் பொருள் வைப்பு அணி

ஒரு நிகழ்ச்சியை விவரித்து, அதிலிருந்து பெறக்கூடிய உலகறியும் ஒரு பொது உண்மையை வேறாக—தனியாகக் கூறுவது "வேற்றுப் பொருள் வைப்பு அணியாகும்."

"முன்னொன்று தொடங்கி மற்றது முடித்தற்குப்
பின்னொரு பொருளை உலகறி பெற்றி
ஏற்றிவைத் துரைப்பது வேற்றுப் பொருள் வைப்பே"
(47)

என்பது, அணிகள் பற்றிக் கூறும் 'தண்டியலங்காரம்' என்னும் நூலில் உள்ள நூற்பா ஆகும். இதற்குப் 'பிறிது மொழிதல் அணி' என்ற பெயரும் கூறுவதுண்டு.

இந்த அணி அமைந்த சுந்தரகாண்டப் பாடல்கள் சில வற்றை இனிக் காண்பாம் ;—

இலங்கை மாதேவி அனுமனை நோக்கி, உன்னால் எல்லா வெற்றிகளும் பெற முடியும்; உன்னால் முடியாதது உண்டோ? (இல்லை). நீ இலங்கைக்குள் சென்று செயல் படுக என்று கூறுகின்றாள். இங்கே 'அறம் வெல்லும்—பாவம் தோற்கும்—என்பதைச் சொல்லவும் வேண்டுமா?' என்னும் பொது உண்மையும் பாடலில் அமைந்துள்ளது:

''அன்னதே முடிந்ததையே! அறம் வெல்லும்
பாவம் தோற்கும்
என்னும் ஈது இயம்பவேண்டும் தகையதோ?
இனி மற்றுன்னால்
உன்னிய எல்லாம் முற்றும்; உனக்கும்
முற்றாத துண்டோ?
பொன்னகர் புகுதி என்னாப் புகழ்ந்தவள்
இறைஞ்சிப் போனாள்''
(ஊர் தேடு படலம்—93)

இந்தப் பாடலுக்கு முன்னேயும் அனுமனது வெற்றி கூறப்பட்டுள்ளது. அதனது நோக்கம் அறிவிக்கப்பட் டுள்ளது. எனவே, இவையெல்லாவற்றையும் அடிப்படை யாகக் கொண்டு, 'அறம் வெல்லும்—பாவம் தோற்கும்' என்னும் பொது உண்மை புகலப்பட்டுள்ளது.

அகழியின் கரை பளிங்குக் கல்லால் ஆனதால் கரைப் பகுதிக்கும் தண்ணீருக்கும் வேற்றுமை தெரியவில்லை. தெளிந்த சிந்தையுடைய நல்லவரும் இழிந்த சிறுமதிபடைத் தவரொடு சேர்ந்தால் இனங் கண்டு கொள்ள முடியாது.

''பளிங்கு செற்றிக் குயிற்றிய பாய் ஒளி
விளிம்பும் வெள்ளமும் மெய் தெரியாது; மேல்
தெளிந்த சிந்தையரும் சிறியார்களோடு
அளிந்த போது அறிதற்கு எளிதாவரோ?'' (152)

பளிங்குக் கரைப் பகுதிக்கும் தண்ணீருக்கும் வேறுபாடு தெரியவில்லை என்பதைக் கூறி, பின்பு, அறிஞர்களும் தாழ்ந்தவர்களுடன் சேர்ந்து விடின் வேறுபாடு தெரியாது என்னும் பொது உண்மை அறிவிக்கப்பட்டுள்ளது.

அனுமன் இலங்கை நகரைச் சுற்றிப் பார்த்து, இந்த நகர் அழியும். யாராயிருப்பினும் இருவினை எல்லோர்க்கும் பொது; ஊழினும் வலிய தொன்றில்லை என எண்ணினான்.

''புக்கு நின்று தன் புலன் கொள நோக்கினன்;
பொரு அருந் திருவுள்ளம்
நெக்கு நின்றனன்; நீங்கும் அந்தோ இந்த
நெடு நகர்த்திரு என்னா;
எக்குலங்களின் யாவரே யாயினும்
இருவினை எல்லோர்க்கும்
ஒக்கும்; ஊழ்முறை அல்லது வலிய தொன்று
இல்லென உணர்வுற்றான்'' (203)

ஊழ்முறை அல்லது வலிய தொன்று இல்' என்னும் பொது உண்மை இப்பாடலில் இடம் பெற்றுள்ளது.

அனுமன் சீதையின் கற்பின் தூய்மைக் கண்டு வியந்து அறத்திற்கு அழிவு இல்லை என்று கூறுகிறான்.

''மாசுண்ட மணியனாள் வயங்கு வெங்கதிர்த்
தேசுண்ட திங்களும் என்னத் தேய்ந்துளாள்;
காசுண்ட கூந்தலாள் கற்பும் காதலும்
ஏசுண்ட தில்லையால்; அறத்திற்கு ஈறு உண்டோ''
(காட்சிப் படலம்—64)

அறத்திற்கு ஈறு (அழிவு) இல்லை என்னும் பொது உண்மை இப்பாடலில் கூறப்பட்டுள்ளது.

அனுமன் மேலும் எண்ணுகிறான். இரவு பகலாகத் தேவர்கள் அரக்கர்கட்குச் சேவகம் புரிகின்றனர். அது அரக்கர்களின் செல்வமோ? சீதையைச் சிறைவைத்திருப்பது

அரக்கரின் தீமையோ? ஒருவர்க்கு இந்த நிலைமை இயலுமோ? இனிச் சீதைக்கு வரக்கூடிய துன்பம் யாது? ஒன்றும் இருக்க முடியாது. தீவினை அறத்தை உண்மை யாக வெல்ல முடியுமோ? (முடியாது).

"செல்வமோ அது, அவர் தீமையோ இது;
அல்லினும் பகலினும் அமரர் ஆட் செய்வார்.
ஒல்லுமோ ஒருவர்க்கு ஈது? உறுகண் யாது இனி?
வெல்லுமோ தீவினை அறத்தை மெய்ம்மையால்? (72)

அறத்தைத் தீவினை வெல்லுமோ—வெல்லாது—என்பது பொது உண்மை.

சீதை இராவணனைக் கடிந்து பேசுகின்றாள்: நீ பெற்ற வாள்—வாழ் நாள்—வன்மை—வரம் முதலிய யாவும் இராமனது அம்பால் அழிந்துவிடும். விளக்கின் முன் இருள் இருக்க முடியுமா? இராமன் முன் நீ அழிவாய்!

"பெற்றுடை வாளும் நாளும்
பிறந்துடை உரனும் பின்னும்
மற்றுடை எவையும், தந்த
மலர்அயன் முதலோர் வார்த்தை
வில்தொடை இராமன் கோத்து
விடுதலும் விலக்குண்டு எல்லாம்;
சிற்றுசிடை இறுதல் மெய்யே;
விளக்கின் முன்இருள் உண்டாமோ?" (117)

விளக்கின் முன் இருள் உண்டாமோ?—இருக்க முடி யாது—என்பது பொது உண்மை.

அனுமன் சீதையிடம், காட்டில் இராமன் வருந்திக் கொண்டிருக்கும் நிலையைக் கூறுகிறான்: இராமன் மயக்கம் கொண்டு, ஐம்புலன்களும் வேறாகிச் சிவனே போல் உன்மத்தம் உடையவனாய்க் காணப்படுகிறான். கருமத்தை உலகில் கடந்துவெல்பவர் யார்? ஒருவரும் இலர்:

"கன்மத்தை ஞாலத்தவர் யாருளரே கடப்பார்?
பொன்மொய்த்த தோளான் மயல் கொண்டு புலன்கள்
நன்மத்தம் நாகத்தயல் சூடிய நம்பனேபோல் வேறாய்
உன்மத்தன் ஆனான், தனை ஒன்றும்
உணர்ந்திலாதான்" (84)

கன்மத்தை ஞாலத்தவர் யாருளரே கடப்பார்—என்பது பொது உண்மை. பாட்டில் பொது உண்மை இறுதியில் பெரும்பாலும் இருக்கும் சிறுபான்மை முதலிலும் இருக்கலாம்.

(உருக்காட்டுப் படலம்—48)

அனுமன் அசோக வனத்தை அழிப்பது பற்றிச் சினத்தோடு எண்ணிப் பார்க்கிறான்: இராவணனின் பத்துத் தலைகளையும் கலங்கச் செய்து அவனைச் சிறையிட்டு வெல்வேன்; இல்லாவிடின், எங்களைக் காத்து அடைக்கலம் தந்த இராமனுக்கு நாங்கள் என்ன நன்மை செய்தவர்களாவோம்? ஒருவர்க்கு ஒருவர் தஞ்சம் அளித்தல் என்பது என்னவாகும்?

"வஞ்சனை அரக்கனை நெருக்கி நெடு வாளால்
அஞ்சினொடு அஞ்சுதலை தோள் உற அசைத்தே
வெஞ்சிறையில் வைத்து மிலென் வென்றும் இலென்
என்றால்
தஞ்சம் ஒருவர்க்கொருவர் என்றல் தகவாமோ?"
(பொழில் சிறுத்த படலம்—3)

ஒருவர்க் கொருவர் தஞ்சம் என்றல் தகவாயிருக்க வேண்டும்—என்பது பொது உண்மை.

காவல் காக்கும் அரக்கியரிடம், சீதை முன்பு தன்னை இராவணன் ஏமாற்றி எடுத்து வந்தது பற்றிக் கூறுகிறாள்: இராவணன் மாயமானை அனுப்ப, இராமர் பின் தொடர, மாயமான் இராமன் போல் கத்த, இது அரக்கரின் மாயம் என்று இலக்குமணன் சொல்லவும் நம்பாமல், மெய்யென

நான் எண்ணி ஏமாந்தேன். தீயவரின் வஞ்சகத்தைத் தீயவரே அறிய முடியுமே தவிர; (என்போன்ற) தூயவர் அறிய முடியுமோ? —என்று கூறினாள் :

"தீயவர் தீய செய்தல் தீயவர் தெரியின் அல்லால்
தூயவர் துணிதல் உண்டோ நும் முடைச் சூழல்
எல்லாம்!
ஆய்மான் எய்த, அம்மான், இளையவன் அரக்கர்
செய்த
மாயம் என்றுரைக்கவேயும் மெய்யென மையல்
கொண்டேன்" (48)

தீயவர் தீய செய்தல்......தூயவர் துணிதல் உணடோ? என்பது பொது உண்மை.

அனுமன் அசோகவனத்தை அழித்துச் சூறையாடிய போது பல பொருள்கள் சிதைந்தன; அரக்கர் நடுங்கி அழிந்தனர்; கேடு சூழ்ந்தவர்கள் பிழைக்க முடியுமா?

"விட்டனன் இலங்கை தன்மேல்;விண் உற விரிந்தமாடம்
பட்டன பொடிகள் ஆன; பகுத்தன பாங்கு நின்ற;
சுட்டன பொறிகள் வீழத் துளங்கினர் அரக்கர் தாமும்
கெட்டனர் வீரர் அம்மா! பிழைப்ப ரோகேடு
சூழ்ந்தார்?" (54)

கேடு சூழ்ந்தார் பிழைப்பரோ? (மாட்டார்) என்பது பொது உண்மையாகும்.

அனுமனை இகழ்ந்த அக்ககுமாரனை நோக்கி அவன் தேர்ப்பாகன் இடித்துரைக்கின்றான்: ஐயனே! யான் கூறுவது கேட்க! நம் மன்னன் இராவணனை எதிர்த்து வென்றது வாலி என்னும் குரங்கினமேயாகும். எனவே, உலகியலை—உலகில் நடக்கக் கூடியதை இன்னது என்று நாம் வரையறுத்தல் முடியாது—என்று கூறுகிறான்.

''அன்னதாம் நகுசொல் கேட்ட
சாரதி, ஐய கேண்மோ!
இன்னதாம் என்னல் ஆமோ
உலகியல்? இகழல் அம்மா!
மன்னனோடு எதிர்ந்த வாலி
குரங்கு என்றால் மற்றும் உண்டோ?
சொன்னது துணிவில் கொண்டு
சேறி என்று உணரச் சொன்னான்''
(அக்ககுமாரன் வதைப் படலம்—22)

உலகியல் இன்னதாம் என்னல் ஆமோ? இன்னது என்று கூறமுடியாது—என்பது பொது உண்மை. பாட்டின் இடையிலும் பொது உண்மை இருக்கலாம். கதை மாந்தர் சொல்வதாகவும் பொது வண்மை இருக்கலாம்.

இவ்வாறு பல பாடல்களில் 'வேற்றுப் பொருள் வைப்பு' அணி அமைத்துக் கம்பர் பாடியுள்ளார்.

## தற்குறிப்பேற்ற அணி

அடுத்துத் தற்குறிப்பேற்ற அணி பற்றிக் காண்பாம். ஒரு பொருளின் நிகழ்ச்சி இயல்பாக - இயற்கையாக நிகழ, புலவன் அதை விட்டு, இன்ன காரணத்தால் இது நிகழ்கிறது என்று தானாக—தன் குறிப்பை—தனது கருத்தை ஏற்றிச் சொல்லுதல் தற்குறிப்பு அணியாகும்.

''பெயர் பொருள் அல்பொருள் என இரு பொருளினும்
இயல்பின் விளைதிறனன்றி அயலொன்று
தான் குறித்தேற்றுதல் தற்குறிப் பேற்றம்'' (56)

என்பது தண்டியலங்கார நூற்பா—இதற்கு ஓர் எடுத்துக் காட்டு விளக்கம் காண்பாம்:—

காலையில் ஞாயிறு தோன்றுகிறது—இருள் மறைகிறது- தாமரை மொக்குகள் விரிந்து மலர்கின்றன-இது இயற்கையாக நடப்பது, ஆனால் ஒரு புலவன் என்ன சொல்கிறான்:—

ஞாயிறு தோன்றி முற்றிலும் இருட்டை ஓட்டுகிறது. தாமரை மொக்குக்குள்ளே இருள் மறைந்திருக்குமோ என்று ஐயுற்று தன் கதிராகிய—ஒளியாகிய கையால், தாமரை மொக்கின் இதழைத் திறந்து பார்க்கிறது—என்று புலவன் தானாக ஒரு காரணத்தைக் குறித்து ஏற்றுகிறான். இதுதான் 'தற்குறிப் பேற்ற அணி' யாகும். இனிக் கம்பரிடம் செல்வாம்:—

அரக்கியர் சிலர் பல நாளாக இராவணனோடு உடலுறவு கொள்ளாமையால் காம வேட்கையால் வருந்து கின்றனர். காம உணர்வாகிய வெப்பம் அவர் தம் முலை கள் உட்பட்ட உடல் உறுப்புகளைச் சுடுகிறது. காதலரைப் பிரிந்த மாதர்க்கு மலர் முள்ளாகக் குத்துவதாகவும், இனிய தென்றல் காற்றும் தண்ணிய திங்களும் அனல் வீசுவதாக வும் கூறுவது இலக்கியமரபு. அதாவது, காம வேதனையின் போது, இன்பப் பொருள்கள் எல்லாம் துன்பம் தருவதாகத் தெரியுமாம். இக்கருத்தை அடிப்படையாகக் கொண்டு கம்பர் ஒரு தற்குறிப்பு ஏற்றுகிறார்:

முனிவர்களையும் தேவர்களையும் துன்புறுத்தும் இராவணன்மேல் உள்ள வெறுப்பாலும் சினத்தாலும், அவன்பால் அன்பு கொண்ட அரக்கியரைப் பகை கொண்டு வருத்த எண்ணி, குளிர்ந்த திங்கள் (சந்திரன்) அரக்கியர் களின் முலைகளைச் சுடுகின்றானாம், அதனால் அவர்கள் துடிக்கின்றார்களாம்.

''புரியும் நன்னெறி முனிவரும் புலவரும்
புகலிலாப் பொறை கூர,
எரியும் வெஞ்சினத்து இகல் அடு கொடுந்திறல்
இராவணற்கு எஞ்ஞான்றும்
பரியும் நெஞ்சினர் இவர் என அயிர்த்து ஒரு
பகைகொடு பனித் திங்கள்
சொரியும் வெங்கதிர் துணை முலைக்குவை சுடக்
கொடிகளின் துவள்கின்றார்''

(ஊர் தேடு படலம்—191.)

இது ஒரு தற்குறிப்பேற்ற அணி அமைந்த பாடலாகும். அடுத்தது: திங்கள் (நிலா) இயற்கையாக மறைகிறது. ஆனால் கம்பர் குறித்தேற்றியுள்ள காரணமாவது: இராவணன் தன்னை நோக்கி, சீதையின் மேல் உள்ள காமவேதனையால், நிலவே, நீ என்னைச் சுட்டாய்— அனுமன் பொழிலை அழிக்கப் பார்த்துக் கொண்டு வாளா இருந்தாய்—என்று தன்மேல் சினம் கொள்வான் என்று அஞ்சியவன்போல் திங்கள் மறைந்தான்:

''தொண்டையங் கனிவாய்ச் சீதை
துயக்கினால் என்னைச் சுட்டாய்
விண்ட வானவர் கண்முன்னே
விதிபொழில் இறுத்து வீசக்
கண்டனை நின்றாய் என்று,
காணுமேல் அரக்கன் காய்தல்
உண்டென வெருவினான்போல்
ஒளித்தனன் உடுவின் கோமான்''

(பொழில் இறுத்த படலம்—40)

இது கம்பரின் ஒரு தற்குறிப்பேற்றம். அடுத்தது: அணிகலன்களுக்கு அரசாகிய சூடாமணியைத் தன் உயிரான இராமனிடம் கொடுக்கும்படி சீதை அனுமனிடம் கொடுத்து விட்டதால், இப்போது ஓர் அணியும் இல்லாத வறியவளாய் உள்ளாள் எனக் கடல் இரக்கமுற்று ஒரு சூடாமணியைக் (கடல்) கொடுப்பது போலக் கடலிலிருந்து ஞாயிறு தோன்றினான்:

''உறுசுடர்ச் சூடைக்காசுக்கு
அரசினை உயிர் ஒப்பானுக்கு
அறிகுறியாக விட்டாள்,
ஆதலான் வறியள் அந்தோ!

செறிகுழல் சீதைக்கு அன்று, ஓர்
    சிகாமணி தெரிந்து வாங்கி
எறிகடல் ஈவை தென்ன
    எழுந்தனன் இரவி என்பான்''

(பொழில் இறுத்த படலம்—45)

இயற்கையாக எழுந்த ஞாயிறை, கடல் சீதைக்காகக் கொடுத்த சூடாமணியாகக் கம்பர் தற்குறிப்பேற்றம் செய்துள்ளார்.

இவ்வாறு இந்த அணியின் வாயிலாகக் கம்பர் தம் காப்பியத்திற்குச் சுவையேற்றியுள்ளார்.

ஒருவர்க்கு அழகூட்டும் அணிகலன்கள் போல் பாடலுக்கு அழகு ஊட்டுவது அணியாகும். அணியை வடமொழியில் 'அலங்காரம்' என்பர்.

மேலே கூறப்பெற்றுள்ள உவமை அணி, உருவக அணி, வேற்றுப் பொருள் வைப்பு அணி, தற்குறிப்பேற்ற அணி போன்றவை, பாடலுக்குப் பொருளால்—கருத்தால் அணி (அழகு) செய்தலின், பொருள் அணி எனப்படும். சொல்லால் —சொல் விளையாட்டால்—சொற்றொடர் விளையாட்டால் பாடலுக்கு அணி செய்பவை சொல்லணி எனப்படும். அச் சொல்லணிகளுள் 'மடக்கு அணி' என்பது ஒன்று. இதனை 'யமக' அணி என்றும் கூறுவர்.

### மடக்கு அணி

எழுத்துகளின் தொகுதியான குறிப்பிட்ட ஒரு சொல்லோ—ஒரு சொற்றொடரோ, இடையில் வேறு ஓர் எழுத்துக்கூட வராமல், தானே திரும்பத் திரும்ப மடங்கி வந்து வெவ்வேறு பொருளைத் தருமாயின் அது 'மடக்கு அணி' எனப்படும். மடங்கி மடங்கி (திரும்பத் திரும்ப) வருவதால் அது 'மடக்கு அணி' என்னும் பெயர் பெற்றது.

''எழுத்தின் கூட்டம் இடை பிறிதுஇன்றியும்
பெயர்த்தும் வேறு பொருள்தரின் மடக்கு எனும்
பெயர்த்தே'' (92)

என்பது தண்டியலங்கார நூற்பா.

அந்த மடக்கு, ஓரடிக்குள்ளேயும், ஈரடிக்குள்ளேயும் மூன்றடிக்குள்ளேயும் நான்கடிக்குள்ளேயும் பலவாறு மடங்கி வரும்.

''அதுதான்,
ஓரடி முதலா நான்கடி காறும்
சேரும் என்ப தெளிந்திசி னோரே'' (93)

என்பது தண்டியலங்கார நூற்பா. இந்த அடிப்படையுடன் கம்பரின் பாடல்களுக்கு வருவாம்-பொழில் இறுத்த படலத்தில் 31 முதல் 35 வரையுள்ள ஐந்து பாடல்களிலும் மடக்கணி உள்ளது. வருமாறு :

''பாடலம் படர்கோடும், பண்இசைப்
பாடலம் பனிவண்டோடும், பல்திரைப்
பாடலம் புயர் வேலையில் பாய்ந்தன
பாடலம் பெறப் புள்ளினம் பார்ப்பொடே'' (31)

இந்தப் பாடலில், 'பாடலம்' என்பது, நான்கு அடிகளின் தொடக்கத்திலும் திரும்பத் திரும்ப மடங்கி வந்துள்ளது. இதன் பொருளாவது :- அசோக வனத்தின் அழிவு பாடு கூறப்படுகிறது. இதைப் பின்வருமாறு பிரித்துக் கொள்ள வேண்டும்.

''பாடலம் படர் கோங்கொடும் பண்இசைப்
பாடல் அம்பனி வண்டாடும் பல்திரைப்
பாடு அலம்பு உயர்வேலையில் பாய்ந்தன
பாடு அலம்பெறப் புள் இனம் பார்ப்பொடே.

கருத்துரை : பறவை இனங்கள் தம் குஞ்சுகளுடன் பாதிரி மரம், போங்கமரம், பண்இசை பாடும் அழகிய

குளிர்ந்த வண்டுகள் ஆகியவற்றோடு, பல அலைகள் கரையை மோதி அலம்பும் பெரிய கடலுள் பாய்ந்தன.

பதவுரை:—புள் இனம்=பறவை இனங்கள்; பார்ப்பொடு=தம் குஞ்சுகளுடன், பாடலம்—பாதிரிமரம், படர்=பரந்து படர்ந்துள்ள, கோங்கொடும்=கோங்குமரம் ஆகியவற்றொடும், பண் இசை=பண்ணோடு இசையை, பாடல்=பாடுதலையுடைய, அம்=அழகிய, பனி=குளிர்ந்த, வண்டொடும்=வண்டுகளோடும், பல்திரை=பல அலைகள், பாடு=பக்கக் கரையை அலம்பும்=மோதி அலம்புகிற, உயர் வேலையில்=பெரிய கடலுள், பாய்ந்தன=பாய்ந்து புகுந்தன—என்பது பதவுரைப பொருள் இங்கே பாடலம் என்பது நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டு வெவ்வேறு பொருள் தருவதைக் காணலாம். அடுத்தது:

> "வண்டலம்புநல் ஆற்றின் மராமரம்,
> வண்டலம்புனல் ஆற்றில் மடிந்தன;
> விண்டலம் புகம் நீங்கிய வெண்புனல்,
> விண்டலம் புக நீள்மரம் வீழ்ந்ததே." (32)

இந்தப் பாடலில் 'வண்டலம்' என்பது முதல் இரண்டடிகளிலும் 'விண்டலப்பு' என்பது ஈற்று இரண்டடிகளிலும் அடி முதலில் மடங்கி வந்துள்ளன. இப்பாடலைப் பின் வருமாறு பிரித்துக் கொள்ளல் வேண்டும்:

> "வண்டு அலம்புநல் ஆற்றின் மராமரம்,
> வண்டல் அம்புனல் ஆற்றில் மடிந்தன;
> விண்டு அலம்பு கம்நீங்கிய, வெண்புனல்
> விண்தலம் புக நீள்மரம் வீழ்ந்தவே"

கருத்துரை: அனுமன் எறிந்த மரங்களுள், வழிப்பாதையிலிருந்து மரங்கள் சில வண்டல் நீர் பொருந்திய ஆற்றில் விழுந்தன. அனுமன் உயரே தூக்கியெறிந்த நீண்ட மரங்கள் விண்ணிலே புக விண்ணிலே ஓடுகின்ற நீர் சிதறி அகலும்படி செய்து (ஆகாயக்) கங்கையில் வீழ்ந்தன.

பதவுரை:— வண்டு அலம்பு=வண்டுகள் ஒலிக்கின்ற, நல் ஆற்றின்=நல்ல வழியிலே—பாதையிலே உள்ள, மரா மரம்=மராமரங்கள், வண்டல்=வண்டல் படிந்த, அம்= அழகிய, புனல்=நீரையுடைய, ஆற்றில் மடிந்தன= ஆற்றிலே(நதியிலே) வீழ்ந்தன நீள்மரம்=சில நீண்ட மரங்கள், விண்டு அலம்பு=விண்ணிலே பாய்கிற, கம்= தண்ணீர், நீங்கிய=சிதறி விலகும்படி, விண்தலம் புக= வானத்திடை செல்ல, வெண்புனல்=வெண்மையான (ஆகாயம்) கங்கையில், வீழ்ந்தன=விழுந்தன நீங்கிய என்பது இங்கே 'செய்யிய' என்னும் வாய்பாட்டு வினை யெச்சமாகும்: அடுத்து:

"தாமரைத் தடம் பொய்கை, செஞ்சந்தனம்
தாமரைத்தன ஒத்த; துகைத்தலின்,
காமரக்களி வண்டொடும் கள்ளொடும்
காமரக் கடல், பூக்கடல் கண்டவே" (33)

இப்பாடலின் தொடக்கத்தில், 'தாமரைத்த' என்பது முதல் இரண்டடிகளிலும், 'காமரக்க' என்பது பின் இரண்டடிகளிலும் மடங்கியுள்ளன. இதனைப் பின்வருமாறு பிரித்துக் கொள்ள வேண்டும்.

"தாமரைத் தடம் பொய்கை, செஞ்சந்தனம்
தாம் அரைத்தன ஒத்த; துகைத்தலின்,
காமரக்களி வண்டொடும் கள்ளொடும்
காமரக் கடல் பூக்கடல் கண்டவே"

கருத்துரை: அனுமன் பலவகை மரங்களை அங்கும் இங்கும் வீசியதால், பெரிய தாமரைத் தடாகங்கள் சிவந்த சந்தனத்தை அரைத்துக் கரைத்து வைத்தாற்போல் தோன்றின. சோலைகள் காமரம் என்னும் பண்பாடும் வண்டுகளோடும் தேனோடும் மரக்கலம் மிதக்கும் கடலில் கலந்து, தண்ணீர்க் கடலைப் பூக்கடலாகச் செய்தன.

பதவுரை:— துகைத்தலின்= (அனுமன் பல மரங்களை) வீசி எறிந்ததால், தடம்=பெரிய, தாமரைப் பொய்கை= தாமரைத் தடாகங்கள், செஞ்சந்தனம்= சிவந்த சந்தனச் சாந்தை, தாம் அரைத்தன ஒத்த=தாம் அரைத்துக் கரைத்துக் கொண்டன போல் காணப்பட்டன. கா=சோலைகள், காமரம்= காமரம் என்னும் பண்பாடுகின்ற, களி=மதுவுண்டு களித்த, வண்டொடும்=வண்டுகளோடும், கள்ளொடும்= தேன் கூட்டொடும் சேர்ந்து, மரக்கடல்= மரக்கலம் மிதக்கும் கடலை, பூக்கடல் கண்ட= மலர்க் கடலாகச் செய்தன. அடுத்த பாடல்:—

''சிந்து வாரம் திசைதொறும் சென்றன,
சிந்து வாரம் புரைதிரை சேர்ந்தன;
தந்து வாரம் புதவொடு தாள் அற,
தந்து வாரம் துகள்படச் சாய்ந்தவே''— (34)

இப்பாடலில், 'சிந்து வாரம்' என்பது முதல் இரண்டடிகளின் தொடக்கத்திலும், 'தந்து வாரம்' என்பது ஈற்று இரண்டடிகளின் தொடக்கத்திலும் மடங்கி வந்துள்ளன. இதனைப் பின்வருமாறு பிரித்துக் கொள்ளல் வேண்டும்:—

''சிந்து வாரம் திசைதொறும் சென்றன,
சிந்து வார் அம்புரை திரை சேர்ந்தன;
தந்து வாரம் புதவொடு தாள் அற,
தம் துவாரம் துகள்படச் சாய்ந்தவே''

கருத்துரை: நொச்சி மரங்கள் சில, திசைகள் தோறும் சென்று கடல் அலைகளை அடைந்தன; சில மரங்கள், மனைகளின் வாயில் கதவுகளும் தாழ்ப்பாள்களும் துளைப் பகுதிகளும் தூளாகும்படி வந்து வீழ்ந்தன.

பதவுரை: சிந்து வாரம்= (சில) நொச்சி மரங்கள், திசை தொறும் சென்றன= எல்லாப் பக்கங்களிலும் சென்றன, (சில மரங்கள்) சிந்து= கடலின், வார்=நீண்ட, அம்= அழகிய, புரை= உயர்ந்து எழுதலையுடைய, திரை

சேர்ந்தன = அலைகளை அடைந்தன. தந்து = (சில மரங்கள்) வீசப்பட்டு, வாரம் = (வீட்டு) வாயிலின், புதவொடு = கதவுகளோடு, தாள் அற = தாழ்ப்பாள்கள் அற்று விழும்படியும், தம் துவாரம் = அவற்றின் துளைப் பகுதி, துகள்பட = தூளாகும்படியும், சாய்ந்த = வந்து விழுந்தன. அடுத்தது:

"நந்த வானத்து நாள் மலர் நாறின,
நந்த வானத்து நாள் மலர் நாறின;
சிந்து வானந் திரிந்துகச் செம்மணி
சிந்து வானந் திரிந்த திரைக்கடல்" (35)

மற்ற நான்கு பாடல்களிலும் இப்பாடலில் கம்பர் மடக்கைச் சிறிது மிடுக்கு செய்துள்ளார். 'நந்தவானத்து நாள் மலர் நாறின'—என்னும் முழு அடியும் அடுத்த—இரண்டாம் அடியாக மடங்கி வந்துள்ளது. 'சித்து வானந் திரிந்து' என்பது, பின் இரண்டடிகளின் தொடக்கத்தில் மடங்கியுள்ளன. இனி இப்பாடலைப் பின் வருமாறு பிரித்து அமைத்துப் பொருள் கொள்ளவேண்டும் :

"நந்த வானத்து நாள் மலர் நாறின,
நந்த, வானத்து நாள் மலர் நாறின;
சிந்து அ(வ்)வானம் திரிந்து உக, செம்மணி
சிந்த, வால் நந்து சிரித்த திரைக்கடல்"

கருத்துரை : அனுமன் சிதைத்ததால் நந்தவனத்தில்—பூந்தோட்டத்தில் இருந்த மலர்கள் விரிந்து மணம் வீசின—விண்ணிலே உள்ள ஒளிமலர்கள் (விண்மீன்கள்) மிகவும் விளங்கின. புளியமரங்கள் கடலில் உள்ள அலைகளின் மேல் சுழன்று விழ, வெண்மையான சங்குகள் செம்மையான (சிறந்த) முத்து மணிகள் சிதறும்படி அஞ்சியோடின.

பதவுரை : நந்த வ(ா)னத்து = பூந்தோட்டத்திலுள்ள. நாள் மலர் = அன்று பூத்த மலர்கள், நாறின = மணம் வீசின; வானத்து = விண்ணிலே உள்ள, நாள் மலர் = ஒளி

மலர்களாகிய விண்மீன்கள், நந்த=மிகவும், நாறின=ஒளி வீசின. சிந்து—புளிய மரங்கள், திரைக்கடல்=அலையும் கடலில் உள்ள, வானம்=நீரலைமேல், திரிந்து உக= சுழன்று விழ, வால் நந்து=வெண்மையான சங்குகள், செம் மணி=செம்மையான (சிறந்த) முத்து மணிகள், சிந்த= சிந்தி விழும்படி, இரிந்த=அஞ்சியோடின.

மேற் கூறிய ஐந்து பாடல்களிலும், கம்பர், மடக்கு அணி அமைத்துச் சொல் விளையாட்டு புரிந்து ஒரு வகை யான சுவை பயக்கச் செய்துள்ளார்.

### ஒப்புவினை புணர்ப்பு அணி

தண்டியலங்காரத்தில் குண அணிகள் என்னும் பிரிவைச் சார்ந்த சில அணிகள் அறிமுகப்படுத்தப்பட் டுள்ளன. அவற்றுள் 'சமாதி' என்பது ஓர் அணியாகும். விளக்கம் வருமாறு :—

ஞாயிறு விண்ணில் உள்ள இருளைக் குடித்து ஒளியைக் கக்கி எழுகின்றதாம். இந்தக் கருத்து, 'பெரும்பாண் ஆற்றுப்படை' என்னும் நூலின் முதல் இரண்டடிகளில் சொல்லப்பட்டுள்ளது :—

"அகலிரு விசும்பின் பாயிருள் பருகிப்
பகல்கான்று எழுதரு பல்கதிர்ப் பருதி"—

என்பது பாடல் பகுதி. பருகி=குடித்து; கான்று=கக்கி. பருகுதலும் கக்குதலும் உயர்திணைப் பொருள்களின் வினைகள் (செயல்கள்) ஞாயிறு எதையும் பருகுவதோ கக்கு வதோ செய்வதில்லை. இங்கே, உயர்திணைப் பொருள் களுக்கு உரியனவாகக் கூறாமல், அவை போன்று-அவற்றை ஒப்பி (ஒத்து)யுள்ள வேறொரு பொருளுக்கு உரிய வினை களாக அவை கூறப்பட்டுள்ளன. இவ்வாறு உரிய பொருள் மேல் கூறாது, ஒப்புடைப் பொருள் மேல் வினையைப் (செயலைப்) புணர்த்து (சேர்த்து) உரைப்பது சமாதி அணி யாகும்:

"உரிய பொருளன்றி ஒப்புடைப் பொருள் மேல்
தரும்வினை புணர்ப்பது சமாதியாகும்." (25)
என்பது தண்டியலங்கார நூற்பா—

பெரும்பாலும் வினை அவ்வாறு புணர்த்துச் சொல்லப்படும், சிறு பான்மை பெயர்ச்சொல்லும் அவ்வாறு சொல்லப்படுவது உண்டு: கன்னி எயில், குமரிஞாழல்—என்பனவற்றை எடுத்துக் கொள்ளலாம். எயில்=மதில். ஞாழல்= ஒரு மரம். புதிய மதில் கன்னி எயில் எனவும் இளமரம் குமரிஞாழல் எனவும் சொல்லப்பட்டுள்ளன. கன்னி, குமரி என்பன உயிர் உள்ள பொருள்கட்கும் உயர்திணைப் பொருள்கட்கும் உரியன, ஆனால், உயிரற்ற மதில் கன்னி என்றும், மரமாகிய அஃறிணைப் பொருள் குமரி என்றும் அடைமொழி கொடுக்கப்பட்டுள்ளன. இவ்வாறு பெயர்ச் சொற்களும் சில இடங்களில் அமைவது உண்டு. ஒப்புப் பொருள் மேல் வினைபுணர்ப்பதால், சமாதி அணிக்கு, 'ஒப்பு வினைப்புணர்ப்பு அணி' என்னும் பெயர் தமிழில் தரப்பெற்றது. இனி, இதை அடிப்படையாகக் கொணடு கம்பரிடம் செல்வோம்:—

அனுமன் கடலைத் தாண்ட மயேந்திர மலையினின்றும் உந்தி எழுந்ததும், மரங்கள்—குன்றுகள் முதலியனவும் தாமும் பாய்வதுபோல் விண்நோக்கிச் சென்றன:—

"தாமும் பாய்வன என்ன வானம் படர்ந்தன" (1—16)

உயிருள்ள பொருள்களின் வினையாகிய 'பாய்தல்' என்பது, உயிரற்ற பொருள்களின் மேலும் புணர்க்கப்பட்டுள்ளதால் இது ஒப்புவினைப் புணர்ப்பு (சமாதி) அணியாகும். (1 என்பது படல எண்; 16 என்பது பாடல். எண் ஆகும்.)

ஆதி சேடனது நஞ்சு உலகத்தைச் சாப்பிட்டுப் புகை யோடு எழுந்ததுபோல் இலங்கையில் இருள் சூழ்ந்திருந்த தாம்: "பாய்விடம், உணங்கலில் உலகெலாம் முறையின் உண்டு வந்து புகையொடும் எழுந்ததென்னவே" (2—43). விடம்=நஞ்சு. உயிருள்ள பொருள்கள்போல் நஞ்சு உண்பது (சாப்பிடுவது இல்லை).

வழியை இருள் தந்ததாம். "வெவ்வழி இருள்தர" (2—45) தருதல் இருளின் வினையன்று.

நந்தவனங்கள் கலங்கி நடுங்கினவாம்: 'நந்தவனங்கள் கலங்கி நடுங்கவே' (6—26) பூந்தோட்டம் கலங்குதலோ—நடுங்குதலோ இல்லை.

சம்புமாலி போர்க்கு வர, தேவர்களை அச்சம் சுற்றிக் கொண்டதாம்: "அமரரை அச்சம் சுற்ற" (8-14). அச்சம் உயிர்ப் பொருள் போல் எதையும் சுற்றுவதில்லை.

இலங்கையில் மணியும் பொன்னும் இருளைக் கிழித்து நீக்கினவாம்: "மணியும் பொன்னும் விசும்பு இருள் கிழித்து நீக்கும்"—(8—16) மணியும் பொன்னும் எதையும் தாமாகக் கிழிப்பதில்லை—இருளும் கிழிவது இல்லை.

அரக்கர் நெஞ்சில் அச்சம் குடி புகுந்ததாம்: 'அரக்கர் நெஞ்சில் குடிபுக அச்சம்' (8—17). அச்சம் புது மனை புகு விழா (குடி புகல்) நடத்துவதில்லை.

அக்ககுமாரன் அனுமன்மேல் எய்த அம்புகள் வாயி லிருந்து நெருப்பை உமிழ்ந்தனவாம்: 'எய்தான் வாளிகள், எரிவாய் உமிழ்வன'-(10—33) அம்பு வாயிலிருந்து நெருப்பை உமிழ்வதில்லை. மிகவும் கடுமையாயிருந்தன என்பதை இவ்வாறு சுட்டியுள்ளார்.

அனுமன் இலங்கையை எரியூட்டிய போது, மரங்கள், ஊழிக் கால நெருப்பு (கனல்) பருகுகின்ற (குடிக்கிற) மகர வேலையைப் போல் வெந்தனவாம்: 'பகரும் ஊழியின் கால வெங் கடுங் கனல் பருகும் மகர வேலையின் வெந்தன.'' 13—23) கனல் பருகுவது—குடிப்பது இல்லை.

தீச்சுடர் உலகை விழுங்கிற்றாம்: ''கொழுஞ் சுடர் உலகெலாம் விழுங்கி'' (13—24) விழுங்குவது சுடரின் வினையன்று.

இராவணன் மனையில் பற்றிய நெருப்பு, ஆங்கிருந்த நீர் முழுதும் வற்றும்படி பருகியதாம்—குடித்ததாம். ''உயர்தீ....நீரை வற்றிடப் பருகி'' (13—32) நெருப்பு எதை யும் பருகுவது இல்லை.

ஊழிக்கனல் உலகை உண்ணுமாம்—சாப்பிடுமாம்! 'ஊழி வெங்கனல் உண்டிட' (13—35)-கனல் உண்ணுவ தில்லை.

நெருப்பு பருகுவது மீண்டும் சொல்லப்பட்டுள்ளது. 'தின்று சுற்று எரி பருகிட' (13—36)

'இலங்கை எரியூட்டுப் படலத்தில்' நெருப்பு பருகுதலும் உண்ணுதலும் சொல்லப்பட்டிருப்பதில் வியப்பு இல்லை.

திருவடி தொழுத படலத்தில்—ஒரு பாடலில், ஒப்பு வினைபுணர்ப்பு (சமாதி) அணி, மிகவும் சுவையுற அமைந்துள்ளது.

இலங்கையிலிருந்து மீண்டு வானரர்களை அடைந்த அனுமன், தான் இலங்கையில் போர் புரிந்து வென்றமையை தற்பெருமை கூறுகிறான் என்று எண்ணுவரெனக் கருதிச் சொல்லாமல் இருந்தான். ஆனால், வானரர்கள் அறிந்து கொண்டார்களாம். அனுமன் போர் புரிந்துள்ளான் என்பதை அவன்மேல் உள்ள புண்களே சொன்னவாம்; அனுமன் வெற்றி பெற்றுள்ளான் என்பதை, அவன் உயிருடன் மீண்டு வந்தமையே உரைத்ததாம்; அனுமன் இலங்கையைத் தீயிட்டு அழித்து வந்திருக்கிறான் என்பதைத் தென் திசையில் தெரியும் புகையே ஓதிற்றாம்; அரக்கர்களின் வலிமையைச் சீதை மீண்டு வராமையே காட்டிற்றாம் இவ்வாறு குறிப்பினாலேயே வானரர்கள் தெரிந்து கொண்டனராம். பாடல் வருமாறு:

''பொருதமை புண்ணே சொல்ல, வென்றமை
போந்த தன்மை
உரைசெய, ஊர் தீயிட்டது ஓங்கிடும்
புகையே ஓதர,
கருதலர் பெருமைதேவி மீண்டிலாச்
செயலே காட்டத்
தெரிதர உணர்ந்தோம்; பின்னர் என்இனிச்
செய்தும் என்றார்.'' (10)

இப்பாடலில், புண் சொல்லியதாகவும், போந்த தன்மை உரைத்ததாகவும், புகை ஓதியதாகவும், மீண்டிலாச் செயல் காட்டியதாகவும் அறிவிக்கப்பட்டுள்ளன. சொல்லுதலும் உரைத்தலும் ஓதுதலும் காட்டுதலும் இவற்றின் செயல்கள் அல்ல. உரிய பொருள் இன்றி ஒப்புடைப் பொருள்கள்மேல் வினைகள் புணர்த்துச் சொல்லப்பட்டுள்ளன. மேலுள்ள தொடர்களிலும் இவ்வாறே கூறப்பட்டுள்ளன. இவை, காப்பியத்திற்குச் சுவை பயக்கும் சிறப்பான கூறாகும்.



## இந்நூலுக்குக் கருத்து வழங்கிய கருவூல நூல்கள்:

குறிப்பு: கீழே, முதலில் இந்நூலின் பக்க எண்ணும் அடுத்து மேற்கோள் நூலின் பெயரும் உட்பிரிவும், மூன்றாவதாக ஆசிரியர் பெயரும் அமைந்துள்ளன.)

| பக்க எண் | நூல் பெயர்—பிரிவு | ஆசிரியர் |
|---|---|---|
| 9 | மலரும் மாலையும்—பசு | கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை |
| 11 | அகநானூறு—42:5-12 | கபிலர் |
| 18 | புரபுலிங்க லீலை—கைலாச கதி-4 | சிவப்பிரகாச அடிகளார் |
| 24 | பாரதக் கதைகள் | |
| 31 to 37 | பல புராணக்கதைகள் | |
| 29 | சிறுபாணாற்றுப்படை—119 | இடைக்கழி நாட்டுநல்லூர் |
| 29 | ,, நச்சினார்க்கினியர் உரை | நத்தத்தனார் |
| 32 | நரசிங்க புராணம் | |
| 49 | கம்ப ராமாயணம்—ஆரணிய காண்டம் சூர்ப்பணகைப் படலம்—32, 42, 43 | கம்பர் |
| 39 | சேந்தன் திவாகரம்—விலங்கினப் பெயர்த் தொகுதி | திவாகரர் |
| 44 | சிலப்பதிகாரம்—5:102 | இளங்கோவடிகள் |
| 44 | மணிமேகலை—1:61 | சீத்தலைச்சாத்தனார் |
| 44 | திருவாசகம்—திருச்சதகம்—49 | மாணிக்கவாசகர் |
| 53 | திருவேங்கடத்தந்தாதி—34 | பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் |
| 54 | திருவாசகம்—திருவண்டப்பகுதி—1, 2 | |

| | | |
|---|---|---|
| 59 | தனிப்பாடல் திரட்டுப்பாடல் | |
| 58 | பிங்கல நிகண்டு—தெய்வப் பெயர்த் தொகுதி | பிங்கலர் |
| 57 | சூடாமணி நிகண்டு-தேவர் பெயர்த் தொகுதி—58—59 | மண்டலபுருடர் |
| 62 | தொல்காப்பியம்—புறத்திணையியல்—12 | தொல்காப்பியர் |
| 62 | ,, நச்சினார்க்கினியர் உரை | |
| 62 | புறநானூறு—203:9-11 | ஊன் பொதி பசுங்குடையார் |
| 63 | ,, 42 : 21-24 | கோவூர் கிழார் |
| 63 | மதுரைக் காஞ்சி—145-146 | மாங்குடி மருதனார் |
| 63 | ,, நச்சினார்க்கினியர் உரை | |
| 68, 69 | Ode on A Grecian Urm—1, 2, 3, | Johm keats. |
| 73 | திருக்குறள்—220 | திருவள்ளுவர் |
| 74 | மணிமேகலை—மணிமேகலா தெய்வம் வந்து தோன்றிய காதை—109, 119-121 | சீத்தலைச்சாத்தனார் |
| 74 | பரிபாடல்—13:7, 9 | நல்லெழுநியார் |
| 75 | சிலப்பதிகாரம்—காடு காண் காதை | இளங்கோவடிகள் |
| 77 | திருக்குறள்—10 | |
| 78 | பட்டினப்பாலை—99, 100 | கடியலூர் உருத்திரங் கண்ணனார் |
| 79 | மணிமேகலை—பளிக்கறை புக்ககாதை—3-6 | |
| 81 | பெரிய புராணம்—வெள்ளானைச் சருக்கம் | சேக்கிழார் |

| 87 | அருட்பா | இராமலிங்க வள்ளலார் |
|---|---|---|
| 87 | தாயுமானவர் பாடல்—பராபரக்கண்ணி | தாயுமானவர் |
| 87 | திருக்குறள்—399 | |
| 88 | திருக்குறள்—402 | |
| 93 | புறநானூறு—9:1-6 | நெட்டிமையார் |
| 94 | ,, 189-1, 2 | நக்கீரர் |
| 95 | கம்பராமாயணம்—அயோத்தியா காண்டம்—52 | கம்பர் |
| 105 | திருக்குறள்—700 | திருவள்ளுவர் |
| 106 | திருக்குறள்—969 | ,, |
| 107 | தொல்காப்பிய நூற்பாக்கள் பல—47, 199, 230, 246, 271, 323, 465 | தொல்காப்பியர் |
| 107 | தொல்காப்பியம்—அகத்திணையியல்—44 | |
| 107 | ,, இளம்பூரணர் உரை | |
| 108 | ,, நச்சினார்க்கினியர் உரை | |
| 110, 111 | திருக்குறள்—77, 72 | |
| 120 | சூடாமணி நிகண்டு—பதினோராம் தொகுதி—1 | மண்டல புருடர் |
| 128 | திருவாசகம்—திருவெம்பாவை—9:1 | மாணிக்கவாசகர் |
| 139 | திருக்குறள்—773 | |

| | | |
|---|---|---|
| 180 | சிலப்பதிகாரம்—நாடு காண் காதை—38—43 | இளங்கோவடிகள் |
| 195 | கோவலன் நாடக நாட்டுப் பாடல் | |
| 196 | சிலப்பதிகாரம்—ஆய்ச்சியர் குரவை—<br>உரைப்பாட்டு மடை | இளங்கோவடிகள் |
| 195 | ,, கொலைக் களக் காதை—98—107 | ,, |
| 205,207 | தொல்காப்பியம்—மெய்ப் பாட்டியல்—3,5 | |
| 206 | ,, பேராசிரியர் உரை—மெய்ப்பாட்டியல்—1 | |
| 213 | தொல்காப்பியம்—உரியியல்—76 | |
| 231 | திருக்குறள்—22 | |
| 232,238<br>242,248 | தண்டியலங்காரம்—47, 56, 92, 93, 25 | தண்டியாசிரியர் |
| 247 | பெரும்பாணாற்றுப் படை—1, 2— | கடியலூர் உருத்திரங்கண்ணனார் |

□ □ □

